# கதவு எண் - 43, ரயில்வே பீடர் ரோடு

( சிறுகதைகள் )

எஸ். ரமேஷ்
ஸ்ரீவில்லிபுத்தூர்











Shakespeare's Desk

*Details About the Book.....*


1. Title of the Book : ***Kadhavu enn – 43 Railway Feeder Road* (Tamil Short stories)**
2. Name of the Author : **S. Ramesh**
3. Content of the Book : Fiction –A Collection of Short stories
4. Nature of the Book : Original work by the author
5. Language of the Book : Tamil
6. Author's Address : **S. Ramesh**
   **No. 33, South Car Street,**
   **Srivilliputtur – Pin.626125.**
   **Virudhunagar District**
   **Tamil Nadu.**
   **Cell : 87542 24076**
   **94873 67414**
   **E-mail** : **rameshzillion@hotmail.com**
7. Name of the Publisher : **Shakespeare's Desk**
   **No. 33, South Car Street,**
   **Srivilliputtur – Pin.626 125.**
   **Virudhunagar District**
   **Tamil Nadu.**
   **Cell : 87542 24076**
   **94873 67414**
   **E-mail** : **rameshzillion@hotmail.com**
8. Year of publication : 2016



10. Price : Rs. 150/-

# கூடுதல் நேசமும், கூடுதல் விழிப்புணர்வும் தரும் கதைகள்

சிறுகதை உள்ளிட்ட இலக்கிய வாசிப்பு, இணைய தள உலகிலும் அவசியமா? அல்லது சாத்தியமா என்றெல்லாம் கேள்விகள் எழும் காலம் இது. நீண்ட கதைகளை பெரிய நாவல்களை வாசிக்க அவகாசம் இல்லை, என்பது பலரது வாக்குமூலமாக இருக்கலாம். இருபது-முப்பது பக்கக்கதைகள், ஒரு பக்கக்கதைகளாகலாம். ஒரு வரியில் கூட கதையாகலாம். புத்தகங்கள் அநேகமாக தம் ஆக்கிரமிப்பை விலக்கி, இணைய வெளிக்கு இடம் தரலாம். ஆனால், எழுத்தும், வாசிப்பும் எப்போதும் அவசியம். ஒரு சிறுகதையை வாசிக்கும் போது, உங்களைச்சுற்றியுள்ள உலகினை சற்றுக்கூடுதலாக உணர்ந்து கொள்கிறீர்கள். மற்றும் சற்றுக்கூடுதலாக நேசிக்கின்றீர்கள். (ஜார்ஜ் ஸாண்டர்ஸ்)

சிறுகதையாசிரியரும், மொழிபெயர்ப்பாளரும், ஆவணச் சேகரிப்பாளருமான திரு. எஸ். ரமேஷின் **கதவு எண் 43, ரயில்வே பீடர் ரோடு** – சிறுகதைத்தொகுப்பு, அதன் வாசகனைச்சற்றுக்கூடுதலாக உணர்ந்து கொள்ள வைக்கும். சற்றுக்கூடுதலாக நேசிக்க வைக்கும்.

எட்டு கதைகளுடைய இத்தொகுப்பில், தலைப்புக்கதை, **கதவு எண் 43, ரயில்வே பீடர் ரோடு,** 18 குடும்பங்கள் வசிக்கும் ஒரு வீட்டு வளைவை மையமிட்டு, விருதுநகரின் பின்புலத்தில் ஒரு கால கட்டத்தை விவரிக்கிறது.

நடுத்தரக்குடும்பங்களில் ஆண்கள் வேலைக்குப்போய்விட, பெண்களும், பிள்ளைகளும் சினிமாவைச்சார்ந்தே தம் நேரத்தைக்கழிக்கின்ற போக்கை நகைச்சுவையுடன் முன் வைக்கிறது. வீட்டு உரிமையாளர் என்பவர், வாடகை வசூலிப்பது தவிர்த்து, வேறெந்த பொறுப்பையும் நிறைவேற்றாதவர் என்று வரையறுப்பது போல ஒரு வேடிக்கை விளாசல், இந்தக்கதையில் இடம் பெறும்.

வீட்டில் குடியிருப்போர் புகார் தெரிவிக்கின்ற வழக்கமான விஷயங்களான, சுவருக்கு வெள்ளையடித்துத்தருவது, இடிந்த சுவர்ப்பகுதிகளைப்பூசுவது, சாக்கடை வாறுகால் அடைத்திருப்பது போன்ற ஐ.நா. சபையால் கூட தீர்வு காணப்பட முடியாத விஷயங்களை எல்லாம், எவ்வளவு தான் அவரது காதுகளில் படும்படி

எடுத்துரைத்தாலும், இடித்துரைத்தாலும் அந்தச்செட்டியாரின் அபிமானத்துக்குரிய பூவையாவின் காதில் ஏறவே ஏறாது. ஏனெனில், அவருக்குக்காதுக்குள்ளேயும் புசுபுசுவென முடி முளைத்திருந்தது. அத்தோடு, தன் சொத்து விவரங்களுக்கு ஒரு சரியான காரியஸ்தரை நியமித்த போது, சின்ன செட்டியார் எனப்பட்ட கயி.ச.ச.கு. பாலகிருஷ்ணன் அவர்கள், ஒரு வெகு சுத்தமான டமாரச்செவிடாகிய பூவையாவை அந்தப்பணிக்கு நியமித்தது, அவரது புத்தி சாதுர்யத்தைக்காட்டுகிறது.

**பாடு, விட்டம்** என்னும் கதைகள் விவசாயம் சார்ந்து சொல்லப்படுபவை. கரும்பு வெட்டி, வெல்லம் தயாரிப்பதும், வெல்லத்தை வியாபாரிக்கு விற்பதுமான நடவடிக்கைகளில் எவ்வளவு பாடுபட வேண்டியிருக்கிறது! இத்தனை பாடுபட்டும், வியாபாரியால் சுரண்டப்பட்டு, மேலும் ஓட்டாண்டியாக்கப்படுவதுமான வாழக்கையை விவரிப்பவை.

வெல்லம் காய்ச்சும் தொழில், பள்ளியில் படிக்கும் குழந்தைகள் உள்ளிட்ட குடும்பத்தினர் அனைவருமே உழைக்க வேண்டியுள்ளது. அது போதாது, அப்போது மழை பெய்யாது, இயற்கை ஒத்துழைக்க வேண்டும். நல்ல விலை கிடைக்க வியாபாரி மனசு வைக்க வேண்டும்!

கணவனிடமிருந்து வந்து வாழாவெட்டியாக உள்ள மகளும், இந்த வேலையில் தான். ஏற்கெனவே, காச நோய் வேறு… இப்படி ஒரு வேளாண் தொழில் சாார்ந்து ஈடுபடுவோரது வாழ்க்கை, கயிற்றில் நடக்கும் கழைக்கூத்தாடியின் சாகசமாகி விடுகிறது.

சரி, விவசாயம் சாராமல், வியாபாரம் இல்லாமல் அலுவலக வேலைக்குப்போகாமல் பிழைப்பை நடத்த முடியுமா? அப்படியான வாழ்க்கையைத்தெரிவு செய்திருப்பவர்கள் தான் **தர்மம்** கதையின் ராமர்-சீதை-அனுமார் வேடம் தரித்துப்பிச்சை எடுத்துப் பிழைக்கும் விளிம்பு நிலையினர்.

நாளெல்லாம் வெயிலில் அலைந்து, திரிந்து, பட்டினியால் குமைந்து, தாங்கிக் கொள்ள முடியாத வருத்தம் மேலிடுகையில், வயதான மூதாட்டி ஒருத்தி, ஐம்பது ரூபாயைத்தரும் போது, அவ்வளவு ஆறுதலை அடைகின்றார்கள் இவர்கள். தர்மம் செய்யும்

அம்மூதாட்டியையும், அவள் வாழும் சூழலையும் நுட்பமாகப்பதிவு செய்கிறார் ஆசிரியர்.

கண்களுக்கு மேலே உள்ளங்கையால் குடை விரிக்கும் கிழவி, அம்மூவரையும் பார்த்துப்பார்த்து ஆசை தீர கண்களுக்குள் விழுங்குகிறாள். மூதாட்டியின் கண்களில் ஒளியேறுகிறது. தன் உள்ளத்தில் சந்தோஷம் ஊற்றெடுக்க, ராம, சீதை, அனுமாரைப்பார்த்தவள், தன் உள்ளங்கையை விரித்து, அதற்குள் இருந்த கசங்கிய ரூபாய் நோட்டைப்போட்டு விட்டு, திரும்பிப்படியேறுகிறாள். கதவு மீண்டும் சாத்தப்படுகிறது. கிழவி, இருளுக்குள் பைய ஊர்ந்து சென்று விடுகிறாள்.

கதையில் வரும் அடுத்த திருப்பம் தான் முக்கியமானது. இவ்வேடதாரிகள், அப்போது ஒரு இஸ்லாமியப்பக்கிரியைப்பார்க்க நேர்கிறது. ஆண்டாள் கோவிலருகே உள்ள நாலு கால் பெருமாள் மண்டப முகப்பின், புங்க மர நிழலில், எலும்புக்கூட்டுக்குத்துணி போர்த்தியது போலக்காணப்படுகிறார். மனசுக்குள் ஆச்சரியம் சிறகுகள் விரிக்க, தன்னை ராம, சீதை, அனுமார் கரிசனத்தோடு ஒரு நிலைத்த பார்வை பார்க்க, அந்தப்பார்வைகளின் புதிருக்கு அர்த்தம் தேடுகிறார், மூன்று நாள் பட்டினியில் வாடும் கிழவர் சையது பாவா சாகிபுவிடம், ராமர் அந்த ஐம்பது ரூபாய்த்தாளை தந்து விட்டுக்கிளம்புகிறார்!

சமூகத்தின் தயவில் வாழ வேண்டிய நிர்ப்பந்தத்திலும், இன்னொரு உயிருக்குப்பால் வார்ப்பதான, ஒரு அருஞ்செயலை எப்படி வார்த்தைகளில் விவரிப்பது…!!

**யோவ் முதலாளி உனக்கென்ன பென்சனா தரப்போறாரு?** மற்றும் **பாலிடெக்னிக்** என்னும் இரு கதைகள் கல்வி வளாகம் சார்ந்த பகடிகள், நையாண்டிகள். அடிமைகளெனப்பணியாற்றும் தனியார் கல்வி நிறுவன ஆசிரியர்களைக்கோட் சொல்லி, காட்டிக்கொடுத்து செல்வாக்குச்சேர்க்கும் சக ஆசிரியர் ஒருவரை நடைச்சித்திரமாக்குகிறது முதல் கதை. இரண்டாவது கதை, எடுபிடி வேலைக்கு வரும் பெண்களைச்சீரழிக்கும் ஒரு பணியாளரைத்தோலுரித்துக்காட்டுகிறது.

**முருகு** என்னும் தலைப்பிலுள்ள இரு கதைகள், நாடகக்கலைஞர்களைப் பற்றியவை. நாடகக்கலைஞர்களின் அந்தரங்க

வாழ்க்கை, அரிதாரமிழந்து விடும் தருணத்தில், பொலிவிழந்த சோகமாகி விடுவதை முதல் **முருகு** சொல்லும். இரண்டாவது **முருகு**வின் களம், சற்று நாசூக்கானது. 25 ஆண்டுகளாக பிள்ளை இல்லாத பெத்தனாட்சி, முருகனாக நடிக்கும் நாடக நடிகனுடன் கூடினால், பிள்ளைப்பேறு வாய்க்கும் என்னும் நம்பிக்கை கொள்வதன் மீதமைந்திருப்பது. அக்கூடல் முடிந்ததும், அந்த நடிகன் அவ்வூர்ப்பக்கம் திரும்பலாகாது.

இப்படியான விஷயத்தையெல்லாம் எழுத்தாளன் எழுத வேண்டுமா? சமூகத்தைக் கட்டிக்காப்பதற்காக காவலர்கள் கிளம்பி வந்து, எழுத்தைத்தணிக்கை செய்து கொண்டிருக்கும் சூழலில், இதனை எப்படிப்புரிந்து கொள்வது!

நம் சமூகத்தில், நம் மரபில், இப்படி ஆயிரம் விஷயங்கள் இருந்தன. இருக்கின்றன. அவை இலைமறை காய் மறையாக இருந்து வந்துள்ளன. இவற்றை எழுத்தாளன் வாசகன் முன் வைக்கக்காரணம், பாலியல் ரீதியில், உளவியல் ஆய்வுகள் சொல்லாத விஷயங்கள் கூட, சமூகத்தின் நடைமுறையில் இருப்பதன் அரிதான தன்மையினையும், அதிசயத்தன்மையினையும் உணர்த்தவே. இதை ஏற்பதும், கைவிடுவதும், சமூகத்தின் பொறுப்புத்தான். இது தவறு, சரியல்ல எனச்சமூகம் நிந்திக்கத்தொடங்கினால், அதுவே அதனைக்கை விட்டு விடும்.

குழந்தைப்பேறு இல்லாது போவது, கணவன் - மனைவி இருவரில், ஒருவருக்கு/ இருவருக்கும் உடல் ரீதியான பிரச்சனையால் தான். ஆனால், பிள்ளைப்பேறு வாய்க்காத தம்பதியரை, குறிப்பாகப்பெண்ணை இச்சமூகம் பழித்து விடுகிறது. இப்படியான பழிப்பிலிருந்து விடுபட, மேலே கண்ட உபாயத்தைச்சொல்லி வருவதும் இச்சமூகம் தான். நாலு பேர் கொண்டது ஒரு சமூகம். அது தான் இப்படியெல்லாம் செய்கிறது. ஆக, பிரச்சனையின் வேர் சமூகத்தில். குழந்தையின்மைக்குச்சரியான தீர்வு மருத்துவம் என்று சொல்லாது, நம்பிக்கைகளைப் பின்பற்றுமாறு, சடங்குகளைச்செய்யுமாறு வற்புறுத்துகின்றது இச்சமூகம்.

அடிப்படைவாதிகளும், சனாதனிகளும் கூக்குரல் போடுவது போல, இது சமூகத்தை இழிவுபடுத்துவதில்லை. சமூகத்திற்குச்சில

விஷயங்களை உணர்த்தும் கடமை, தனக்கு இருக்கின்றது என்றெண்ணும் எழுத்தாளனின் நடவடிக்கை இது. தன்னை உருவாக்கிய சமூகத்திற்கு, தான் செலுத்தும் நன்றிக்கடன். அவனது செயல்பாடு.

தனி மனித சுதந்திரத்திலிருந்து அந்தரங்க வாழ்வு வரை தலையிட்டு, அனைத்தையும் அவஸ்தையாக மாற்றிக்கொண்டிருக்கும் அடிப்படைவாதிகள் தான் இன்றைய பிரச்னையே ஒழிய, எழுத்தாளர்களல்ல.

எழுத்தாளர்கள், அதிகாரத்தை, அதன் அடக்குமுறையைத்தான் எதிர்க்கின்றனர். அது அரசின் அதிகாரமாயினும் சரி, அடிப்படைவாதிகளின் அதிகாரமாயினும் சரி.

வேளாண் தொழிலாளர்கள், கல்வி நிறுவனப்பணியாளர்கள் சுரண்டப்படுவதை அம்பலப்படுத்துகிறவர் தான் இந்த நூலாசிரியர். நாடகக்கலைஞர்களின் பொலிவிழந்த வாழ்க்கையைப்பேசுபவர் தான் இவர். வேடமணிந்து, இரந்து வேண்டிப்பிழைப்பவர்களான விளிம்பு நிலை மனிதர்கள், பாவாவிடம் கருணை கொள்வதை விவரிப்பவர் தான் இந்த ரமேஷ்.

எனவே, **முருகு** கதையின் அடுக்குகளிலிருந்து விரிகின்ற நம்பிக்கை, , பிரச்சனையை முன் வைக்கும் தகுதியுடையவர் தான் இவர். அது ஆரோக்கியமான எழுத்தாக நிச்சயம் இருக்கும்.

ஏனெனில், சிறுகதையை வாசித்து, முடிக்கையில், நமக்கு சற்றுக்கூடுதலான விழிப்புணர்வு ஏற்படுகிறது. சற்றுக்கூடுதலான நேசம் ஏற்படுகிறது. அதற்காகத்தானே எழுத்து, அதற்காகத்தானே வாசிப்பு !!

**சா. தேவதாஸ்**
**இராஜபாளையம்**
**09-05-2016**

## புது விதமான சிறுகதைகள்

இந்நூலின் தலைப்பே வித்தியாசம் நிறைந்தது. படிக்க ஆரம்பித்தவுடன், கதைகள் ஸ்வாரஸ்யமாக உள்ளது. கதைகளால் சமூகம் எழுச்சி பெறுமா? மாற்றம் வருமா? இலக்கியத்தால், சமூகத்தை மாற்ற இயலுமா? முடியுமா? முடியும் என்றே நம்புகிறேன். இதில் வரும் நிகழ்வுகள், நாம் தினமும் சிந்திப்பது தான். ஆனால், நாம் மறந்து விடுகிறோம். ஆசிரியர் நன்கு கவனித்து எழுதியுள்ளார். மேலும், நம் வாழ்க்கை, நம்மைச்சுற்றி உள்ள வாழ்க்கை, எப்படியெல்லாம் உள்ளது என்பதைக்கதைகளில் காணலாம். நம் தமிழ்ச்சிறுகதைகள், நன்கு முன்னேறி வருகிறது. தமிழ்க்கதைகள் வளர்ந்துள்ளதா? அல்லது தளர்ந்துள்ளதா? என்ற கேள்வியை எழுப்பினால், நிச்சயம் ஆழமாக வளரவில்லை என்றாலும், அகலமாக வளர்ந்தே வருகிறது. நமக்கு முன்னோடி எழுத்தாளர்கள், புதுமைப்பித்தன், கு.ப.ரா. விந்தன், தி. ஜானகிராமன், ந. பிச்சமூர்த்தி, ஜெயகாந்தன், சி. என். அண்ணாத்துரை, சுந்தர ராமசாமி, எஸ்.என். நாகராசன், இராஜம் கிருஷ்ணன், பி.எஸ். ராமையா, சி.சு. செல்லப்பா, போன்ற தனித்துவமிக்க படைப்புக்கலைஞர்களால் தமிழ்ச்சிறுகதை வளர்ந்துள்ளது.

### பாடு

முதல் கதை **பாடு** என்ற தலைப்பில் உள்ள கதை. வெல்லம் காய்ச்சும் தொழிலாளியின் கதை. வெல்ல ஆலையில், நடக்கும் உழைப்பின் மேன்மைகள் நன்கு சுட்டப்பட்டு எழுதப்பட்டுள்ளது. வாழ்வின் ஒரு பகுதி மக்களின் இந்தக்கடும் உழைப்பு, சமூகத்துக்கு எவ்வளவு அவசியமானது என்பதைச்சுட்டுகிறது. ஆர்வமுள்ள திடீர் திருப்பங்கள், நிகழ்வுகள் இல்லாமல், ஒரு கதை இருக்கிறது. இதில் கதை குறைவாகவும், சொல்லும் மொழியால் படிக்கும்படியாகவும் உள்ளது. மழை வருமோ, மேகம் திரண்டு இருட்டாக உள்ளதே?! மழை பொழிந்தால், வெல்லம் காய்ச்சுவது பாதிக்குமே என்ற கவலை, நமக்கும் வந்து விடுகிறது. அளவான உரையாடல்களால், கதை தொய்வு இன்றிப்போகிறது. வெகு சாதாரண சம்பவம் கூட ஸ்வாரஸ்யமாக எழுதப்பட்டுள்ள நல்ல சிறுகதை.

### விட்டம்

முதல் கதையின் தொடர்ச்சி தான் இந்த இரண்டாவது கதையும். நவீன விஞ்ஞானம் வளர்ந்து சிறப்பான எடை போடும் தராசு வந்த நிலையில், பழைய கால விட்டம் என்ற பெயருடன் கூடிய எடை

போடும் தராசை வைத்துத்தரகன் , சாமார்த்தியமாக, வெல்லம் நிறுப்பதைக்கதை இயல்பாகச்சொல்லுகிறது.
மனிதனின், சுயநலம், பாடுபட்டு உழைக்கும் விவசாயியை எப்படியெல்லாம் இடையூறு செய்து, எப்படியெல்லாம் வெல்லம் களவாடப்படும் என்ற உத்தி, கதையில் நன்கு பதிவாகி உள்ளது. இந்த நிலை மாற வேண்டும்; எடை சரியாக இருக்க வேண்டும் என்பதை ஒரு பிரச்சாரமாகப்பேசும் கதை. படிக்க நன்கு உள்ளது.

## முருகு – 1

இது கூத்து நடத்தும் நடிகர்களின் கதை. நாடகம், கூத்து, ஆட்டம் என்ற நிலை, நம் மக்களிடம் எப்போதும் உண்டு. அதை அவர்கள் நடத்தும் விதம், அவர்களின் அன்றாட வாழ்க்கை நிகழ்வுகள், நன்கு எழுதப்பட்டுள்ளது. சம்பவங்கள் குறைவு என்ற போதிலும், யதார்த்தப்பூர்வமான நடை, கதையை நகர்த்துகிறது. சமூக இயல்பு, பார்வைகள், எதுவும் கதையில் இல்லை. கதை படிக்கும்படி உள்ளது.

## முருகு – 2

இதுவும், நாடகம், கூத்து ஆகியவைகளை ஒட்டிய நிகழ்வு தான். பாலியல் உணர்வு கலந்து எழுதப்பெற்ற போதிலும், கதையில் யதார்த்தம் உள்ளது. நிகழ்வு , கண் முன்பு நடப்பது போலவே உணர்ந்தேன். மற்ற எழுத்தாளர்களின் படைப்புகளில் இல்லாத தனித்துவ உணர்வு எனக்கு வந்தது. ஒரு கதையின் வெற்றி, அதைப்படிப்பவரின் மனதில் நிற்பது தான். இதை ஆசிரியர் சரியாக இன்னும் சுட்டவில்லை. மேலும் மெருகு தந்திருப்பின், கதை நன்றாக வந்திருக்கும். கதையில் சிறந்த வர்ணனை உள்ளது.

> "… கிழக்கே, தொடுவானத்தில் இருந்த வந்த ஒரு ஒற்றை சிவப்புக்கீற்று, அந்த விசாலமான அறையின் பச்சை, ஊதா மற்றும் பொன்னிற பெல்ஜியம் கண்ணாடி ஜன்னல்களின் மீது பட்டு, அந்த ஒளி சிதறி, அறையின் சுவர்களில் தெறித்து, கலவையான வர்ண ஜாலங்களில் அறையை நிரப்ப, முருகனும், பெத்தனாட்சியும், அந்த அறையில் உள்ள சகல விதமான அசேதனப்பொருட்களும் நானாவித வர்ணங்களிலும் மிளிருகின்றனர். மிளிருகின்றன…"

ஒரு கதையைப்படிக்கும் போது, வாசகருக்கு அறிவு வளர வேண்டும். கலை உணர்வு இருக்க வேண்டும்.

"...பெத்தனாட்சி பட்டு சேலை உடுத்தியிருந்தாள். உடல் வேலை எதுவும் செய்யாமல், சாப்பிடவும், தூங்கவும் ஆகிய இரண்டு காரியங்கள் மாத்திரமே பார்த்தால், உடலெங்கும் பணக்காரச்சதை பிடிப்புகளில், நல்ல செழுமை தெரிந்தது...". பெண்கள், அவர்கள், ஏழையோ, செல்வந்தர்களோ, அது முக்கியம் இல்லை. இப்படி இருக்கக்கூடாது என்பதை இந்தக்கதை உணர்த்துகிறது. இது ஒரு வகையில், பிரச்சாரம் என்றாலும், சமூகத்துக்கு ஆசிரியர் சொல்லும் நல்ல சேதி. இதை வரவேற்க வேண்டும். இவ்வித கனவு. இவ்வித நிகழ்வு, ஏன் ஏற்படுகிறது. கதையில் விடை உள்ளது. சமூகம், நல்ல சட்ட திட்டங்களுடன் இயங்கினாலும், இவ்வித பெண்கள், ஏன் இப்படி செயல்பட்டு வருகின்றனர். எது தேவை ? வாசகர் சிந்தனையைத்தூண்டும் நல்ல சிறுகதை. இதைப்படித்தவுடன், பிரபல எழுத்தாளர் சதக் ஹஸன் மண்டோ எழுதியுள்ள **அவமானம்** கதை ஞாபகத்துக்கு வருகிறது. சாதாரண மொழியில் அமைந்த நல்ல சிறுகதை. இராஜம் கிருஷ்ணனின் **மனிதனும் ஜோதியும்** ஞாபகத்துக்கு வருகிறது.

**தர்மம்**

பிச்சைக்காரர்கள், சமூகத்தின் அவமானம். அதுவும் ராமர், சீதை, ஹனுமான் பெயரால் யாசகம். பசியில் துடிக்கும் இந்தக்குழு, ஆடிப்பாடி தர்மம் கேட்கிறது. ஒரு பெரிய வீடு. முன்பக்கம் இரும்புக்கதவு. இவர்களின் சப்தம் கேட்டு, பாடல்கள் கேட்டு வரும் ஒரு முதிய கிழவி, தன்னிடம் உள்ள ஒரு கசங்கிய நோட்டை தருமம் செய்து விட்டுப்போய் விடுகிறாள். இவர்கள், பசியுடன் திரும்ப வரும் போது, அங்கே தெருவில், மூன்று தினங்கள் சாப்பிடாமல், பிச்சை எடுக்கும் பெரியவர், இவர்களை வணங்கி வேண்டுகிறார். தனக்குத்தானமாகக்கிடைத்த 50 ரூபாயை பெரியவருக்குத்தந்து விட்டு, பசியுடன் ஆடிப்பாடி பயணம் செய்கிறது ராமர் குழு. தான் சிரமப்பட்டாலும் பரவாயில்லை. எப்படியாவது பிழைப்போம். பாவம், வயது முதிர்ந்த பெரியவர் பசியாற வேண்டும். என்பதே கதை. இங்கு நாம் ஒன்றைக்கவனிக்க வேண்டும். சகல வசதிகளுடன் வாழும் நபர்கள், இவர்களை மதிப்பதே இல்லை. பிச்சை போடுவதும் இல்லை. அவரவர் வேலை அவரவருக்கு, என்று செயல்பட்டு வருகின்றனர். தனக்கு அல்லது தங்களுக்கு இல்லையானாலும் பரவாயில்லை. வயது முதிர்ந்த பெரியவர் நன்கு பசியாறட்டும், என்ற உயர்ந்த நோக்கம் கதையில் வெளியாகிறது. அதாவது வறுமையிலும் செம்மை. ஆனால், அவர்கள் பிறர் பற்றிச்சிந்திப்பதே இல்லை. ஆனால், ராமர் குழு

சிந்தனை செய்கிறது. ஒரு தர்மம், பிரிதொரு தர்மமாகிப்பெருகி விடுகிறது. நல்ல சிறுகதை.

**கதவு எண் 43, இரயில்வே பீடர் ரோடு**

புதுமையான தலைப்பு. ஒவ்வொரு மனிதனும், தனது பால்ய கால நினைவுகளையும், பள்ளியில் படித்த அனுபவங்களையும், சொந்த ஊர் பற்றியும், வேறு ஊர்களுக்குக் குடிபெயர்ந்த அனுபவங்களையும் மறக்க இயலாது. இதில் கதையே இல்லை. ஆனால், கதை நிகழ்ந்த காலம், சம்பவங்கள் ஆகியவற்றால், இது கதை போலவே உள்ளது. முடிவில், இது நகைச்சுவையாகவும் உள்ளது. சாவி, கொனஷ்டை துமிலன் போன்றவர்களின் கதைகளைப்படிப்பது போல உள்ளது. வாழ்க்கையை நன்கு கூர்ந்து கவனித்து எழுதியுள்ளார். விருதுநகரில் உள்ள பல இடங்களுக்கும், சினிமா தியேட்டர்களுக்கும், பக்கத்து வீட்டு நண்பர்களுடன் செல்வது போலவே உள்ளது. இதில் வரும் மனிதர்கள், மனதில் நிற்கின்றனர். நடை தான் அதற்குக்காரணம். மனதிற்குப்பிடித்திருந்தது. ஓரளவு நல்ல சிறுகதை.

**பாலிடெக்னிக்**

பாலிடெக்னிக் என்ற கதை, யதார்த்த உண்மைகள் நிறைந்த கதை. இப்படித்தான் இன்று உள்ள கல்லூரிகள் உள்ளன. மோசமான நிர்வாகம், மோசமான ஆசிரியர்கள். மோசமான அரசம் இதைக்கண்டு கொள்வதில்லை. தகுதி குறைந்த ஊழியர்களை வைத்துக்கொண்டு, சிறந்த கல்வியை எப்படித்தர முடியும்? காவல் காக்கும் ஒரு ஊழியர், பெண்களின் மீது செய்யும் பாலியல் தாக்குதல்களைப்படிக்கும் போது மனது வேதனைப்பட்டது. இதற்கு எது காரணம்? கொடிய வறுமையே காரணம். வறுமையில் தள்ளப்பட்டுத்தவிக்கும் பெண்கள், ஏதாவது பேசினால், வேலையை இழக்கின்றனர். இதை ஆசிரியர் எழுதும் விதம் நன்கு உள்ளது. தங்கும் இடம், சாப்பாடு, குளிக்கும் இடங்கள், யாருமே இல்லாத தனிமை, இவற்றால் உடம்பு பாதிக்கப்பட்டு, இந்த வேலையே வேண்டாம் என்று விலகும் நிலைக்கு யார் காரணம்? தனி மனிதர்களின் நிர்வாகத்தை அரசு கண்டு கொள்வதே இல்லை. பின்பு, எப்படித்தான் கல்வி வளரும். மேற்குத்தொடர்ச்சி மலை, வீசும் தென்றல் காற்று, விரிந்த மைதானம், அடர்ந்த சுத்தம் செய்யப்படாத இடத்தில் வளரும் அடர்ந்த புதர்கள். எந்நேரமும் பாதுகாப்பற்ற நிலை. ஒரு தனி மனிதன், இங்கு எப்படி வேலை பார்க்க இயலும்? இவ்விதமான கேள்விகளைக்கதை தருகிறது. சிந்தனை செய்யத்தூண்டும் சிறப்பான கதை. மேலும், சரளமான நடையும், அற்புதமான கற்பனையும், அதே

சமயம், அங்கு உள்ள நிர்வாகக்கோளாறுகளையும் அலசும் நல்ல கதை.

**யோவ், முதலாளி உனக்கென்ன பென்சனா தரப்போறாரு ?**

தலைப்பே புதுமையாக உள்ளது. இந்தக்கதைக்கு வேறு தலைப்பு தந்திருக்க வேண்டும். **எடுபிடி** என்ற தலைப்பு வைத்திருக்கலாம். நம் கல்விக்கூடங்கள் அநேகமாக இப்படித்தான் உள்ளது. எழுத்து சொல்லித்தரும் ஆசிரியர்கள், இறைவனுக்குச்சமம். ஆனால், இங்கு அப்படி இல்லையே! ஏன்? மாணவர்கள், நன்கு படித்து முன்னேற வேண்டும் என்பது ஒரு பொதுவான அறிவுரை. இதை எத்தனை ஆசிரியர்கள் உணர்ந்து, அதற்காகப்பாடுபடுகின்றனர்? ஒரு நிர்வாகி எப்படிப்பட்ட உதவியாளரை வைத்து, எப்படியெல்லாம் செயல்பட்டு வருகிறார் என்பதே கதை. நல்ல தரமான கல்வி, இவ்விதமான செயல்பாடுகளால் பாதிப்படைகிறது. சமூகத்தில் முக்கியமான இளைஞர்களின் சக்தி எப்படியெல்லாம் வீணாகிறது? கூழைக்கும்பிடு போட்டு, தலைவருக்கு விசுவாசம் காட்டிய ஒரு மனிதனின் கடைசிக்காலம் எப்படி உள்ளது? சமூக நிலைப்பாடுகளில், சமூக உணர்வுகள் குறைந்தால், மனித நேயம் மறைந்தால், எதிர்காலம் என்னாகும்? நிச்சயம், இந்த நிலை மாற்றப்பட வேண்டும். நாம் எங்கே செல்கிறோம்? இப்படி நம் பள்ளிகள் இருப்பது, இயங்குவது அவமானம் இல்லையா? இத்தகைய கேள்விகளை எழுப்பும் நல்ல சிறுகதை.

சிறந்த நடையும், தகுந்த கற்பனையும் கொண்ட நல்ல, அருமையான இக்கதைகள், நம் வாழ்விலே வழிகாட்டும் என்று நம்புகிறேன். வரும் காலத்தில், இதைக்காட்டிலும், நன்கு அருமையான படைப்புகள், எஸ்.ரமேஷ் தருவார் என்று நம்புகிறேன். புதுவிதமான சிறுகதைகள் கொண்ட நல்ல தொகுப்பு இந்த நூல். வாழ்த்துக்கள் !

**இலக்கியக் களஞ்சியம்**
**எஸ்.எஸ். ஆர். லிங்கம்**
**இலக்கிய இல்லம்**
**ஸ்ரீவில்லிபுத்தூர்**
**தேதி – 16.05.2016**

## சமர்ப்பணம்...

1. *மஞ்சரி* மாத இதழ் ஆசிரியர் குரு மனோகரவேல் அவர்களுக்கும்,

2. நண்பர்கள் கோதையூர் மணியன், இராஜபாளையம் இரா. கதைப்பித்தன், கவிதா தாசன், மனம் மகிழ ராஜாராம், ப. அடைக்கலம், எஸ்.எஸ். ஆர்.லிங்கம், எஸ்.எஸ். மணியம், குறிஞ்சிச்செல்வர் கொ. மா. கோதண்டம், மற்றும் தமிழ்நாடு கலை இலக்கியப்பெருமன்றம், ஸ்ரீவில்லிபுத்தூர் கிளையின் நண்பர்களுக்கும்,

3. ஸ்ரீவில்லிபுத்தூர் பென்னிங்டன் நூலகக்குழு அலுவலர்கள் அனைவருக்கும்,

4. இந்நூலைப் பிழை திருத்தம் செய்து ஆலோசனை தந்த மொழிபெயர்ப்பாளர் சா. தேவதாஸ் அவர்களுக்கும்,
5. அன்னை ஜெயா, மனைவி ரோகிணி மற்றும் புதல்வன் ஸ்ரீகாந்த் அவர்களுக்கும்......

6. பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரி, நாட்டார் வழக்காற்றியல் துறைத்தலைவர் முனைவர் பேராசிரியர் நா. இராமச்சந்திரன், (ஓய்வு) அவர்களுக்கும்......

7. நாங்குநேரி - சூரங்குடி நண்பர் திரு. இன்பக்கூத்தன் அவர்களுக்கும்......

8. இந்நூல் வெளிவர அனைத்து உதவிகளும் செய்த நண்பர் திரு. இராஜ. வைத்தீஸ்வரன் அவர்களுக்கும்,

9. இந்நூல் வெளிவர அனைத்து உதவிகளும் செய்த நண்பர்கள் அனைவருக்கும்...

10. கணினியில் தட்டச்சு செய்து கொடுத்த நண்பர் க.செல்வநாதனுக்கும்...

# கதவு எண் - 43, இரயில்வே பீடர் ரோடு
## (சிறுகதைகள்)

----- எஸ். ரமேஷ்
ஸ்ரீவில்லிபுத்தூர்.

# 1. பாடு

சக்கைக்களத்தில், தூர் வாரும் கம்பால், ஈரமான கரும்புச்சக்கைகளைக்கலைத்து உதறி, அவற்றை நன்கு சமமாய்ப்பரப்பி, மற்ற குவியல்களை எல்லாம் மட்டமாக்கி விட்டு, கண்களுக்கு மேலே கை விரல்களால் குடை பிடித்தபடி வானத்தைப் பார்த்தான் கருவண்டராயன் என்ற கருவண்டன். தலைக்கு நேர் மேலும் , மேற்குத் திசையிலும் மேகம் மூட்டம் போட்டிருந்தது. பெரிய கருப்பு தார்ப்பாயைக்கொண்டு வானத்தையே மூடியது போன்று தோன்றியது அவனுக்கு. வானம் அடிக்கடி உருமிக் கொண்டிருந்தது.

- 'அப்ப இன்னிக்கு பொழப்பு அம்புட்டுதானா ?!'…என்று சலித்துக்கொண்டான் கருவண்டன்

  தலையை உயர்த்திப்பார்த்ததில், சொர்ணம் நீண்ட கவட்டைக்கம்பால் காகிதம் போன்ற காய்ந்த சக்கைகளை அடுப்பிற்குள் தள்ளிக் கொண்டிருந்தாள்.

சொர்ணம் கருவண்டனின் ரெண்டாவது மகள். நான்கு மகள்களில் சொர்ணத்தின் மீது மட்டும் பாசம் அவனுக்கு சாஸ்தி. போன வருசம், சொர்ணம் காச நோயால் பீடிக்கப்பட்டு, எப்போது பார்த்தாலும் கொல், கொல்லென்று இருமிக்கொண்டிருந்தாள். அப்படி இருமும் போது, அவள் நெஞ்சுக்கூட்டைப் பிடித்துக்கொள்வாள். தகித்து எரியும் அடுப்பின் வாயில் உட்கார்ந்து, அவள் காய்ந்த கரும்புச்சக்கைகளை அடுப்பிற்குள் தள்ளிக்கொண்டு, கஷ்டப்பட்டுப் பாடுபடுவதைப்பார்க்க ரொம்ப பாவமாய்த்தான் இருந்தது. அவள் புருஷன் சிவபாலன் அவளை விட்டு விட்டு ஓடி விட்டான். எங்கு போனான் என்று தெரியாது. அவன் சேலம் அருகே லாரி ஓட்டிப்பிழைப்பதாகவும், வேறொரு பெண்ணோடு சேர்ந்து வாழ்வதாகவும், ஊர்க்காரர்கள் சேதி சொல்லி அனுப்பினார்கள்.

கொப்பரை வெந்து விட்டதா எனத்தெரியவில்லை. சக்கைக்களத்தில் கால்களால் உளைத்தபடி நடந்து சென்று, கொட்டகையின் மேட்டில் மெதுவாக ஏறி, கொப்பரையைப்பார்த்தான் கருவண்டன். கொப்பரையில் பிடித்து ஊற்றிய பால் அப்போது தான் கொதிக்க ஆரம்பித்தது.

- 'இந்தா முத்து, சோடா உப்பை எடுத்து நாலு கரண்டி கொப்பரையில் போடு' என்று பேரன் முத்துவுக்குக்கட்டளையிட்டான்.

இரும்புக்கொப்பரையின் மறு முனையில், மரத்தூணுக்கு அருகில் கீழே வைத்திருந்த வாய் அகன்ற பிளாஸ்டிக் டப்பாவின் மூடியைத்திறந்து சோடா உப்பை கரண்டியால் எடுத்து கொப்பரையில் போட்டான் முத்து. இப்போது கொதித்துக்கொண்டிருந்த கரும்பு பால் கொப்பரையில் பொங்கி எழுந்தது. உடனே, சல்லடைக்கரண்டியை எடுத்து, கரும்புப்பாலின் மீது ஓட்டினான். கருப்பாய், அழுக்கான கசடு, கரண்டியின் மேலே திரண்டு நின்றது. அதை எடுத்து அருகில் இருந்த பெரிய தகர டிரம்மில் தட்டி விட்டு, க்ரஷ்ஷரைப் பார்த்தான் கருவண்டன்.

பொஞ்சாதி கெங்கம்மா, க்ரஷ்ஷருக்குப்பின்னால் நின்று கொண்டு, சுழலும் சக்கரங்களுக்கிடையில் கரும்பைக்கொடுத்துப்பிழிந்து கொண்டிருந்தாள். கீழே குவிந்த தானத்தின் வழியே கரும்புப்பால், சல்லடை வழியாக டிரம்மில் விழுந்து கொண்டிருந்தது.

- 'ஏ, இன்னம் ரெண்டு ரெண்டு கரும்பாச்சேத்து உள்ள கொடு. அங்க பாரு. பாலு நெறைய வரமாட்டுது' என்றபடி யதேச்சையாய் வானத்தைப்பார்த்தான் கருவண்டன். கருமையான மூடாப்பு போட்டு மூடிய மேகங்கள் அப்படியே இருந்தன. கொஞ்சம் கூட வெளிச்சம் தெரியற வழியைக்காணோம்.

- 'இது என்ன ஒரு வெயிலையும் காணமே ! சுள்ளுன்னு உறைச்சு வெய்யில் அடிச்சாத்தான், இங்க வேலை ஆகும்!' என அங்கலாய்த்தான் கருவண்டன்.

க்ரஷ்ஷரில் கரும்பைப்பிழிந்து பால் எடுத்த பின், ஈரமான சக்கையைத் தள்ளுவண்டியில் வைத்துக்கொண்டு போய், களத்தில் உயர்த்தி, வெயிலில் காய வைக்க வேண்டும். கரும்புச்சக்கை வெயிலில் காய்ந்தால், கடைசியில் தாள் போல சருகாய் மாறிவிடும். அதை நீள மூங்கில் கழிகளில் சுமந்து

கொண்டு சக்கைக்களத்திலிருந்து அடுப்பு வரை கொண்டு வந்து தள்ள வேண்டியது முதலாவது மருமகன் ஆறுமுகத்தின் பொறுப்பு. அடுப்பைத் தொடர்ந்து சூடு குறையாமல் எரிக்க வேண்டியது சொர்ணத்தின் வேலை. பேரப் பிள்ளைகள் இரண்டு பேர் பள்ளிக்கூடம் விட்டதும் வந்து கூடமாட வேலை செய்வார்கள். இது கூட்டாய்க்குடும்பமாய்ச்சேர்ந்து செய்ய வேண்டிய வேலை. தனி ஆளாய் முடியாது.

- 'ஏலே ராசு! அங்க என்னடா பண்ணிட்டு இருக்க? கொப்பரையை ஒரு பார்வை பாரு. கொப்பரை கொதிச்சு வந்திருந்தா, ஹைட்ரோஸ் பொடி ரெண்டு கரண்டி போடு'.

ராசு, ஊதா டப்பாவைத்திறந்து, ரெண்டு பெரிய கரண்டி ஹைட்ரோஸ் பொடியை எடுத்து, கொப்பரையில் வீசினான். புஸ்ஸென்று கரும்புப்பால் பொங்கி எழும்பியது. மீண்டும் நீள சல்லடைக்கரண்டியால் அழுக்கை எடுத்து டிரம்மில் தட்டினான். தேங்காய் எண்ணை பாட்டிலை எடுத்து நாலு மூடி எண்ணையை கொப்பரையில் கொட்டினான்.

பத்தடி குறுக்கு விட்டம் கொண்ட பெரிய இரும்புக்கொப்பரை. நன்கு பராமரித்து எரித்தால், இதில் ரெண்டாயிரம் கொப்பரை வரை கரும்புப்பாலைக்காய்ச்சி எடுக்கலாம். ஒரு ஒட்டை விழுந்து விட்டால், ரிப்பேர் செய்ய ஆயிரம் ரூபாய் ஆகும். அதற்குத்தனி ஆட்களைப்பிடிக்க வேண்டும்.

மீண்டும் வானத்தைப்பார்த்தான் கருவண்டன். கருப்பு மேகம் கலைகிறபடியாய் தெரியவில்லை. மேற்குத்தொடர்ச்சி மலையின் மேல் கவிழ்ந்திருந்த மேகக் கூட்டங்கள், கன்னங்கரேலென்று திரண்டு நின்று அவனை மேலும் மிரட்டின.

'கொட்டித்தீர்க்க இதோ வருகிறேன்' என்று வானம் அவனை முகத்துக்கு முகமாய் மிரட்டிக்கொண்டு நின்றது. ஒரு பாட்டம் அடை மழை பெய்தால், சக்கைக்களம் முழுதும் தண்ணீரில் சொத, சொதவென நனைந்து எல்லாமே கூளமாகி விடும். சக்கைக்களத்தில் காய வைத்த கரும்புச்சக்கை முழுதும்

மழைத்தண்ணியில் நனைந்தால், ஈரம் நிலத்தில் முக்கால் அடியாவது நிற்கும். இது கரிசல் பூமி. நிலத்தில் ஈரம் பிடித்து நிற்கும். அடுப்பெரிக்க சக்கை கிடைக்காது. அடுப்பெரிக்க சக்கை இல்லையென்றால், கரும்பு ஆலை ஓடாது. நாலு நாளுக்கு வேல எதுவும் நடக்காது.

ஏற்கெனவே இந்த நிலத்து சம்சாரி பிலாவடியானிடம் அம்பதாயிரம் அட்வான்ஸ் வாங்கித்தான் மொத்த க்ரஷ்ஷர் செட்டையும், பழைய செண்பகத்தோப்பு சம்சாரியிடமிருந்து மீட்டு எடுத்து வந்தான். இப்போது இன்னும் ஒரு முந்நூறு கொப்பரை ஓட்ட வேண்டியுள்ளது. ஒரு நாளைக்கு அஞ்சு கொப்பரை என்ற கணக்கில் எப்படியும் ஆலையை ஓட்டி முடிக்க ரெண்டு மாசமாவது ஆகும். வேலையை சட்டுபுட்டென முடித்து விடலாம் என்று பார்த்தால். அந்தா இந்தா என இழுபறியாய் இருக்கிறது. இப்போது மேடு ஏறி, கொப்பரையை எட்டிப் பார்க்க, அது பாகு பதத்திற்கு வந்திருந்தது.

- 'சொர்ணம், போதும்மா! சக்கையை உள்ள தள்ளுறதை நிறுத்து. பாரு, கொப்பரை ஆயாச்சு!'

கொப்பரையில் இருந்து கருப்புப்புகை எழுந்து, மிட்டாய் வாடை வந்தது. அது தான் கொப்பரை தயாரானதற்கு அடையாளம்.

- 'ஏ ராசு, ஆறுமுகம் வாங்க. வந்து ராட்டினக்கயிறை இழுங்க!'.

ராசுவும், ஆறுமுகமும் கொப்பரையின் தென் பக்கத்தில் நின்று கொண்டு, அருகே இருந்த கல் துணியில் கட்டியிருந்த தடித்த கொச்சக்கயிறை அவிழ்த்து,

- 'ஏ, இந்தா, விடாதே. பிடி, இழு!' என்று குரல் கொடுத்தபடி, கொப்பரையின் வளையம் போட்ட காதில் கட்டியிருந்த கயிறை இழுக்க,அதற்கு மேலே கூரையிலிருந்து தொடங்கிய ராட்டினத்தின் வழியாக கயிறு இழுபட்டு, கொப்பரை தென்பக்கமாய் நெட்டுக்குத்தலாய் மேலெழும்பியது. கீழே

கொதிக்கும் அடுப்பில் இருந்து, அனலும், கருந்தூசியும் எழும்பி கருவண்டன் முகத்தைத் தாக்கியது.
கருவண்டன் விடாப்பிடியாக, நீண்ட துடுப்புக்கம்பை எடுத்து, சாய்ந்த இரும்புக் கொப்பரையில் நின்ற கரும்புப்பாகை வழித்து, கீழே இருந்த செவ்வக மரத் தொட்டிக்கு மாற்றினான்.

கொதிக்கும் சூட்டோடு கீழே கிடந்த மரத்தொட்டியில் கரும்புப்பாகு விழுந்ததும், அருகில் பிளாஸ்டிக் பையில், இருந்த வெள்ளை ஸ.்.போலைட் துண்டுகளை எடுத்து பாகின் மீது வீசினான். பாகில் விழுந்த ஸ.்.போலைட் வில்லைகள் சூட்டுக்கு இளகி, மர நிறத்தில் இருந்த பாகை சில நொடிகளில் பொன்னிறமாக மாற்றி, வித்தை காட்டியது. நீண்ட மரத்துடுப்பால், மரத்தொட்டியில் அங்குமிங்கும் பாகை அளையவே, பொன்னிறம் எங்கும் பரவி, எட்டடிக்கு நான்கடி மரத்தொட்டி முழுவதையும், நகைக்கடையில் ஜொலிக்கும் பவுன் நிறத்துக்கு மாற்றியது.

இதற்குள் மருமகன் ஆறுமுகம், டிரம்மில் பிடிக்கப்பட்டு உயர மேட்டில் நிறுத்தியிருந்த கரும்புப்பாலை, நீளமான பைப் வழியாக கொப்பரைக்குள் ஊற்றினான். குழைத்த சுண்ணாம்புப்பொடி வைக்கப்பட்டிருந்த சிறு சிரட்டையிலிருந்து வலது ஆட்காட்டி விரலால் தொட்டு, அருகில் இருந்த கல்தூணின் உச்சியில் வரிசையாய் வைக்கப்பட்டிருந்த வெள்ளைப் பொட்டுக்களில், அன்றைய கணக்கைக்குறிக்கும் வரிசையில் இன்னொரு வெள்ளைப்பொட்டை தன் வலது விரலால் வைத்தான்.

இத்தோடு பெரிய மேடைக்கு ஐந்தாகிறது. ஒரு பெரிய மேடை என்பது இரண்டு சின்ன மேடை. ஒரு சின்ன மேடைக்கு மூணு மிடா கரும்புச் சாறு. ஒரு மிடா என்பது முப்பது படி கரும்புச் சாறு. இந்த மூணு மிடா கரும்புச்சாறை இயந்திர க்ரஷ்ஷரில் தானே பிழிந்து, அந்தப்பாலை அடுப்பில் ஊற்றிக்காய்ச்சி, சோடா உப்பு, ஹைட்ரோஸ், தேங்காய் எண்ணை, மட்டிப்பொடி சேர்த்து, அழுக்கு நீக்கி சுண்டக்காய்ச்சி, பாகெடுத்து வெல்ல உருண்டைகளாக உருட்டித் தருவதற்கு, ஒரு மேடைக்கு இவ்வளவு ரூவா என்று நிலத்து சம்சாரியுடன் ஒப்பந்தம் செய்து கொண்டு, வெல்லம் உருட்டித்தர வேண்டியது தான் வேலை.

சொர்ணம் சோர்ந்து போயிருந்தாள்.

- 'ஏ, சொர்ணம். போய் குச்சலுக்குள்ள படு. உனக்கோ முடியல. உங்கம்மா என்ன செஞ்சு வெச்சிருக்கான்னு பாரு. சாப்பிட்டு முடிச்சு, மாத்திரையை முழுங்கிட்டு குச்சலுக்குள்ளேயே படுத்துக்க தாயீ. நான் அடுப்பைப் பாத்துக்கறேன்!' என்றான் ஆறுமுகம்.

அருகில் டிரம்முக்குக்கீழே இருந்த வெள்ளை டப்பாவை எடுத்து, ரெண்டு ஸ்பூன் மட்டிப்பொடியை எடுத்து கொப்பரைக்குள் போட்டான். ஆலைக் கொட்டகையின் சாய்ப்பில் சொருகி வைத்திருந்த பட்டணம் பொடி மட்டையை எடுத்து, அதைப்பிரித்து ஒரு சிட்டிகை பொடி எடுத்து, மூக்கு வழியாய் உறிஞ்சி ஏற்றிக்கொண்டு, இரண்டு தும்மல் போட்டு விட்டு, நீண்ட மரக்கவட்டைக் கம்பால் கரும்புச்சக்கையை அடுப்புக்குள் தள்ள ஆரம்பித்தான்.

கீழே மரத்தொட்டி அருகில், சதுரக்கருங்கல் இருக்கையின் மேல் உட்கார்ந்து, குவிக்கப்பட்டிருந்த கெட்டிப் பாகை, கைகளால் பந்து, பந்தாய் உருட்டி எடுத்து, மலையாள உருண்டைகளைப்பிடித்துக்கொண்டிருந்தனர் ராசுவும் வேணியும்.

ஏற்கெனவே பந்தாய் உருட்டப்பட்டுக்காய்ந்த மலையாள வெல்ல உருண்டைகளை கூழைக்கூடையில் குவித்து எடுத்து, தனிக்குச்சலுக்குள் எடுத்துச்சென்று அடுக்கி வைத்தான் பருவக்காரன் சுப்பிரமணி.

தூரத்தில் மாரியப்பன் நஞ்சைக்குப்பக்கமாய், ஒரு பைக் வந்து நின்றது. அதில் இருந்து இறங்கிய இருவரும் வெள்ளை வேட்டி கட்டியிருந்தனர். செல்வமும் ,வெள்ளைச்சாமியும் வரப்பு மிதித்து, ஆராயி காடு வழியா ஆலைக்கொட்டகை நோக்கி வந்தனர். அவர்கள் நெருங்கி வரவர அவர்களது வெள்ளையும் சொள்ளையுமான தோற்றம் தெரிந்தது. ரெண்டு பேருமே உள்ளூர் வியாபாரிகள் தான். பஸ் ஸ்டாண்டு அருகே கிழக்கு வரிசைக்கடையில் ரெண்டு பேருமே சிப்பந்திகள். இந்த மொத்த பெரியகுளம் கண்மாய், மம்சாபுரம் குட்டத்தட்டி கண்மாய், செண்பகத்தோப்பு கண்மாய்கள் எல்லாம்

இவர்களது வியாபாரம் தான். எங்கு போனாலும் பைக்கில் தான் போவது, வருவது. அதிகாலை ஆறு மணிக்கே பைக்கில் புறப்பட்டு வேட்டை ஆரம்பமாகி விடும். ஒவ்வொரு சம்சாரி காடாய்ப்போய், வெல்லத்தைப்பார்த்து விலை பேசி, அச்சாரம் தந்து மொத்த வெல்லத்தையும் எடை போட ஒப்பந்தம் பேசுவது இவர்கள் தான். விலை பேசி, அச்சாரம் தருவது செல்வம். எடை போடுவது வெள்ளைச்சாமி. இந்த ரெண்டு பேரின் வியாபாரம், அவர்களது முதலாளி பெரியசாமியையும் கட்டுப்படுத்தும்.

வெல்லத்தை விலை பேசுதல் என்றால், ஏதாவது குறை என நொட்டாங்கு சொல்லி அதன் விலையைக்குறைப்பது என்று அர்த்தம். குவிண்டாலுக்கு நூறு, இருநூறு அல்லது நானூறு என்று அடித்துக்குறைத்து விலை பேசினால், இருபது குவிண்டால் அல்லது முப்பது குவிண்டால் என்று மொத்தமாக எடை போடும் போது, அவர்களது முதலாளி பெரியசாமிக்கு மொத்தமாய் ஒரு கணிசமான தொகை லாபத்தையும் மிஞ்சிக்கிடைக்கும். இது போக வெல்ல மண்டி கமிசன் வியாபாரம் என்பது ரூபாய்க்கு பத்து பைசா கமிசன் சமாச்சாரம் தான். தரகு பேசி, எடை போடும் வெள்ளைச்சாமிக்கு சம்பளம் போக, இன்னொரு பெரிய தொகை கணிசமாய்க்கிடைக்கும். அந்தக்கமிசன் தொகைக்காக சம்சாரிகளிடம் ஒரே அடியாக அடித்துப்பேசி, விலை குறைத்து டிராக்டரில் வெல்லத்தை அள்ளி எடுத்துப்போவது தான் வியாபாரம் என்பது…

இடுப்பு வேட்டியைத்தூக்கி, மேலே மடித்துக்கட்டியபடி சக்கைக்களத்தில் கால்களால் அளைந்தபடி, வாமடையைத்தாண்டி, நடந்து வந்து, ஓலைக் கொட்டகைக்குள் நுழையும் வெள்ளைச்சாமி, வடித்த அம்மாவாசை இருட்டு நிறம். நெற்றியில் குங்குமப்பொட்டு. வெள்ளைக்கதர் வேட்டி. அவரை குங்குமப் பொட்டுக்காரர் என்று தான் கூப்பிடுவார்கள்.

- 'என்ன நைனா, ஆலை எப்படி ஓடுது? எத்தனை மேடை ஓட்டியிருக்கீங்க?'

- 'ஒரு வாரமா ஒரு முப்பது மேடை ஓடிச்சுங்க. அங்க கிழக்குக்குண்டுல இருந்த கரும்பு தண்ணிப்பாய்ச்சல் ஏறிப்பாயாம,

சுமாராத்தான் இருக்குங்க. பால் பிடிச்சுக்காய்ச்சுற போது, கொஞ்சம் ஹைட்ரோஸ் பொடியை ஏத்திப்போட வேண்டியிருக்கு.'

- 'நல்லாப் பாத்துப்பிடிங்க. நிறம் விட்டுப்போகக்கூடாது. அதைப் பாத்துக்க நாயக்கரே!', என்றான் வெள்ளைச்சாமி.

- 'என்ன, இவன் சுப்பிரமணி எங்க?… ஏ சுப்பிரமணி… ஏ… சுப்பிரமணீ' என்று பம்புசெட்டு ரூம் பக்கமாய்த்திரும்பிக்குரல் கொடுத்தான் செல்வம்.

சாப்பிட தூக்கு வாளியோடு ரூமிலிருந்து வெளியே வந்த சுப்பிரமணி,

- 'யோவ், என்னய்யா, நீ தான் முந்தா நேத்தி வர்ற ஆளா? ரெண்டு நாளா உன்னைக்காணம், காணம்னு ஆள் விட்டுத்தேட வேண்டியதாப்போச்சு. நல்ல ஆளுய்யா நீ! என்றபடி கொட்டகைக்குள் வந்து, அரை டிராயருக்குள்ளிருந்து சாவியை எடுத்து, குச்சலின் மேல் இருந்த சங்கிலியில் மாட்டியிருந்த பூட்டைத் திறந்து, அதன் மேல் சாத்தியிருந்த மூங்கில் கதவை விலக்கி, குனிந்து உள்ளே நுழைந்து, குச்சலின் இருட்டில் அம்பாரமாய்க்குவிந்திருந்த வெல்லத்தின் மேலிருந்த கிஸ்தான் சாக்கை உருவி எடுத்து, நல்ல வெல்லமாய் நாலு கட்டிகள் கையில் எடுத்து வந்து வெள்ளைச்சாமியிடம் தந்தான்.

- 'இது தான் !' என்றான் சுப்பிரமணி.

மலையாள உருண்டைகளை நன்கு உருட்டிப்பார்த்து, ஆராய்ந்து,
- 'என்ன இது தான் நிறமா? இவ்வளவு தானா?' என்றான் வெள்ளைச்சாமி.
- 'உன் கை நிறத்தோடு பக்கத்துல வெச்சுப்பாத்தா இது என்ன மாதிரி நிறம்னு உனக்கே தெரியும்' என்றான் சுப்பிரமணி.

கொட்டகையில் வேலை செய்து கொண்டிருந்த அனைவரும் விழுந்து விழுந்து சிரித்தனர்.

- ' சரி, நீ விலையைச்சொல்லு' என்றான் செல்வம், முன் தெரிந்த தெத்துப் பற்கள் வழியாக.

- 'நீயே விலையைச்சொல்லுய்யா' என்றான் சுப்பிரமணி.

- 'நீயே முதக்கேள்வி கேளு'

- 'பரமசிவம் காட்டுல ரெண்டு நாளைக்கு முன்னாடி மூவாயிரத்து நானூறுக்கு போயிருக்கு. காத்தாடி சின்னான் காட்டுல மூவாயிரத்து முந்நூத்து ஐம்பது. அப்ப இதுக்கு நீயே பாத்து வெல சொல்லு'

- 'யோவ், சுப்பிரமணி! பரமசிவம் சரக்கு அப்படி வெள்ளை வெளேர்னு சீனி கணக்கா வருது. நீயே பாரு. இது அப்படியா இருக்கு. அவன் சரக்கு மாதிரி உன்னுது வருமா?' என்றபடி அருகிலிருந்த வெள்ளைச்சாமியைப்பார்த்தான். வெள்ளைச்சாமி தலையாட்டி அதை ஆமோதித்தான்.

- 'அப்ப, இதுக்கு நீயே கேள்வி கேளு'.
- 'மூவாயிரத்து முந்நூறுக்கு வருமா?'
- 'அவ்வளவெல்லாம் வராதுப்பா'
- 'நீ அடுத்த கேள்வி கேளு!'
- 'இது ரெண்டாயிரத்து எண்ணூறுன்னா போடலாம்.
- 'என்ன செல்வம், ஒரேயடியா அடிமாட்டு விலைக்கு பேசற. ஈனக்கிரையத்துக்கு யாவாரம் ஆகாதுப்பா'
- 'இது நெறம் பிடிக்கல சுப்பிரமணி!'
- 'இந்த வெல்லத்துக்கு என்னய்யா கொறை ? பவுனு மாதிரி பளபளன்னு இருக்கு. இதப்போயி, அடிச்சுப்பேசி, அடிமாட்டு விலைக்குக்கேக்குறியே!'
- 'அப்ப ரெண்டாயிரத்துத்தொள்ளாயிரத்து ஐம்பது?'
- 'மூவாயிரத்து இருநூறுன்னா வருமா?'
- 'அது ஆகாதுப்பா. நீ ஒரேயடியா மேலயே உச்சாணிக்கொம்புலயே நிக்கறியே! கொஞ்சம் இறங்கி வா!'

- 'இதுக்கு மேல எறங்க வழியில்ல. சரி. மூவாயிரத்து நூத்து ஐம்பதுன்னா வருமா?'
- 'ரெண்டாயிரத்து தொள்ளாயிரத்து எம்பதுன்னா முடிச்சிருவோமா?'
- 'ச்சே, இது சுத்தப்படாது! வெலவாசிக்கு ஏத்த மாதிரி இதையும் கூட்டிப் போடுய்யா. ஒரு வெல சேத்துச்சொல்லு' என்று போராடினான் சுப்பிரமணி.

இறுதியில் இந்த கிடாமுட்டுச்சண்டையில், விலை மூவாயிரத்து எழுபத்து நான்கு என்று பேரம் முடிந்தது. தன் சட்டைப்பைக்குள் கை நுழைத்து, ஒரு பத்து ரூபாய்த் தாளை எடுத்து,

'இந்தாப்பா, பிடி அச்சாரம்! நாளைக்குக்காலைல பத்து மணிக்கு வண்டி அனுப்புறேன். வெல்லம் சுமக்க நாலு பொம்பள ஆள் வரும். கொத்தச்சி மருதாயி தான். பாத்து எடை போட்டு முடிச்சு அனுப்பு!' என்று வியாபாரத்தை முடித்து விட்டு, வேட்டியை உதறிக்கட்டிக் கொண்டு, மடித்து மேலேற்றிக் கொண்டு, வெள்ளைச்சாமி கருவண்டனிடம்,

- 'என்ன நாயக்கரே! வரட்டுமா? இன்னம் கொஞ்சம் சோடா உப்பை ஏத்திப் போடுங்க. சரக்கு தெளுவா வரணும். அப்படியே ஜிகினா மாதிரி, பாத்தாலே பளபளன்னு சினிமாக்காரி மாதிரி, ஜிலுஜிலுன்னு இருக்கணும். நெறம் ரொம்ப முக்கியம்' என்று உத்தரவுகள் போட்டான். பின்பு, கொட்டகையை விட்டு வெளியேறி சக்கைக்களத்தில் கால் மிதித்தபடி , வயக்காட்டை விட்டு வெளியேறினர் செல்வமும் வெள்ளைச்சாமியும்.

- ‘என்ன பாத்துக்கிட்டு நிக்குற? போயி, கரும்பைக்கொடு. பால் பிடிச்சு டிரம்முல நிரப்பு. இது தான் தங்கு மேடை’ என்று க்ரஷ்ஷரின் பின்னே நின்று கொண்டிருந்த கெங்கம்மாவிடம் சத்தமிட்டான் கருவண்டன்.
- மீண்டும் கொட்டகைக்கு வெளியே வந்து, கருவண்டன் மேலே நிமிர்ந்து பார்த்த போது, மேற்குத்தொடர்ச்சி மலை மேல் கவிழ்ந்திருந்த மேகக்கூட்டம் அப்படியே அசையாமல் நின்று கொண்டிருந்தது. ஏதோ மொத்த மேகமும் திரண்டு வந்து, வயக்காட்டின் நேர் மேலே

அந்தரத்தில் தொங்கிக்கொண்டு நிற்பது போல அவனுக்குத்தோன்றியது. நல்ல கருக்கட்டிய மேகம். இது அப்படியே பொழிஞ்சுதுன்னா, ஒரு வாரத்துக்கு ஆலை வேலை ஓடாதே' என்று மோவாயில் விரல்களைத்தேய்த்தபடி கவலையில் ஆழ்ந்தான் கருவண்டன்...

அழகம்மாள் காட்டுக்கு மேற்கே நிறுத்தியிருந்த பைக்கை எடுத்து, மெதுவாக உருட்டிக்கொண்டு, இனாம் நாச்சியார்கோவில் கிராமத்துக்குள் நுழைந்து, அரசுப்பள்ளிக்கூடம் தாண்டி, அதன் தெக்குப்பக்கமாய் வெளியேறி, பைக்கை உசுப்பி, மேலேறி, செல்வமும், வெள்ளைச்சாமியும் கவண் போலக்குவியும் இனாம் கரிசல்குளம் ரோடு விலக்கில், பைக்கில் வேகத்தைக்கூட்டியபடி, துலுக்கங்குளத்தைக்கடந்த போது, அவர்களுக்கு மேலே கவிழ்நது நின்ற மேகக்கூட்டத்தின் கதவு திறந்து கொண்டது.

---

**பால்** ---- கரும்புச்சாறு

**கொத்தச்சி** – வெல்லத்தை நார்ப்பெட்டியில் வைத்து, தலையில் சுமந்து, டிராக்டரில் கொண்டு போய்ப்போடும் சுமை கூலிப்பெண்களின் தலைவி.

**தங்கு மேடை**--- ஒரு நாளில் கடைசியாக அரைகுறையாய்க் காய்ச்சி, வெல்லமாக உருட்டி எடுக்காமல், கொப்பரையிலேயே பாகு போல நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் மேடை. மறு நாள் அதிகாலை இது காய்ச்சி வெல்லமாக உருட்டப்படும்.

**ஹைட்ரோஸ், ஸ.ஃபோலைட், சோடா உப்பு** --- வெல்லம் காய்ச்சி, பதனப்படுத்தி எடுக்க, கொப்பரையில் போடும் ரசாயனப் பொடிகள்.

# *2. விட்டம்*

அந்த ராட்சத இயந்திரம் உறுமியபடியே வேல்ச்சாமியைத்துரத்தியது. பிரம்மாண்டமாய் அவனை விட பல மடங்கு பெரிதாய் இருந்த அந்த யந்திரம் இன்னதென்று அடையாளம் காண முடியாதபடி கோரமாய் இருந்தது. காதைச் செவிடாக்கும் ஓசையுடன் அது அவன் பின்னால் உருண்டோடி, அவனைத் துரத்திக் கொண்டு வந்தது. வேல்ச்சாமி மரண பயத்துடன், ஒரு சிறுத்தையின் வேகத்துடன் காட்டுக்குள் ஓடிக்கொண்டிருந்தான். அந்த இயந்திரம் தானாகவே அவன் பின்னால் துரத்திக்கொண்டு வந்தது. வேல்ச்சாமி இடைவிடாதபடி ஓடிக்கொண்டிருந்தான். வர வர சத்தம் காதைப்பிளக்கும்படியாக அதிகரித்துக்கொண்டே வந்தது.

- 'இது என்னடா வம்பு!?' நமக்கும் இந்த யந்திரத்துக்கும் என்ன சம்பந்தம்? நான் அதற்குப்பகைவனா? நான் அதற்கு ஒரு கெடுதியும் செய்யவில்லையே ′ என வேல்ச்சாமி மனதிற்குள் கேள்வி கேட்டுக்கொண்டான். ஆனால், யந்திரமோ அவனை மிகந்த வெறி கொண்ட உக்கிரத்தோடு துரத்தியபடி உருண்டோடி வந்தது.

இப்போது அதன் சத்தம் காதுக்கு வெகு அருகில் கேட்டது.

- 'அய்யோ, என்னால முடியல. என்னை யாராவது இந்த நாசமாப்போன யந்திரத்துக்கிட்ட இருந்து காப்பாத்துங்களேன்! யாராச்சும் ஓடி வாங்க' என்று வேல்ச்சாமி வாய் விட்டு அலறினான்.

திடுக்கிட்டு கண் விழித்த போது, கண்ணுக்கு நேர் எதிரே பம்புசெட் ரூமுக்கு வெளியே இருந்த தென்னை மரம் தெரிந்தது. அதற்கு அப்பால் தொலைவில் காய்ந்த வரப்பில் ஏறி, இறங்கி, வேதநாயகம் புஞ்சைக்காட்டில் சிவப்பு டிராக்டர் உருண்டு கொண்டு வரும் 'தட தட' சப்தம் கேட்டது.

வேல்ச்சாமியின் முகம் குளிர்ந்து போய், கடுமையாய் வியர்த்திருந்தது. வேப்ப மரங்களில் இருந்து குயில்கள், குருவிகளின் பாட்டுக்குரல்கள் கேட்டுக் கொண்டிருந்தது. விருட்டென்று எழுந்து, ரூமுக்குள் இருந்த தொட்டியில் இருந்த தண்ணீரை முகர்ந்து, முகத்தில்

அடித்துக்கொண்டு, மேல் துண்டால் முகத்தைத் துடைத்துக்கொண்டான். பம்புசெட் ரூமின் மரக்கதவின் மேல் ஒட்டியிருந்த ஆண்டாள் படத்தைப்பார்த்து, அதைத் தொட்டுக்கண்ணில் ஒத்திக்கொண்டான். 'அம்மா, தாயே, நல்ல வழி காட்டும்மா!' என்று வேண்டிக் கொண்டான் வேல்ச்சாமி.

வேதநாயகத்தின் புஞ்சை வரப்புகளைக்கடந்த டிராக்டர், தெக்குப்பக்கம் உள்ள எலக்டிரிக் கம்பத்தைக்கடந்து, நகர்ந்து வந்து, அங்கு இருந்த ரெண்டு தேக்கு மரங்களுக்கு நடுவே உறுமியபடி நின்று கொண்டிருந்தது.

டிராக்டரின் டிரைவர் திருமன், அதன் ஆக்சிலேட்டரை மிதித்து, கியர் மாற்றியும் முடுக்கியும், டிராக்டர் அதற்கு மேல் நகரவில்லை. அதன் பின்புறம் இணைக்கப்பட்டிருந்த பச்சை நிற டிரெய்லரின் டயர், ஏடாகூடமாய் ஒரு பள்ளத்தில் இறங்கி சிக்கியிருந்தது.

- 'ம்ம்.. அவ்வளவுதானா? இதுக்கு மேல உன் வண்டி நகராதாய்யா?!' என்றாள் மகேசு

- 'வண்டி கெழடு தட்டிப்போச்சு. இதை வித்திட்டு வேற புது வண்டி வாங்கச் சொல்லி முதலாளி கிட்ட சொல்லணும்' என்றான் பால் தங்கம்.

- 'நீ நாப்புல என்ன? நீயும் தான் ரெம்ப கெழடு தட்டிப்போன. உன்னைய விட்டுட்டு வேற ஒரு இளவட்டத்தைப்புடிக்கறதுக்கு அந்த மம்சாபுரத்துக்காரிக்குத்தெரியலயே' என்று ஏடாசி பேசினாள் கெங்கம்மா.

டிராக்டரில் இருந்த பெண்கள் 'கெக்கக் கெக்க' என்று ஒரே நேரத்தில் சிரித்தனர். டிரைவர் திருமனும் அவர்களுடன் சேர்ந்து சிரித்தான்.

கிழவிகள் மற்றும் பெண்கள் வண்டியின் டிரெய்லரில் இருந்து கீழே இறங்கத் தொடங்கினார்கள். மொத்தம் அஞ்சு பேர். மூன்று பேருக்கு ஐம்பதுக்கு மேல் இருக்கும். இரண்டு பெண்கள் முப்பதைத்தாண்டாதவர்கள். எல்லார் முகமும் வெயிலால் வியர்த்தது.

அவர்களது கருப்பு முகங்களில் இருந்து வியர்வை கொப்பளித்து ஆறாய் வழிந்து கொண்டிருந்தது.

டிரெய்லரில் இருந்து குதித்தவர்களில் ஒருவள் பஞ்சவர்ணம். அவள் தான் எல்லா சுமையாளிகளுக்கும் கொத்தச்சி. அவள் எல்லாருக்கும் முன்னதாய் நடந்து பம்புசெட் ரூமை அடைந்து, உள்ளே எட்டிப்பார்த்து,

'என்ன, இங்க கோனாரைக்காணமே! ஆளு எங்க போச்சு? எடை போட வந்திருக்கோம். ஒரு ஆளையும் காணலியே !' என உசாவினாள்.

அவளது சத்தம் கேட்டு, சிறிது நேரம் கழித்து வாழை மரங்களுக்குப் பின்புறமாய் குத்துக்காலிட்டு இருந்த வேல்ச்சாமி, அவசர அவசரமாய் தன் அரை டிராயரை மேலே இழுத்து சரி செய்தபடி,

'இந்த வந்துட்டேன்! இப்ப தான் வர்றதா? காலைல பத்து மணிக்கு வர்றேன்னு தகவல் சொல்லி விட்டுட்டு, ஒரு மணிக்கு வேகாத வெயில்ல வர்ற ஆளுகளப் பாரு!' என்று புகார் செய்தான்.

- 'நான் எங்க போயிட்டேன்? இந்த மேஸ்திரி' தான் எங்கள அங்க போ, இங்க போன்னு எடைக்கு அனுப்பிருவாரு. இதுல எல்லாம் எங்க முதலாளி தலையிடுறதே இல்ல. மம்சாபுரத்துல குட்டதட்டி கம்மாய் பக்கத்துல ஒரு எடையை முடிச்சிட்டு, வெல்லத்தை டவுன்ல கிட்டங்கில போய் எறக்கிட்டு, கஞ்சி கூட குடிக்காம நேரா இங்க வர்றோம். எங்கள கொறை சொன்னா நல்லாவே இருக்க மாட்ட' என்று விளக்கம் தந்தாள் மாடத்தி.

எடை போட வந்தவர்கள் எல்லார் தலையிலும் கதம்பம் இருந்தது.

- 'என்ன விசேஷம் இன்னிக்கு? எல்லாரும் சொல்லி வெச்ச மாதிரி, ஒரேயடியா கதம்பத்தை தலையில வெச்சுக்கிட்டு வந்திருக்கீங்க?' கேள்வியைச் சொடுக்கினான் வேல்ச்சாமி.

- 'அதான் எங்க ஊர்ல சந்தனமாரிக்கு கொடிச்சாட்டுறாங்கள்ள. அதான் எங்க ஊரு பொம்பள ஆளுக எல்லாத்தையும் மொத்தமா நிக்க

வெச்சி, அம்மனுக்கு வேண்டிக்கிட்டு, சாமிக்குத்தம் எதாச்சும் இருந்தா நீக்கு ஆத்தான்னு வேண்டிக்கிட்டாரு பூசாரி. அப்ப கடா வெட்டி பலி கொடுத்து, பூசை போட்டு எல்லாப் பொம்பளையாளுகளுக்கும் கதம்பம் கொடுத்தாங்க. அது தான் இது' என விளக்கினாள் பஞ்சவர்ணம்.

கெங்கம்மா கையோடு கொண்டு வந்திருந்த அலுமினிய தூக்கு வாளியை மரத்தடியில் வைத்து விட்டு, பம்புசெட் ரூமுக்கு வெளியே இருந்த தொட்டியில் கையைக்கழுவினாள். மற்றவர்களும் கையைக்கழுவிவிட்டு, கஞ்சித் தூக்குவாளிகளைத்திறந்தனர்.

ஆலைக்கொட்டகையின் பின்புறம் சென்ற பால் தங்கம், கத்தரி சிகரெட் ஒன்றைப்பற்ற வைத்துக்கொண்டு, கொட்டகையின் வெளியே தலையை மட்டும் நீட்டி,

- 'சீக்கிரம் கஞ்சியக்குடிச்சு முடிச்சுட்டு வந்து சேருங்க. அடுத்தது சாயங்காலம் நாலு மணிக்கு வேல் மயில் காட்டுக்கு எடை போடப்போகணும்' என்றான்.
- 'இதோ சித்த நேரத்துல வந்துர்றோம் மாமா. நீரு விட்டத்தை எடுத்துத்தொங்க விடும்' என்றாள் அழகு மீனாட்சி.
- 'யோவ், வேல்ச்சாமி, ரூமுக்குள்ள இருந்து விட்டத்தை எடுத்துட்டு வந்து தொங்க விடுய்யா. தாட்டுச்சாக்கு எங்க? கொண்டு வா. சீக்கிரம் சோலிய முடிச்சுட்டு அடுத்த காட்டுக்கு நான் போவணும்' துரிதப்படுத்தினான் பால் தங்கம்.

வேல்ச்சாமி பம்புசெட் ரூமிலிருந்து கனமான கோவில்பட்டி விட்டத்தைத் தூக்கிக்கொண்டு வந்தான். ரொம்ப கனமான உருட்டு விட்டம். கோவில்பட்டி விட்டம் என்றாலே, அது ரொம்ப முரட்டுத்தனமா, தூக்கவே முடியாதபடி இருக்கும். சின்னப் பயலுகளால் அதைத்தூக்க ஏலாது. பெரியாளுக தான் அதைத்தூக்க ஏலும். ஒரு தடவை பம்புசெட் ரூமில் மேலிருந்து வளையத்தில் தொங்கிக் கொண்டிருந்த விட்டத்தில் வேல்ச்சாமி யதேச்சையாய் தலையைக் கொண்டு மோதி விட்டான். உடனே, தலைக்குள் விண்ணென்று நெருப்புப் பொறி பறந்தது. பொட்டில் அடித்தது போல இருந்தது. தலையின் ஒரு பக்கத்தில், முண்டு மாதிரி நல்ல வீக்கம். நாலு நாளைக்கு அந்த வீக்கம் வத்தவே இல்லை.

வேல்ச்சாமி கோவில்பட்டி விட்டத்தைத்தூக்க முடியாமல் தூக்கிக்கொண்டு வந்து, ஆலைக்கொட்டகைக்குள் நுழைந்தான். அங்கு தொங்கிக் கொண்டிருந்த கொச்சக்கயிறில் அதைத்தொங்க விட்டான். விட்டத்தின் இடது புறம் தாட்டுச்சாக்கின் வெள்ளைக்கயிறைத்தொங்க விட்டான். அது பார்க்க குழந்தையின் தொட்டில் போல இருந்தது. இரும்பு வாளியைத்துடைத்து, சுத்தம் செய்து கொண்டு வந்து விட்டத்தின் வலது புறம் தொங்க விட்டான்.

தாட்டுச்சாக்கு இருந்த பக்கம் மேலே போனது. விட்டத்தின் நடுமுள் ஊசி வாளியின் பக்கம் சாய்ந்தது.

- 'என்னய்யா, சமமா இல்லயே!' பக்கத்தில் இருந்த கருங்கல்லை உடைத்து, தாட்டுச்சாக்குக்குள் போட்டான். இப்போது தாட்டுச்சாக்கு கீழே போனது. தாட்டுச்சாக்குக்குள் இருந்த கருங்கல்லை வெளியே எடுத்த வேல்ச்சாமி, அருகே இருந்த மற்றொரு கருங்கல்லின் மீது வைத்து அதன் ஓரத்தைத்தட்டிக் கொஞ்சம் பெயர்த்தெடுத்தான். உடனே, கருங்கல்லின் சில சில்லுகள் தெறித்து விழுந்தன. மீண்டும், கருங்கல்லை எடுத்து தாட்டுச்சாக்குக்குள் போட்டு, விட்டத்தின் முள்ளைப்பார்த்தான். அங்குமிங்குமாக இரண்டு பக்கமும் அது ஓடியது. மீண்டும் ஒரு சின்ன கல் துண்டை எடுத்து தட்டுச்சாக்குக்குள் போட்டான். இப்போது விட்டத்தின் முள் ஆடாமல், அசையாமல் நின்றது.
- 'யோவ், தங்கம், நல்லாப்பாத்துக்க. முள்ளு ஆடாம நிக்குது. சரியா?'

- 'நீ வச்சா சரியாத்தான்யா இருக்கும்' என அத்தாட்சி தந்தான் பால்தங்கம். அவன் வாயைத்திறந்த போது, அவனிடமிருந்து குமட்டுகிற அளவுக்கு சாராய வாடை வீசியது. எந்தக்காட்டுக்கு எடை போடப்போனாலும், முதலில் ஒரு இருபது ரூபாய் அல்லது முப்பது ரூபாய்க்கு ஒரு அவுன்ஸ் மருந்து சாப்பிட்டு விட்டுத்தான் பிறகு எடை போட காட்டுக்கு வருவான்.

வெல்லம் தூக்கும் கிழவிகள், கொத்தச்சி பஞ்சவர்ணத்துடன் தயாராய் நின்றனர். வேல்ச்சாமி, தன் இடுப்பு டிராயரில் இருந்து சாவியை வெளியே எடுத்து, வெல்லக்குச்சலின் கதவைத்திறந்து விட, உடனே கிழவிகள் குனிந்து குச்சலுக்குள் நுழைந்தனர்.

- 'போம்மா, போய் ஒரு கூடை எடைக்கட்டி எடுத்துட்டு வந்து இங்க கொட்டு' என்றான் வேல்ச்சாமி.

எடை போடும் போது, தராசு முள் சரியாக நடுவில் நில்லாது போனால், எடையைச் சரியாகப்போட பெரிய மண்டை வெல்லக்கட்டி உதவாது. பெரிய உருண்டையை உடைக்க சம்சாரிக்கு மனம் ஒப்பாது. அதனால், வெல்ல எடைக்கு முந்தின நாள், ஆலைக்காரனிடம் சொல்லி, சின்னச் சின்னதாய், விளாம்பழ அளவில் வெல்ல உருண்டைகளைப்பிடித்து உருட்டி, அதைக் குச்சலில் ஒரு மூலையில் குவித்து வைப்பான் வேல்ச்சாமி. எடை போடும் போது துல்லியமாக துலாம் நிறுக்க சின்னச்சின்ன எடைக்கட்டி தான் ரொம்பப் பிரயோசனப்படும்.

கிழவிகள் கூழைக்கூடையில் வெல்லத்தை அள்ளிக்கொண்டு வந்து, விரித்த கிஸ்தான் சாக்கில் கொட்டத்தொடங்கினார்கள். தராசு விட்டத்துக்குக்கீழே ஒரு தனி கூழைக்கூடையில் எடைக்கட்டி உருண்டைகள் இருந்தன.

- 'என்ன வேலு, ஆரம்பிச்சுருவோமா?' என்றபடி விட்டத்தைப்பிடித்து எடை போட ஆரம்பித்தான் பால் தங்கம்.
வெல்லத்தை எடை போடுதல் என்றால், விட்டத்தராசில் செய்யும் செப்படி வித்தை. கனத்த கொச்சைக்கயிறின் முடிச்சில் தொங்கும் கோவில்பட்டி இரும்பு விட்டத்தில் ஒரு புறம் தாட்டுச்சாக்குக்குள் பத்து கிலோ படிக்கல் வைக்கப்பட்டு, மறுமுனையில் இரும்பு வாளி தொங்கும். கடையில் வேலை செய்யும் கிழவிகள், வெல்லத்தை கூழைக்கூடையில் சுமந்து வந்து இரும்பு வாளியில் போட்டதும், வாளி கொக்கியில் தூக்கி மாட்டப்படும். விட்டத்தின் முள் அங்குமிங்கும் ஓடும். மேலும் ரெண்டு கட்டிகள் வாளியில் விழும். அல்லது வாளியிலிருந்து எடுக்கப்படும். வெல்லக்கடையிலிருந்து வந்து எடை போடும் ஆள் பால் தங்கம் என்றால் சம்சாரி உஷாராய் இருக்க வேண்டும். பால் தங்கம் லேசுப்பட்ட ஆள் இல்ல. தராசு விட்டத்தில் அவன் நடுமுனையை இடது கையால் பிடித்து விட்டானென்றால், சம்சாரி தொலைந்தான்.

இடது கையால் விட்டத்தின் முள்ளைப்பிடித்தபடி, யாரும் பார்க்காத வண்ணம், வலது கை ஆட்காட்டி விரலை மடக்கி, இரும்பு

வாளியை லேசாய் உயர்த்துவான். உடனே தராசு முள் எடைக்கல் இருக்கும் மறுமுனைக்கு ஓடும். உடனே, அதற்குள் ரெண்டு மூன்று வெல்லக்கட்டிகளை எடுத்து வாளிக்குள் போடுவான். தராசு முள் நடுவில் வரும் போது, இடது கை விரல்களால் அதை நிறுத்தி வைத்து, உடனே வெல்லம் இருக்கும் வாளியை உயரே தூக்கி, பனை நார்ப்பெட்டிக்குள் வெல்லத்தை சட்டென கவிழ்த்து விட்டு, சத்தமாய் 'லாபம்…' என்பான் பால் தங்கம்.

லாபம் என்றால் ஒண்ணாவது துலாம் எடை என்று அர்த்தம். சம்சாரி பார்வையில் இது கண்கட்டு வித்தை போல இருக்கும்.

கொஞ்சம் அசந்தால், அம்மியையும் குழவியையும் தராசின் எதிரெதிர் தட்டுக்களில் வைத்து இரண்டுமே சமமான ஒரே எடை தான் என்று விட்டத்தில் செய்து காட்டுவான் பால் தங்கம்.

சம்சாரி, வேறு கடையில் போய் வெல்லம் விற்க முடியாது. ஸ்ரீவில்லிபுத்தூர் டவுனில் இருந்த யாவாரிகள் எல்லாம் ஒண்ணுக்குள்ள ஒண்ணு. ஒரே கோவிலில் சாமி கும்பிடும் பங்காளிகள். மாமா, மச்சான் என ஒரு யாவாரி இன்னோர் யாவாரியை விட்டுக்கொடுப்பதில்லை.

ஊருக்குள் ஒரு காலத்தில் பதினேழு வெல்ல மண்டிக்கடைகள் யாவாரம் பார்த்த இடத்தில், இப்போது ரெண்டே ரெண்டு கடைகள் மாத்திரம் வெல்லம் கொள்முதல் செய்கின்றன. அந்த ரெண்டு பெரிய யாவாரிகளும் மாறி, மாறி பெரியகுளம் கம்மாய், மம்சாபுரம் கம்மாய், பொன்னாங்கன்னி கம்மாய் என சுத்து வட்டாரத்தில் உள்ள சம்சாரிகள் எல்லாரையும் பலி வாங்கிக் கொண்டிருக்கின்றனர்.

ரொம்ப வெவரமான சம்சாரிகள், பால் தங்கத்தை விட்டத்தைப்பிடிக்க விட மாட்டார்கள்.

ஒரு தடவை விட்டத்திலிருந்து வாளியைத்தூக்கினால், அது பத்து கிலோ. அது ஒரு துலாம். பத்து வாளி எடை போட்டால், உடனே 'ஓரை' என்பான் பால் தங்கம். சம்சாரி சுதாரித்துக்கொண்டு ஒரு கனத்த வெல்ல உருண்டையை எடுத்துத் தனியாக அடையாளத்துக்கு வைத்து

விட வேண்டும். கட்டிகளின் எண்ணிக்கையே குவிண்டால்களின் எண்ணிக்கை.

இஞ்சினியர் மாதவன் காட்டில் இதே பால் தங்கம் ஒரு தடவை எடை போடப் போன போது, அவரோட மகன் சஞ்சீவி

- 'என்ன தங்கம், இந்த இரும்புத்தராசு, இதெல்லாம் பழைய காலத்து விஷயம். நான் மதுரை டவுன்ல ஒரு கடைல, நம்பர் காட்டுற எலக்ட்ரானிக் தராசு பார்த்தேன். விலை எட்டாயிரம் தான். அதை அடுத்த தடவை இங்க வாங்கி வெச்சிரவா' என்றபடி பால் தங்கத்தை ஒரு தினுசாய் ஒரு பார்வை பார்த்தான்.

உடனே பால் தங்கம் சுதாரித்துக்கொண்டு, 'அது எதுக்கு தம்பி, உங்களுக்கு அநாவசியச்செலவு. அதெல்லாம் நமக்கு தோதுப்படாது. இந்த விட்டத்தராசுல தங்கத்தைக்கூட கிராம் கணக்குல நிறுத்துக்காட்டறேன் பாருங்க!' என்று சமாளித்துப்பதில் சொல்லி விட்டான். அன்னிக்கு இருந்து இஞ்சினியர் காட்டுக்குப்போகும்போது பால் தங்கம் நடுங்கியபடியே போகிறான். எலக்ட்ரானிக் தராசில் அவனது கை ஜால வித்தை பலிக்காது என்று அவனுக்கு நடுக்கம்…

பால் தங்கம் துவண்டு போயிருந்தான். வேல்ச்சாமி அருகில் நின்று குச்சலைப் பார்த்தான்.

- 'என்னம்மா, குச்சல் காலியா?' என்றான்.
- 'இதுக்கு மேல உள்ள ஒண்ணும் இல்ல' என்றாள் கிழவி.
- 'அப்ப இந்த எடைக்கட்டி தான் பாக்கி' என்றபடி கூழைக்கூடைகளில் மீதி இருந்த எடைக்கட்டிகளை நிறுத்த போது அது ஒரு துலாம் நின்றது.

பால் தங்கத்திற்கு உடம்பு முழுவதும் வியர்த்துக்கொட்டியது. ஏற்கெனவே, உள்ளே போயிருந்த சாராயத்தின் நாத்தம், சிகரெட் புகை நாத்தம், வேர்வை நாத்தம், பல்லில் உள்ள மஞ்சள் கோரையின் நாத்தம் எல்லாம் சேர்ந்து அவன் வாயைத்திறந்து பேசும் போதெல்லாம் குடலைப்புரட்டும் வாடை அடித்தது. தூரத்தில் நின்று பேசினால் தான் இந்த நாத்தத்திலிருந்து தப்பிக்க ஏலும்.

- 'எத்தனை ஓரை, எண்ணுப்பா வேலு' என்றான் பால் தங்கம்.

அருகில் இருந்த கோணியின் மீது கொலு பொம்மை போல எண்ணிக்கை காட்டுவதற்காக வரிசையாக வைத்திருந்த ஓரைக்கட்டிகளை விரல் விட்டு எண்ணி முடித்த வேல்ச்சாமி, 'மொத்தம் இருபத்து நாலு ஓரை தங்கம். அது போக துண்டா ஒரு ஆறு துலாம். அப்ப கணக்கு இருபத்தி நாலு அறுபது' என்று எண்ணிக்கையைச்சொன்னான்.

- 'நல்லா எண்ணுனியா? பிறகு கிட்டங்கில வெச்சு ஓலைக்கொட்டான்ல அடைக்கற போது எடை குறைவு வரக்கூடாது. நல்லா இன்னொரு தடவை எண்ணிச்சொல்லுய்யா' என்று திட்டவட்டமாய்ப்பேசினான் பால் தங்கம்.
- 'நல்லா எண்ணிட்டேன் தங்கம். நம்ம எடைல குறையே வராது. எடுத்துட்டுப் போய் கேரளா கொண்டு போனாலும் கொறைவா இருக்காது. கூடத்தான் எடை இருக்கும்' என்று நம்பிக்கை தந்தான் வேலுச்சாமி.

வெல்லம் பிடிப்பதற்காக உள்ள மரத்தொட்டிக்கு அருகில் இருந்த சதுரக் கல்லின் மீது தன் வேஷ்டியை மடித்துக்கட்டி, பட்டை நாடா அண்டர்வேர் வெளியே தெரிய உட்கார்ந்து, சிறிய வெள்ளைக்காகிதத்தில் மைப் பேனாவால், நடுங்கும் விரல்களுடன் பற்று ரசீது எழுதத்தொடங்கினான் பால் தங்கம். அவனையே உற்றுப்பார்த்துக்கொண்டிருந்தான் வேலுச்சாமி.

எழுதி முடித்து ரசீதை நீட்டியதும்,
- 'மகுமை தொகை சேர்க்கலியே தங்கம். அதையும் சேத்து எழுது' என்றான் வேலுச்சாமி.

- 'பாத்தியா, மறந்தே போயிட்டேன். ஒரு குண்டாலுக்கு அஞ்சு ரூவான்னா இருபத்து நாலு குண்டாலுக்கு நூத்து இருவது. கணக்கு சரியா?' என்றபடி ரசீதைத்திருத்தி எழுதி, மறுபடி அவனிடம் தந்தான் பால் தங்கம்.

- 'அப்ப நான் வரட்டா? வெல்லம் விலை இறங்கற மாதிரி தெரியுது. அடுத்த தடவை இந்த விலை வராது. ஆனா, நீ நம்ம கடையில வெல்லம் போட்டா, உனக்குச்சவுரியமான ரேட்டுல வெல போட்டுத்தர்றேன்' என்றவன் நகர்ந்து தண்ணீர்த்தொட்டிக்குப்போய், பிளாஸ்டிக் டப்பாவில் தண்ணீர் எடுத்து, முகம், கழுத்து, கால்களை நன்கு கழுவிக்கொண்டு, ஒரு சிகரெட் எடுத்து பற்ற வைத்து, புகையை ஆழமாக உள்ள இழுத்தபடி

- 'என்னம்மா, அப்ப கிளம்பலாமா? கெங்கம்மா, அந்த ஓலைநார்ப்பெட்டியை எல்லாம் மொத்தமா எடு. கொண்டு போய் டிராக்டர்ல போடு!' என உத்தரவிட்டு விட்டு, மீண்டும் வேஷ்டியை பட்டை நாடா அண்டர்வேர் தெரிய வழித்துக் கட்டிக் கொண்டு, வரத்து வாய்க்கால் வழியே நடந்து, வரப்பில் ஏறி, புகை விட்டுக்கொண்டே அழகம்மாள் புஞ்சையில் நின்று கொண்டிருந்த சிவப்பு டிராக்டரை அடைந்து, டிரைவர் சீட்டுக்கு அருகில், குடை போன்ற கருப்பு தார்ப்பாய் ஷீட்டுக்குக்கீழே இருந்த இருக்கையில் அமர்ந்து கொண்டு

- 'ஏ, அங்க என்ன புதுசா சமஞ்ச பொம்பள மாதிரி அசைஞ்சுக்கிட்டு வருத. வேகமா நடையைக்கட்டி வா மூதி, மூதி. நடக்கறதப்பாரு இதுகள' என்று சலித்துக்கொண்டே சிகரெட்டைக்கீழே விட்டெறிந்து விட்டு, குனிந்து நிலத்தில் காரித்துப்பினான்.

எடை போட்டு முடித்த இடம், கூளமாய்க்கிடந்தது. கூழைக்கூடைகளில் துண்டு வெல்லங்கள், எடை போடும் போது பால் தங்கம் நிராகரித்த கசிந்த வெல்லங்கள், கோணிகள், கலைந்த கிஸ்தான் சாக்குகள் என அந்த இடமே அலங்கோலமாய் இருந்தது'.

வேல்ச்சாமி தொங்கிக்கொண்டிருந்த கோவில்பட்டி விட்டத்தைப்பார்த்தான். தாட்டுச்சாக்கு கழற்றப்பட்டு, இரும்பு வாளி அகற்றப்பட்டு, அநாதையாய்த் தூக்கிலிடப்பட்டவனைப்போல அந்த விட்டம் அந்தரத்தில் தொங்கிக் கொண்டிருந்தது.

-----------------------

# 3. முருகு – 1

அந்த ஈ, நுரை வடிந்த டீ கிளாசின் மேலே மிதந்து கொண்டிருந்தது. அந்த டீ கிளாஸ் ஆர்மோனியத்தின் மேலே இருந்தது. அந்த டீ கிளாஸ், ஆர்மோனியத்தின் இடது நுனி மூலையில், அந்த ஆர்மோனியத்துக்குச்சற்றும் சம்பந்தமில்லாதது போல, அதன் விளிம்பில் நின்று கொண்டிருந்தது.

மேலும், ஒரு சலங்கைச்சப்தத்தின் அதிர்வில், அந்த செத்துக்கிடந்த ஈ அதிர்ந்ததை பொன்னுராஜன் வெகு யதேச்சையாகக்கவனித்தார். அந்த டீ கிளாஸை லாவகமாக, மெதுவாக கைகளால் உயர்த்தி கண்ணருகே கொண்டு வந்து பார்த்த பொன்னுராஜன், அந்த ஈ, செத்துக்கிடப்பதை உற்று கவனித்து விட்டு, அந்த டீ கிளாஸை, ஆர்மோனியத்தின் கீழே, இடது பக்கமாக, மேடையில் தார்ப்பாயின் மீது வைத்தார். இது அவருக்குத்தரப்படும் நாலாவது டீ. பொதுவாக மேடையேறி விட்டால், அவருக்கு டீ குடிக்கப்பிடிக்காது. வெற்றிலை பாக்கு மட்டும் தான். போதாக்குறைக்கு குடலுக்குள் போயிருந்த பட்டைச்சரக்கு அதன் வேலையைச்செய்யத்தொடங்கி விட்டால், அவருக்கு வேறு எதுவும் சாப்பிடத்தோணாது.

- ' இந்த டீ வேணாம். பெரிய டீ சாப்பிட்டுக்கறேன். அப்ப தான் சுதியைக்கிளப்ப முடியும் ' என்பார் பொன்னுராஜன். வெற்றிலை, பாக்கை நன்கு அசை போட்டு விட்டு, ஒரு தொடை புகையிலையை எடுத்து உள்ளே தள்ளி விட்டாரென்றால், கண் செருகி ஒரு ஆனந்த லாகிரி ஏற்படும். அதன் பிறகு, ஆர்மோனியத்தின் பெடலின் மீது, கால்கள் மிதிப்பதே அவருக்குத்தெரியாது. அதன் விசைகளை கைகள் அழுத்தி, அழுத்தி, உச்சஸ்தாயியில் மோகனாவிலோ, தன்யாசியிலோ பாடுவது என்பது அவருக்கு இலகுவானது. கண் முன்னே அமர்ந்திருக்கும் பட்டிக்காட்டு ஜனம் அவரது கண்களுக்குத்தெரியாது. சப்தஸ்வர உலகில், ஸ்வரங்களின் அலைகளில் மிதந்து சஞ்சரித்துக்கொண்டிருப்பார்.

- 'எனக்கு டீயெல்லாம் கொண்டு வந்து தராதீங்க. நீங்களே சாப்பிட்டுக்கங்க'. என்று எத்தனையோ தடவை தனது கோஷ்டிக்குச்சொல்லி விட்டார் பொன்னுராஜன். அவர்கள் கேட்டால் தானே!
- 'அதெப்படிண்ணே, உங்களை விட்டுட்டு நாங்க மட்டும் டீ அடிக்கறது. ஒரு மரியாதைக்காவது நாங்க கொண்டு வந்து வெச்சுருவோம் '.
- 'இல்லப்பா, சொன்னாக்கேளு. இதெல்லாம் குடிச்சா, பிறகு பாட்டு வெளிய வராதுய்யா'.

- 'அண்ணே, உங்க மேல இருக்கற மரியாதைக்கு நாங்க கொண்டு வந்து வெச்சுர்றோம். கூத்து நடத்துற பார்ட்டிக நம்ம மேல மதிப்பு வெச்சு ஒரு அஞ்சு, ஆறு தடவையாவது டீ கொடுத்து அனுப்பறாங்க. நாம தொஞ்சு போகக் கூடாதுன்னு தான். அதைக்குடிக்கறது, குடிக்காதது உங்க இஷ்டம் '.

- இது தான். இந்தப்பிரச்சனை தான், ஒவ்வொரு தடவை கூத்து கட்டும் போதும். ஒவ்வொரு கூத்தின் போதும், டீ கிளாஸ்கள் அவருக்குத்தொடர்ந்து
- அனுப்புவதும், அவர் நிராகரிப்பதும். அது ஊர் ஊருக்கு மாறுபடும். ஆனால் பெரிய டீ இல்லாமல் அவரால் பாட்டு எழுப்ப முடியாது.

ஒரு தடவை விளாத்திகுளம் பக்கம் கூத்துக்கட்ட தொடர்ந்து அஞ்சு நாள் தங்க வேண்டியிருந்தது. கூத்து நடத்தக்கூப்பிட்டிருந்த கோவில் தர்மகர்த்தா, ரொம்ப மரியாதையா நடத்தினார்.

- 'எலா, நம்ம பனந்தோப்பு குத்தகை எடுத்துருக்கற சமுத்திரப்பாண்டியை வரச்சொல்லு. அவன நான் ஒடனே பாக்கணும்னு தாக்கல் சொல்லி ஆள் அனுப்பி வை' என்று உத்தரவிட்டார்.

தோப்புக்குத்தகைக்காரன் சமுத்திரபாண்டி, பொழுது செங்கமங்கலாய் மசங்குற வேளையில, சாரத்தைக்கட்டிக்கிட்டு ஓடி வந்தான். திறந்த மார்பு. நல்ல உரமேறிய பனைமரம் போன்ற முரட்டு உடம்பு. தர்மகர்த்தா வீட்டுக்கு வந்ததும், அவர் முன்னே

கைகளைக்குறுக்கே கட்டிக்கொண்டு நின்றான் சமுத்திரபாண்டி. சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து வந்த தர்மகர்த்தா,

- 'எலா, என்ன சேதி? சௌக்கியந்தான ?! என்ன விஷயம் ? ! என்றார்.
- 'அய்யா, கூப்பிட்டு விட்டீங்களாம். சேட்டை மருதன், வீட்டுக்கு வந்து தாக்கீது சொல்லிட்டுப்போனான் '.

- 'எலா, நம்ம ஊர் சொறிமுத்து அய்யனார் கோவில் திருவிழாவுக்கு கூத்துக்கட்ட சிவகிரில இருந்து ஒரு கோஷ்டி வந்திருக்கு. அந்த ஆளுகள, தங்க, துணி மாத்த, நம்ம தோப்புக்குள்ள வுட்டுரு. அங்கயே அந்த ஆளுக ஒரு வாரத்துக்கு கிடக்கட்டும். அவுக எல்லாம் ஆட்டக்கார கோஷ்டி தான்லே. அதனால, ரொம்பப்பிரியப்பட்டு, பதினி கிதினி சாப்பிடணும்னு சொன்னா, நம்ம மரத்துல ஏறி, நீயே கள் இறக்கித்தாலே. குடிச்சிட்டுப்போகட்டும் '. கைகாட்டி உத்தரவிட்டார்.

பதினாறு பேர் கொண்ட மொத்த கோஷ்டியும், பனந்தோப்புக்குள் புகுந்தது. அவர்கள் துணி மாத்தவும், தூங்கவும் மூன்று குடிசைகள் ஏற்பாடு செய்யப்பட்டன. தோப்புக்குள் நுழைந்த பொன்னுராஜன் கோஷ்டி, வானுயர நின்ற பனை மரங்களைப்பார்த்து, திகைத்து வாய் பிளந்து நின்றது. செம்மண் புழுதிக்காட்டில், அவர்கள் தனித்து விடப்பட்டனர்.

ஊர் தர்மகர்த்தா உத்தரவுப்படி, மரமேறிய சமுத்திரபாண்டிக்கு, ஓய்வு ஒழிவின்றி வேலை இருந்தது. அவனை மரத்தை விட்டே இறங்க விடவில்லை.

- 'அண்ணேன், கொஞ்சம் மனசு வையுங்கண்ணே! என்று அவனை, அடவு கட்டும் ராஜேஸ்வரியும், நீலாயதாட்சியும் கெஞ்ச, அந்த இருவரின் முன்பக்கச் செழிப்புகளை உற்றுப்பார்த்த சமுத்திரபாண்டி, மரமேறி கள் இறக்குவதில் மும்முரமாயிருந்தான்.

மொந்தை மொந்தையாய்க்கள் இறக்கப்பட்டு, அது உடனே குடித்து கவிழ்க்கப்பட்டு, மீண்டும், மீண்டும் காலியாகவே கிடந்தது.

அன்ன ஆகாரமின்றி, ஆர்மோனியம் பொன்னுராஜனிடமிருந்து தொடங்கி, அரிதாரம் சின்னக்கண்ணு வரை, சீன் செட்டிங் பிச்சை ஆசாரி என்று ஆம்பள, பொம்பள வயசு வித்தியாசமில்லாமல் ஒரு வாரம் முழுக்க மொந்தை மொந்தையாய்க்கள் குடித்து விட்டு, கண் கலங்கிப்போய், ஒருவரை ஒருவர் வெறித்துப்பார்த்தபடி, சுருதி குலையாத மயக்கத்திலேயே கிடந்தனர்.

சமுத்திரபாண்டி எப்போதாவது தான் குடிப்பான். பிறரைக்குடிக்க வெச்சுப்பார்ப்பான். பிறர் குடிக்க வந்தா, அவருக்கு ஊத்திக்கொடுத்து விட்டு, ஏதாவது செலவுக்குப் பணம் கேப்பான். சேலைக்காரி ரேணுகா பஃபூன் வேல்துரையோட சேர்ந்து ஆடுறவ. அவ சமுத்திரபாண்டி கிட்ட கள்ளு கேட்டா. அவனும், அவளுக்கு சளைக்காம ஊத்திக் கொடுத்தான். பணம் கொடுத்தா. வேணாம்னுட்டான்.

- 'நீ என்னய்யா கேக்குறீரு?'
- 'பெறகு சொல்லுதேன் '.

ராத்திரி சேலைக்காரி ரேணுகா குடிசைக்குள்ள தூங்கிட்டு இருந்த போது, அவ காலைச்சுரண்டி எழுப்பினான் சமுத்திரபாண்டி. பெறகு அவுக ரெண்டு பேரும், காட்டுப்புல்லு ஒசரமா வளர்ந்து நின்ன இடத்துக்குப்போனாங்க.

இப்படி கூத்து நடந்த எல்லா ராத்திரியிலயும் சேலைக்காரி ரேணுகாவை எழுப்பி, எழுப்பி கூட்டிக்கிட்டு போயிட்டான் சமுத்திரபாண்டி. கட்டு உடம்புக்காரன். கரு கருன்னு முரட்டுப்பய. ரேணுகாவுக்கும் அவன வுட மனசு வரல. அவ காலைல எழுந்திரிச்சு உட்கார்ந்ததும், 'முழங்கால் ரெண்டும் நோவு எடுக்குது மாமா'ன்னு புலம்ப ஆரம்பித்தாள்.

கள் மயக்கத்தில் இருக்கும் கோஷ்டியை ஒவ்வொரு நாளும் ராத்திரி கோவிலுக்குப் பக்கமாய்த்தள்ளிக்கொண்டு போக சமுத்திரபாண்டிக்கு ரொம்ப சள்ளையாயிருந்தது. அதுவே அவனுக்குப்பெரும்பாடாகப்போய் விடும்.

சாயங்காலமாய் கள் மாந்தி விட்டு, வேட்டியைத்தொலைத்து விட்டு, சுருண்டு போயிருக்கும் ப.்.பூன் வேல்துரை, என்ன எழுப்பினாலும் எழுந்திருக்க மாட்டான். 'எழுந்திருக்கவே மாட்டேன் ' என்றும் ரகளை செய்ய ஆரம்பித்தான். குடம் குடமாய்த் தண்ணீரைக்கொண்டு வந்து அவன் மேல் கொட்டி, எழுப்பிக்கொண்டு போய், அவசர அவசரமாய் அரிதாரம் அப்பி, முகத்தில் பொய் மீசை எழுதி, விநாயக துதி பாட்டும், மீனாட்சி பாட்டும், பாடி முடித்த பின், பக்கவாட்டிலிருந்து மேடைக்குள் தள்ளி விட்டால், சனங்களைப்பார்த்து, திருதிருன்னு பேமுழி முழிச்சிக்கிட்டு நிக்குதான் அவன்.

- 'எலா, பாட்டை எடுத்து வுடு. நேரமாவுதுன்னு' பொன்னுராஜன் ஒரு அதட்டு அதட்ட, சாயங்காலம் ஏத்திய கள் போதை குறையாமல், வாய் வார்த்தையே வெளிய வராம திக்கித்திணறி பேயடிச்சவன் மாதிரி நிக்குதான் பய.

உள்ள நுழைஞ்ச சேலைக்காரி ரேணுகா, அவனுடன் சேர்ந்து கொஞ்ச நேரம் ரசம் ததும்ப கோமாளியாட்டம் ஆடணும். அவளோ ப.்.பூன் வேல்துரையைப் பார்த்து விட்டு, மைக்கில் உரக்க,

- 'எலா, என்ன இப்படி ராத்திரி நேரத்துல கோழி களவாங்க வந்த திருடன் அம்புட்டுக்கிட்ட கதையா நிக்குதீரு. விஷயத்தை வெளிய எடுத்து வுடும் ' என்று சொல்ல அதை வேறு ஒரு அர்த்தமாக்கிக்கொண்ட கூட்டம் 'ஹோய் ' என ஆர்ப்பரிக்கிறது.

அப்போதும் அந்த ப.்.பூன் வேல்துரை பேந்தப்பேந்த முழிச்சிக்கிட்டு நிக்குதான். சுத்த கோட்டி புடிச்ச பய போல.

சேலைக்காரி ரேணுகாவுக்கு வந்ததே கோவம். முஷ்டி மடக்கி, அவனை நோக்கி, 'எலா, இப்ப நீரு வாயைத்தொறவும். இல்ல, நான் குடுக்கற குடுப்புல, குடலு குதிச்சுக்கிட்டு வெளிய வரப்போவுது பாரும் ' என்று ஒரே குரலாய் அதட்டல் போட்டபடி வேல் துரையை முறைக்கிறாள் சேலைக்காரி ரேணுகா.

அடுத்த நிமிசம், எங்க இருந்து தான் அவனுக்கு பலம் வந்திச்சோ தெரியல. ஒரே துள்ளு துள்ளினான்.

- 'ஏட்டி, என்னாடி நீயும் பேசிக்கிட்டே போவுத. பொம்பளயா லச்சணமா பேசு. ஆளப் பாத்துப்பேசு. என் தைரியம் உனக்குத்தெரியாது. ஒரு விடு விட்டேன்னா கிண்ணி எகிறிடும் ' என்று உதறுகிறான் வேல்துரை.

வேல்துரை - ரேணுகாவின் முட்டல், மோதல் என்பது அவர்களுக்குள் நடக்கும் சங்கேதமான சண்டை. 'கள்ளு போதையை விட்டு விட்டு, கூத்து கட்ட ஆரம்பி' என்று ஜாடைமாடையாய் மேடையில் முழு மப்பில் இருக்கும் ப∴பூன் வேல்துரைக்கு இடித்துச்சொன்னாள் சேலைக்காரி ரேணுகா. இந்த பரிபாஷை உரையாடலும் அவர்களது கூத்தின் ஒரு பாகம் தான் என எண்ணிக்கொண்ட சனம், அந்த வசனங்களுக்கும், சவடாலுக்கும் சேர்த்து , கைதட்டி விசிலடிக்க, அதைத்தொடர்ந்து ப∴பூன் பாத்திரத்திற்கான வசன வெடிகளைத்தொடர்ந்து விடாமல் பற்ற வைக்கிறான் வேல்துரை. கூத்து களை கட்டத்தொடங்குகிறது.

பொன்னுராஜன், ப∴பூன் பாட்டுக்குப்பின்பாட்டுப்பாட, மிருதங்கம், டோலக், ஆல் ரவுண்டர், தாளம் என எல்லோரும் ஜதி சேர்க்க, 'ஜலீர், ஜலீரென்று' தாளக்கட்டு குலையாமல் பாடல்கள் ஒவ்வொன்றாய் கணீர் கணீரென்று அடுத்தடுத்து வர, விளாத்திகுளம் கூட்டம் 'ஆ' வென வாய் பிளந்து, தலையாட்டியபடியே கேட்டுக்கொண்டு, புல்லரித்துப்போகிறது. ஒரு மணி நேரம் ப∴பூன் பார்ட் முடிந்ததும், தன் இணை சேலைக்காரி ரேணுகாவோடு வேல்துரை வெளியேற, கனத்த ஆரோகணத்தோடு, அல்லி ராணி மலை வளம், காடு வளம், நாடு வளம் ஆகியவற்றைப்பாடியபடி உள்ளே நுழைகிறாள். கூத்து நல்ல சூட்டுடன் நடந்து முடிந்தது. விளாத்திகுளம் கூத்து முடிந்த பின்னரும், ஒரு நாலு நாள் ஊரிலேயே தங்கியிருந்து விருந்து சாப்பாடு சாப்பிட்டுப்போகச்சொன்னார் தர்மகர்த்தா. ரொம்ப அக்கறையோடு இப்படி அந்தக்கோஷ்டிய ஊர்லயே தங்கச்சொல்றாரேன்று எல்லார்க்கும் ரொம்ப சந்தோசம்.

விஷயம் என்னன்னு பாத்தா, அல்லி அர்ஜுனாவுல வர்ற ஒரு சேடிப்பொண்ண தர்மகர்த்தாவுக்குப்புடிச்சுப்போச்சாம். அதுனால, கூத்துக்கோஷ்டிய ஊருக்குப் போக வுடாம, விருந்து வெக்கிறேன்னு சொல்லித்தடுத்து வெச்சிருந்தாரு விளாத்திகுளம் தர்மகர்த்தா. அதெல்லாம் ஒரு காலம். தெக்குப்பக்கத்துல பொன்னுராஜன் கோஷ்டிக்கு ஏகப்பட்ட மரியாதை அப்ப...

இப்போது, வேடன் வேஷத்தில், திரையின் பக்கவாட்டில் மறைந்து நிற்கும் நம்பிராஜன், கனத்த ஆரோகணத்தோடு குரல் எடுத்து, ஆறு கட்டை சுருதியில் கணீரென்று பாடியபடி, என்னைக்கனமாக ஒரு பார்வை பார்க்க, அதன் பொருள் 'பின்பாட்டுப்பாடி வாங்க' என்பது.

இந்த நேர்த்தி எனக்கு குருநாதர் சொல்லித்தந்தது. வசனங்களுக்கு கூத்து மேடையில் வேலையே இல்லை.

'வந்தேன் மகாராஜன் நானே
வளமிகு சித்தூர் ஆளும் வேந்தன்
பொன்னே நிகர் பூமியில்
புரிந்த தவம் பெண்ணாய் வந்ததுவே'

என்று பாடியபடி நம்பிராஜன் தன்னை சபையோருக்கு அறிமுகப்படுத்திக் கொண்டு, உள்ளே நுழைந்து முதல் சரணத்தைத்தொடர்ந்தபடி, வாத்தியக்காரர்களின் வாத்தியங்களைத்தொட்டு வணங்கியபடி, மைக் முன்னே நின்று தொடர்ந்து பாட வேண்டும்.

பாட்டுப்பாடியபடி தான் எந்த நடிகரும் தன்னை அறிமுகம் செய்து கொள்ள வேண்டும் என்று நியதி வைத்தவர் வாசுதேவநல்லூர் தருமையா பிள்ளை. அவர் குரலெடுத்துப்பாடினால், சீடர்கள் கை கட்டி நின்றபடி, வாய் பிளந்து கேட்டுக்கொண்டிருப்பார்கள். அவர் காலத்தில் பாட்டே அரங்காக அமைந்தது. 'வசனம் யாருக்கு வேணும்லே! ' என்பார் தருமையா பிள்ளை. அவரிடம் பாடம் படித்த எவரும் சோடை போனதில்லை. டெல்லி சர்க்காரிடம் தங்கப்பதக்கம் வாங்கின கான லோல அதிபதி சுக சாரீர சம்பன்ன ஐராவதம், எங்கள் குருநாதர் தருமையா பிள்ளை. குருகுல வாசம் செய்து படித்தவர். தருமையா

பிள்ளை சீடர்களிடம் எதுவும் எதிர்பார்க்க மாட்டார். அவருக்குத்தேவையான அரிசி, பருப்பு, உப்பு, புளி, காய்கறி எல்லாம் யாராவது கொண்டு வந்து கொடுத்துக்கொண்டே இருப்பார்கள். அவருக்குப்பணத்திற்குக்கஷ்டமில்லை. பணம் என்ற ஒன்றே அவருக்குத்தேவையில்லை. அவருக்கு இரண்டு மனைவிகள். இருவரும் ஒரே வீட்டில் வாசம். முதல் மனைவிக்கு இரண்டு பிள்ளைகள் உண்டு.

தருமையா பிள்ளை எல்லா சிஷ்யர்களையும் மிகவும் மரியாதையாக நடத்துவார். ஒரு போதும் கடிந்து பேச மாட்டார். காலை நேர ஒத்திகையில் நடிகர்கள் பாடும் போது ஸ்வர பேதம் வந்தால் '…ம்ம்ம்… அப்படி வராது' என்று சொன்னபடி கண்ணை மூடிக்கொண்டு, நெற்றியைச்சுருக்கிக்கொள்வார். பாடம் தவறு என்று அர்த்தம்.

- 'அப்படி கிடையாதுப்பா. இப்ப நல்லா கவனிச்சுப்பாரு' என்று சொல்லி, பாட்டின் ஸ்வர ஸ்தானத்தை மிகச்சரியான ஏற்ற இறக்கங்களுடன் சொல்லித்தருவார். நல்ல, திறமையான வைத்தியன், நோயாளியின் நாடித்துடிப்பை சரியான விதத்தில் கைப்பிடித்து, இன்ன வியாதி வந்திருக்கிறது என்று சொல்வது போலிருக்கும் அவரது செய்கை.

பாடும் போது, கண்களை மூடி ஆனந்த சஞ்சாரம் செய்ய ஆரம்பித்து விடுவார். உச்சஸ்தாயியில் பிர்க்காக்களை அவர் உதிர்க்கும் போது, அவரது கண்களில் இருந்து கண்ணீர் வடிந்து விடும். பாடம் கேட்கும் நாங்கள் ரோமாஞ்சனம் ஏற்பட்டு, திகைத்து அசையாமல் நிற்போம். எந்த விஷயத்தை நினைத்து அவர் அப்படி கண்ணீர் வடிக்கிறார் என்று ஒருவருக்கும் தெரியாது. யாரும் அவரிடம் துணிந்து கேட்டதில்லை.

தருமையா பிள்ளை நல்ல ஞானவான். நன்கு சௌகரியமாச்சாப்பிட்டுப் பழகியவர். தன் சிஷ்யப்பிள்ளைகளுக்கும் நல்ல சாப்பாடே போடச்சொல்லி, அவர் தன் தர்ம பத்தினிகள் ரெண்டு பேருக்கும் உத்தரவு போட்டிருந்தார். இலையை கவனித்து, கவனித்துப்பந்தி பரிமாறச்சொல்லி அவர்களுக்கு ஆலோசனை சொல்லுவார். நெய் ஊற்றாமல் நாங்கள் மதியச்சாப்பாடு சாப்பிட்டதே

இல்லை. ஒவ்வொரு இலையிலும் இராஜபாளையம் ரஸ்தாளிப்பழம் வைக்கப்பட்டிருக்கும்.

- 'எல்லாரும் என் புள்ளைங்க தான் ' என்று பெருமையாய்ச்சொல்லிக் கொள்வார்…

வள்ளியின் அழகைப்பார்த்து விட்டு வியந்த நாரதர், முருகனிடம் சென்று, அந்தக் குறமகளை நீரே கொள்ள வேண்டும் என வலியுறுத்தும் காட்சி. நாரதராய் வருபவர் ஆரபி சாமிக்கண்ணு. ஆரோஹண அவரோஹனத்தில், இரண்டு இடுக்குகளில் புகுந்து வெளிவருவார். நல்ல கட்டான, சிவப்பு நிற சரீரம். அதனாலேயே இவருக்கு நாரதர் பார்ட் என்று என் கோஷ்டியில் நியமித்தேன்.

தலையில் குவிந்த கொண்டையும், கழுத்தில் மாலையும், அட்டை வீணையும், பஞ்ச கச்சமும், தாளக்கட்டுக்கு சப்பளாக்கட்டை சகிதம் முருகன் முன்னால் நின்று,

'காலை வேளை யெழுந்து ஓடி
கானில் வந்து நின்றேன் பாடி
சோலை நிறையோரம் ஓடி
கண்டேன் கனியொன்றை நாடி
கலகலவென ஒலி இசையுடன்
பலமுடனதை பருகுவாய் ரசம் '.

பாடிக்கொண்டே வந்த ஆரபி சாமிக்கண்ணு, நடுவே, என் பக்கமாய்ப்பார்த்து,

- 'பேயானா ?' என்றார்.
- 'என்னது ?'
- 'பேயானா ?'
- ………..

இது எங்களுக்குள் ஒரு சங்கேத மொழி. கூத்து நடத்தக்கூப்பிட்டிருக்கும் ஆட்களிடம் பணம் வசூலாகி விட்டதா என்று எங்களுக்குள் பேசிக்கொள்ளும் சங்கேதம் அது.

ஆர்மோனியத்தின் விசைகளை அழுத்தி, அழுத்தி, காலின் கீழ் உள்ள பெடலை மிதித்து,

' ஆ... ஆ... ஆ அது வந்ததே
விடும் உம் கவலையை ! '

என்று உபரியாக ஒரு கண்ணியைச்சேர்த்துப்பாடினேன். இது ஒரு இடைச்செருகல். பார்ப்பவர் ஒருவருக்கும் தெரியாது. மைக் முன் நின்று கொண்டிருந்த சாமிக்கண்ணு என்னைப்பார்த்து ஒரு அசட்டுச்சிரிப்பு சிரித்தார்.

ஆரபி சாமிக்கண்ணு நல்ல திறமைசாலி. குரலில் பிசிறு இல்லாமல் ஸ்வரம் பிரித்துக்காட்டுவார். தர்பாரியில் அவர் முழங்க ஆரம்பித்தாரென்றால், கேட்கும் ஜனம் வாயடைத்து நிற்கும். ஒரு தடவை அந்தப் பாட்டைக்கேட்ட கரிவலம் ஜமீன்தார் நாடக மேடையேறி, அதே இடத்தில் புலி உருவம் பதித்த பதக்கத்தை பரிசாகக்கழுத்தில் போட்டு விட்டார்.

- இப்போது நாரதர் சாமிக்கண்ணு என்னிடம் 'பேயானா? ' என்று கேட்கிறார். எங்கள் குருநாதர் தருமையா பிள்ளையிடம் ஒரு போதும் 'பேயானா' என்று நாங்கள் கேட்டதேயில்லை. பணம் என்பதெல்லாம் ஒரு பொருட்டாக அவர் நினைத்ததேயில்லை.

சாப்பாடு போட்டு, துணிமணி கொடுத்து, வைத்தியம் பார்த்து, நல்ல நாள் விசேஷங்களுக்கு தன் செலவில் எங்களை சொந்த ஊருக்கு அனுப்பி வைத்து விட்டு, நாங்கள் மீண்டும் திரும்பி வந்ததும், வீட்டில் உள்ள சேம லாபங்களை அன்போடு விசாரிப்பார். அவரது அனுசரணையான பேச்சுக்கு முன் 'பேயானா?' என்று சொல்லி, எங்கள் தகப்பன் - பிள்ளை உறவைக்கொச்சைப்படுத்திக் கொள்ள விரும்பவில்லை. தென்காசி சுப்பராமு அப்படி ஒரு தடவை அவரிடம் கேட்டான்.

- 'அய்யா, எங்களுக்கு ஏதாவது மாதச்சம்பளமாப் பார்த்துப்போட்டுத்தாங்களேன்'. ஒரு நாள் இரவு, சங்கரன்கோவிலில்

கூத்து முடிந்ததும், துணிந்து கேட்டான். தருமையா பிள்ளைக்கு பேச்சே எழவில்லை. அடுத்த மாதமே அவனைக் கூப்பிட்டு, தன் கையிருப்பில் இருந்த இன்னொரு ஆர்மோனியப்பெட்டியையும், டோலக் ஒன்றையும் அவனிடம் கொடுத்து, 'எங்கயாவது தனியாப்போய் கூத்துக்கட்டிப்பிழைச்சுக்க' என்று சொல்லி வழிச்செலவுக்குப்பணமும் கொடுத்து, அவனை அனுப்பி வைத்து விட்டார். தென்காசி சுப்பராமுவின் குருகுல வாசம் அத்தோடு முடிந்து போனது.

இன்றைக்கு மேடையிலேயே நாரதர் சாமிக்கண்ணு 'பேயானா?' என்று நேருக்கு நேர் முகம் பார்த்துக்கேட்கும் நிலை. அதற்கும் காரணம் இருக்கிறது. இன்று இந்த சாமிக்கண்ணுவை விட்டு விட்டால், இதே நாரதர் பார்ட் வேஷம் போட திறமையான ஆள் இந்த வட்டாரத்தில் இல்லை. திண்டுக்கல் நடேசனார் நாரதர் பார்ட் போடுவதில் சமர்த்தர். ஆனால், அவருக்கு சம்பளம் கொடுத்துக் கட்டுபடியாகாது. வந்து உட்கார்ந்ததுமே, 'எடு குப்பியை' என்று தான் பேச்சைத் தொடங்குவார்.

இந்த ஒரே காரணத்துக்காகத்தான் அவரைக்கூப்பிடுவதில்லை.
சம்பளம் கட்டுபடியாக வந்தால் தான் ஆட்களைக்கூப்பிடுவது என்ற வழக்கத்தை ஏற்படுத்தியாயிற்று…

வள்ளி உள்ளே நுழைகிறாள். ஜனங்கள் அவளை ஆவலோடு உற்றுப் பார்ப்பது தெரிகிறது. ஆறு வருஷமாய் என் கோஷ்டியில் இருக்கிறாள் இந்த நீலாயதாட்சி. எந்த பார்ட் கொடுத்தாலும் பாடம் தப்பாமல் பாடிக்காட்டி விடுவாள். முதலில் மென்மையான, குழைவான குரலில் பாடிக் கொண்டிருந்தாள். இவள் பாட்டைக்கேட்டு விட்டு, கூட்டம் தலையாட்டுவதைப் பார்த்திருக்கிறேன். ஆறு வருடங்கள் தொடர்ந்து மேடையில் கத்தியதில் குரல் உடைந்து போய், அவள் இப்போது, 'என்னண்ணே, வாங்க. சாப்பிடப் போகலாமா?' என்று சாதாரணமாய்ப்பேசினால் கூட அது கர்ண கடூரமாய்க்காதில் விழுகிறது.

இதற்கு முன்னால் கரூர் சுந்தரவதனம் முதலியாரிடம் அவளுக்குக்குருகுல வாசம். மேடையில் வெண்கலக்குரலில் சாமி பாட்டுப்பாடி கூத்தைத்தொடங்கி வைத்ததே இவள் தானாம். இப்போது

இவளிடம் ஏழு கட்டை சுருதி. அது முரட்டுக்குரலாய் இருக்கிறது. இருந்தாலும் பாடத்தை மறக்காதபடியால், இவளை இங்கு ஆட விட்டிருக்கிறேன்.

வேடனாய் வந்த முருகன் வள்ளியைப்பார்த்து,

'ஆலோல மென்று குரல் காட்டி வீசும்
இந்த அரும் புனத்தே
சேலோடும் கண்ணைத் தினை மீது வைத்த
சிங்காரி தன்னைக்
காலோடு கால் சேர்த்தனு ராக போகக்
கலவி செய்தால்
பாலோடு சேர்ந்த பழம் போல்
தித்திக்கும் பழுதில்லையே! '

என்று நீண்டு முழக்கி விட்டு, காட்டுக்கு வந்த காரணத்தைச்சொல்லும் போது, முருகன் வள்ளியின் மார்பை உற்று நோக்கி விட்டு,

'சாயாத கொம்பிரண்டிருந்தாலும், தலை நிமிர்ந்து
பாயாத மான், அம்மானைத் தேடி வந்தேன் ஆரணங்கே!'

என்று பாட, இதே வரிகளைப்பல தடவை பாடிப்பாடிக்கேட்டபடியால், சலித்துப் போன வள்ளி, என் பக்கமாய்த்திரும்பி, முகத்தில் வெட்கத்துடன் சின்னதாய் ஒரு சிரிப்பு. அதைத்தொடர்ந்து என்னையே உறுத்துப்பார்க்கிறாள். ஊடுருவும் அந்தப்பார்வை. கண்கள் ஊசிகளாய் என் மீது பாய, ஆர்மோனியத்தின் விசைகளில் பாவும் என் விரல்கள், ஒரு கணம் தடுமாறி, சுருதி குலைந்து, சரளி வரிசை தடுமாறி, பிறகு சுதாரித்துக்கொண்டு, மீண்டும் தாளக்கட்டில் ஸ்வரஸ்தானத்தை நான் பிடிக்க, இப்போது நீலாயதாட்சி என்னைப்பார்த்துக் கட்டுக்குலைந்தது போல் ஒரு சிரிப்பு சிரிக்க, நான் விட்ட இடத்திலிருந்து பாட்டைத்தொடருகிறேன்.

கூத்துக்காரன் நிலை தடுமாறும் இடம் இது தான். பாட்டுக்காரன், கூத்துக்காரன் ரெண்டு பேருக்குமே அவ்வப்போது உடல் தினவெடுக்கும். குப்பி குப்பியாய்க் கள் குடிக்கத்தோன்றும். எதையாவது வயிறு நிரம்ப தின்று விட்டு, பஹோ வென்று காலை

விரித்து, ஒட்டுத்துணியில்லாமல் திண்ணையில் படுத்துத்தூங்க மாட்டோமா என்று மனம் ஏங்கும். பல வருஷங்களாய் எனக்கு இந்த வேதனை இருந்தது. உடல் தினவெடுத்தது.

மொத மொதலா கூத்துக்கட்ட மேடையேறிய ஆரம்ப வருஷங்களில், கண்கள் மயங்கித்தவித்தன. உணர்வு நிலை கொள்ளாமல், ஊழிக்கால சமுத்திரம் பொங்கியது போல பெரிய வானுயர அலைகளோடு, ஜலப்பிரவாகமாக பொங்கித்ததும்பி வழிந்தது. எதையாவது கட்டிப்பிடித்துக்கொண்டு ஆற்றாமையைத்தணித்துக்கொள்ள மாட்டோமா என்று மனசு துடிதுடித்தது.

என்னைச்சாந்தப்படுத்தியவள் கொல்லம் வசுந்தரா. பவளக்கொடியில் சுபத்ராவாக வருபவள். வசுந்தராவிடம் கொஞ்சமும் வஞ்சனை கிடையாது. செங்கோட்டையில் கூத்து நடந்த போது, என் கோஷ்டியில் வந்து சேர்ந்து கொண்டவள். அட்சர சுத்தமாய்ப்பாட்டுப்பாடுவாள். வசனம் மட்டும் கொஞ்சும் தமிழாய் இருக்கும். அந்த ஒரே காரணத்திற்கான அவளது பேச்சு அனைத்தையும் பாட்டுக்களாக எழுதித்தர வேண்டியதாயிற்று. ஒத்திகையின் போது,

- 'என்ட ப்ரியப்பட்ட அர்ச்சுனரே, பின்னே அல்லி ராணியை நோக்க அவ்விட போயோ ?!' என்று வசனத்தை எடுத்து விட, மொத்த நடிகர்களும் 'கொல் ' லென்று விழுந்து சிரித்தனர்.

சுபத்திரைக்கு தமிழ் வகுப்பு எடுக்க வேண்டியதாயிற்று. ஆறு மாதம் குருகுலத்தில் அவளுக்குத்தமிழ்ப்பாடம். பிறகு, ஒரு நாள், கொல்லத்தில் உள்ள தன் வீட்டிற்கு வந்து, தங்கி விட்டுப்போகுமாறு அழைத்தாள்.

கடற்கரையோரமாய் வீடு. அதிக ஆள் நடமாட்டம் இல்லாத இடம். முதல் நாள், சாப்பிட்டு முடித்து, இரவில் திண்ணையில் உட்கார்ந்து இருந்த போது, வெற்றிலைத்தட்டு வந்தது. வெற்றிலை போட்டு முடித்ததும், உள்ளே வருமாறு சொன்னாள். என் வாய் நிறைய குதப்பிய வெற்றிலை சிவப்பாய் இருக்க, உள்ளே நுழைந்தேன். படுக்கை விரிக்கப்பட்டிருந்தது.

நல்ல சாணமிட்டு மெழுகிய தரை. குளிர்ந்து இருந்தது. மேலே ஓடு வேய்ந்த வீடு. நல்ல குளிர்ந்த தெங்கின் காற்று, இதமாய் வீசிக்கொண்டிருந்தது. காலதர் வழியே நிலவு வெளிச்சம் பாலாய்ப்பொழிந்து கொண்டிருக்க, வசுந்தரா தன்னுடைய மற்றும் என்னுடைய நாணத்தை, உடுத்தியிருந்த ஆடைகளோடு சேர்த்து ஒரு மூலையில் தொலைத்து விட்டு, என் மேல் மூர்க்கமாய் விழுந்து இயங்கிக்கொண்டிருக்கும் போது, அவள் வெற்றிலையைக்குதப்பிக் கொண்டிருந்தாள்.

அதன் பிறகு, அவள் கூத்து மேடை ஏறவில்லை. நான் ஊர் திரும்பி, தஞ்சாவூர்ப் பக்கம் உள்ள கோவில்களில் வேறு பெண்களை வைத்துக்கொண்டு, பவளக் கொடியும், தாரா சசாங்கமும், ருக்மிணி கல்யாணமும், சீமந்தனியும், இலங்கா தகனமும் ஆடிக்கொண்டிருந்தேன். அந்த வருஷம் கார்த்திகையில் வசுந்தரா கருவுற்றிருப்பதாகத்தகவல் வந்து சேர்ந்தது. அக்கம் பக்கத்தில் தெரிந்தவர்களிடம் கடன் வாங்கிக்கொண்டு, புடவை துணிமணிகள், புள்ளத்தாய்ச்சிக்கு வாய்க்கு ருசியான நல்ல பட்சணங்கள், கண்ணாடி வளையல்கள் சகிதம் கொல்லத்திற்கு ரயில் ஏறி, அவளது வீட்டிற்குப் போனேன்.

தாழ்வாரத்தில் மெதுவாக நடந்து கொண்டிருந்தாள். என்னைப்பார்த்ததும் உருகிப்போனாள். கைகளைப்பிடித்துக்கொண்டு, தன் மார்போடு சேர்த்து வைத்துக்கொண்டு, 'நன்னி' என்றாள். கண்களிலிருந்து பொல பொலவென கண்ணீர் வடிந்தது.

- 'ஏன் அழுற வசுந்தரா!'
- 'இது இப்போள் நான் கரைஞ்சிட்டில்லா. ஆனந்த பாஷ்பமாக்கும். பின்னே, நிண்ட சாரீரத்தோட, ஒரு வல்லிய கலாகாரன் போலே எனிக்கு ஒரு புத்திரன் ஜனிக்கும் அல்லே !? என்றாள்.

வசுந்தராவை அப்படியே வாரிக்கட்டிக் கொண்டு முத்த மழை பொழிந்தேன்…

இப்போது, முருகன் விருத்தனாக வந்து வள்ளியை அடைய முயல, வள்ளி அலற, முருகன் விநாயகரை வேண்டுதல் செய்ய, ஃபூன் வேல் துரை, துதிக்கை உருவம் கொண்ட முகமூடியோடும், பஞ்ச கச்சத்தோடும் மேடையில் நுழைந்து, சனங்களுக்கு முகம் காட்டாதபடி

வந்தான். எங்கள் கோஷ்டிக்கு மட்டும் விஷயம் தெரியும் என்றபடியால், சிரிப்பை அடக்க முடியாதபடி, நான் குனிந்து கொண்டே ஆர்மோனியத்தின் விசைகளை அழுத்தியபடி பாடிக்கொண்டிருந்தேன். பக்கத்தில் இருந்த மிருதங்கம், ஆல் ரவுண்டர் நாகேஸ்வரனுக்கு விஷயம் விளங்கிப்போனது. அவன் கீழ் உதட்டைக்கடித்தபடி ஒரு நமட்டுச்சிரிப்பு சிரித்து, பக்கத்தில் இருந்த தாளம் கோபாலைப்பார்க்க, அவனும் இந்த சிரிப்பில் சேர்ந்து கொள்ள, அதற்கு மேல் பொறுக்க மாட்டாமல், அருகில் ஆர்மோனியத்தின் பக்கத்தில் உள்ள மர மேசையில் மிருதங்கத்தின் கீழே கிடந்த செவ்வந்தி, கனகாம்பரம் மாலையை எடுத்து அதைக் கைகளில் உதிர்த்தபடி, மைக்கின் முன்னே தொண்டை புடைக்கப்பாடிய களைப்பில் கண்கள் சிவந்து, தூக்கத்திற்காகத் தவிக்கும் தம்பதி சமேதரான முருகன்-வள்ளி மீது தூவி வைக்க, அவர்களும் கல்யாணப்பாடல் எதுவும் பாடாமல், மெதுவாக மங்களம் பாட ஆரம்பிக்க, இரவு முழுவதும் உடலில் தேக்கி வைத்திருந்த சோர்வு கை விரல்களின் நுனிகளில் வந்து நிற்கிறது. விரல் முனைகள் ஆர்மோனியத்தின் விசைகளில் சோர்வோடு இறங்குகின்றன.

இந்த மென்மையான, வழுவழுப்பான பரப்பு போலத்தானே வசுந்தராவின் சருமமும்! இந்த விசைகளின் இளமஞ்சள் நிறம் போலத்தானே அவளது எலுமிச்சை நிற மேனியும். இதே மென்மை அவளது பருத்த மார்புகளிலும். இந்த விசைகளில் விரல்கள் இறங்குவது போல அவள் மேனியெங்கும் என் கைவிரல்களைப்பதிக்க அனுமதித்தாள். ஸ்வரங்களில் ஒவ்வொன்றாய் ஆலாபனை செய்கிறேன். வசுந்தரா நெளிகிறாள். இன்னும் விசைகளில் வேகம் கூட்டுகிறேன். வசுந்தரா இனிமையாய் முனகுகிறாள். அவளது சந்தன மேனி எங்கும் என் விரல்கள் பரவுகின்றன. வசுந்தரா உச்சஸ்தாயியில் இன்ப வேதனைகளை எழுப்புகிறாள். விசைகளின் வேகம் உச்சத்தைத்தொட்டு நிற்க, அவள் மோன நிலையில் மேலெழும்பி பெரும் ஆரவாரத்தோடு உயர்ந்து, பிறகு சரேலென்று தொய்ந்து விழுந்து விடுகிறாள்…

மிருதங்கம் ஆல் ரவுண்டர் நாகேஸ்வரன் காக்கி நிற முரட்டு துணிக்குள்ளே மிருதங்கத்தை நுழைத்துக் கொண்டிருக்கிறான். தாளம் கோபால் ஏற்கனவே மேடையை விட்டிறங்கிப்போய் விட்டான். நடிகர்கள் அரிதாரத்தைக்கலைத்தபடி பேசிக் கொள்ளும் சப்தம், இங்கே மேடை

வரை கேட்கிறது. மேடையின் முகப்பு விளக்குகள் அணைக்கப்பட்டு, சவுண்ட் சர்வீஸ்காரன் மேடை மேலே ஏறி, தொங்கும் மைக்கை மெதுவாகக்கழட்ட ஆரம்பிக்கிறான்.

மேடையில் மங்கலான ஒரு ஒற்றை விளக்கு ஒளிருகிறது. மேடைக்கு சற்று தொலைவே, பல தொலை தூர கிராமத்து சனங்கள் ஏற்கனவே வெட்ட வெளித் திடலிலேயே அலங்கோலமாக சுருண்டு கொண்டு தூங்கி விட்டார்கள்.

தூரத்தே சிலர் சைக்கிள் மிதித்து ஏறியபடி, கூத்தை விமர்சனம் செய்து பேசியபடி போகின்றனர். சில்லென்ற பனிக்காற்று தோலைத்துளைக்கிறது. எனக்கும் கண்கள் சொக்கிக்கொண்டு வருகிறது. ஆர்மோனியத்தின் மேலேயே படுத்துவிடலாமா? ச்சே.. சே.. அது கூடாது. நீளமான, செவ்வக மேல் மூடியை எடுத்து, அதன் மேல் பொருத்தி, துணியால் மூடியபடி ஆல்ரவுண்டர் நாகேஸ்வரனைப்பார்க்க,

- 'அண்ணேன், நான் எடுத்து வெச்சுக்கறேன். நீங்க சோர்ந்துட்டீங்க. உள்ள போய் படுங்கண்ணேன். இங்க வேணாம். உள்ள போயிடுங்க' என்று சொல்ல, நானும் தலையாட்டியபடியே மூன்று படியிறங்கி, மேடைக்குப்பின்புறம் உள்ள கல் திண்ணையில் துண்டை உதறி விரித்து, கால்களை நீட்டிக்கொண்டு, உடம்பை தளர்த்திக்கொள்ளும் முன்னரே, உறக்கம் முழுவதுமாய் அப்படியே என்னை மூடிக்கொள்கிறது.

---------------------------------------

# 4. முருகு -2

" ஒவ்வொரு பெண்ணும் தன் வாழ்நாளில் ஒரு முறை, காதல் தேவனின் கோவிலில் அமர்ந்து, யாரோ ஒரு அன்னியரோடு உறவு கொள்ள வேண்டும் என்று பாபிலோன் நகரத்தின் தொன்று தொட்டு வரும் பழக்கநெறி கண்டிப்பாக வலியுறுத்துகிறது…!"

**-- ஹீரோடோட்டஸ், கிரேக்க வரலாற்று ஆசிரியர் - கி.மு. 3-ம் நூற்றாண்டு.**

---------------------

அந்தத்தெரு முனையில், தலையில் பளபளத்த வெண்கலக்கிரீடத்துடனும், கையில் நீண்ட வெண்கல வேலுடனும் முருகன் நின்று கொண்டு, எந்தப்பக்கம் போவது என்று தெரியாமல் பராக்கு பார்த்துக்கொண்டிருந்தான். முருகனின் முதுகு வியர்த்திருந்தது. அரிதாரம் பூசப்பட்ட முகத்திலும் வியர்வை வழிந்து கொண்டிருந்தது. கழுத்தின் மேல் சூடியிருந்த ரோஜா மாலை வாடாமல் மணந்து கொண்டிருந்தது. இடுப்பில் கட்டியிருந்த பொய் ஜரிகை இழைத்த பழுப்பு நிற பஞ்ச கச்ச வேஷ்டிக்குள்ளும் வியர்வை கசிந்து, பிருஷ்டத்தில் எரிச்சல் கொடுத்தது. கையில் பிடித்திருந்த வெண்கலத்தாலான வேல், இருட்டிலும் விபூதி, குங்கும இழைகளால் ஒளிர்ந்தது. காலில் தண்டை. தோல் செருப்புக்களை நாடகக்கொட்டகையிலேயே விட்டு விட்டு நேராக வீதிக்கு வந்து விட்டார் முருகன்.

இப்போது வழி காட்டிக்கொண்டு முன்னால் சென்று கொண்டிருந்த ஆளைக் காணவில்லை. சில தப்படிகள் முன்னே சென்று கொண்டிருந்தவன் திடீரென்று எங்கு காணாமல் போய் விட்டான்? அந்தச்சிறிய கிராமத்தில், அந்தத்தெரு முனையில் இருந்து தெருக்கள் இரண்டாகப்பிரிந்து ஒன்று வடக்கும், ஒன்று தெற்குமாகப்பிரிந்து போகின்றன. சிறிய சரளைக்கல் பாவிய சாலையில், தனக்கு முன்னே சென்று கொண்டிருந்தவனை எப்படி பின் தொடருவது என்று தெரியாமல், அங்கு தெரு முனையில் நின்று கொண்டிருந்த முருகனுக்கு, தான் வந்திருந்த காரியத்தை நினைத்துப்பார்த்ததும், மேலும் வியர்த்துக்கொட்டியது. இதையெல்லாம் தான் செய்யத்தான் வேண்டுமா என்று தன்னைத்தானே கேள்வியும் கேட்டுக்கொண்டான்.

மேடையில் வள்ளியுடன் மணக்கோலத்தில் நின்று திருமணம் செய்து, மாலை மாற்றிக்கொண்டாகி விட்டது. மாலை மாற்றும் போது

அதிகாலை சுமார் மூன்று மணி இருக்கும். வள்ளியுடன் மாலை மாற்றும் போதே உடலில் மிகுந்த களைப்பு ஏற்பட்டு சோர்வு மேலிட்டது. கண்களில் இருந்து நெருப்பு பறந்தது.

மிகுந்த ஆயாசத்துடன் கொட்டாவியே வந்து விட்டது. மிகவும் கஷ்டப்பட்டு, வாயில் நின்ற கொட்டாவியை அடக்கிக்கொண்டு, கடைசியில் வேகம் வேகமாய் மங்களம் பாட வேண்டியதாயிற்று. மேடையில் கொட்டாவி விட்டால் ஆர்மோனியம் பொன்னுராஜன், அதே இடத்தில் சத்தம் போட்டுக்கண்டிப்பார்.

- 'நீ மேடையேறிட்டா சுறுசுறுப்பா இரு. உன் பங்கை முடிச்சிட்டு, நீ கீழே இறங்கிட்டா உன்னைத்தடுக்கவே மாட்டேன். என்ன ஏதுன்னு ஒரு சொல்லு சொல்ல மாட்டேன்'. என்று முதலிலேயே திட்டவட்டமாய் அதிகாரமாய்ச்சொல்லி விட்டுத்தான் தனது கம்பெனி ஆட்களை மேடையேற்றுவார் ஆர்மோனியம் பொன்னுராஜன்.

அவரது முகம் பார்த்துக்கூட எதுவும் பேசத்தோணாது. தரையைப்பார்த்துக் கொண்டு தான் அவரிடம் பேசுவது அவன் வழக்கம். கூத்து ஒரு தெய்வீகக்கலை. அதை முழுசுமாய் பாடம் சொல்லித்தந்தவர் ஆசான் பொன்னுராஜன்…

சற்றே தயக்கத்துடன் நின்று கொண்டிருந்த அமுதவாணன், சிறு சலசலப்பு கேட்டுத்திரும்பிப்பார்த்தான். முன்னே வழிகாட்டிச்சென்று கொண்டிருந்த ஆள், மீண்டும் திரும்பி வந்து, சிறு சந்தில் நின்று இவனைப்பார்த்தான். பிறகு 'ஷ் ஷ் ஷ்' என்று மெல்லிய கிச்சு முச்சு சப்தத்துடன் சங்கேதமாய்க்குறிப்பு தந்தான்.

'ஷ் ஷ் ஷ்… ஷ் ஷ் ஷ்'

வலது கையை அசைத்து, தன் பின்னே வருமாறு சைகை செய்தான். மை கொட்டியது போன்ற கருப்பு இருட்டில் அவன் சைகை செய்வதை உற்றுப் பார்த்த முருகன், தன் கையில் இருந்த வெண்கல வேலைத்தூக்கிப் பக்கவாட்டில் கிடையாகப்பிடித்தபடி அந்த வழிகாட்டியைப்பின்தொடர்ந்து போனான்.

முன்னே சென்ற வழிகாட்டி, இப்போது திரும்பிக்கூடப்பார்க்காமல் தனது வழியில் வேகமாய் நடையெடுத்துப்போய்க்கொண்டிருந்தான்.

அந்தக்குறுகலான ஆறடி அகலச்சந்தின் இருபுறத்திலும் வீடுகள். உள்ளே பூட்டப்பட்ட வீடுகள். விளக்கொளியில் நிழல்களாகத்தெரிந்தன. பெரிய விசாலமான திண்ணைகள்.

பெரிய பஞ்சாரத்துக்குள் அடைபட்டுக்கிடந்த கோழிகளின் துல்லியமான 'க்ளக்…க்ளக்…' சத்தங்கள் இடையிடையே பக்கத்துத்தெருவில் இருந்த வந்த ஒற்றை நாயின் ஊளை. மினுக்… மினுக்கென்று சிமிட்டி, சிமிட்டி எரியும் தெரு விளக்கு. தோலைத்துளைக்கும் வாடைக்காற்று. அந்தக்கிராமத்துக்கே அந்நேரத்தில் பொதுவான விஷயம், ஆழ்ந்த குறட்டையுடன் கூடிய உறக்கம் தான்.

தெரு முனையில் தெரு விளக்கின் வெளிச்சம் தெரிந்தது. தட்டுத்தடுமாறி சென்று கொண்டிருந்த வழிகாட்டி, அந்தத்தெருமுனையில் நின்று கொண்டிருந்த வாதராட்சி மரத்தினை ஒட்டி இடது பக்கமாய் அங்கு இருந்த பாதையில் சரேலென்று திரும்பி, நான்கு வீடுகளைக்கடந்து போனான்.

ஐந்தாவது வீட்டின் வெளிப்புறக்கதவின் சமீபமாய் நின்று, திரும்பிப்பார்த்தான். தன்னைப்பின்தொடர்ந்து வந்து கொண்டிருந்த முருகனிடம்,

- 'இதோ இந்த வீடு தான் நாம் வர வேண்டிய இடம் ' என்ற அர்த்தம் தொனிக்கும் ரீதியில் ஒரு தடவை தலையை மேலும் கீழுமாய் அசைத்தான்.

பின் தொடர்ந்து வந்த முருகன், நேராய் அந்த வழிகாட்டியின் பின்புறம் பதுங்கி நின்றான். இப்போது வழிகாட்டி தனக்கு முன்னே நின்றிருந்த உயரமான கோட்டைச்சுவரை ஒரு பார்வை பார்த்தான். அரை இருட்டிலும் அந்தக் கோட்டைச்சுவரின் பிரம்மாண்டம் தெரிந்தது. கரும்பூதம் ஒன்று உடல் பரப்பி, தலை உயர்த்தி வானுயரத்தொட்டுக்கொண்டு பரந்து நின்றது போன்ற உயரமும், அகலமும்.

கோட்டைச்சுவரின் பின்பக்கக்கதவை, வழிகாட்டி மெதுவாய்த்தள்ளினான். கதவு உள்வாங்கியது. உள்ளேயும் மையிருட்டு. கதவின் இரும்பு கீல்கள் எண்ணையிடப்படாததால் அதன் துரு கிரீச்சிட்டு, கர்ண கடூரமாய் சப்தம் எழுப்பின.

பைய அடியெடுத்து முன்னே வந்தவன், தனக்குப் பின்னே தயங்கி சுவருக்கு அப்பால் வெளியே நின்ற முருகனைப்பின்தொடர்ந்து வருமாறு சைகை செய்தான். நல்ல இருளிலும் அந்த சைகை தெரிந்தது. பின்னர் மெல்லிய குரலில்,

- 'பாத்து உள்ள வாங்க. இது நம்ம அம்மா வீடு தான் '.

முருகன் தயங்கினான்.

- 'சும்மா தைரியமா உள்ள வாங்க. நம்ம அம்மா வீடு தான். ஒண்ணும் பயம் வேணாம் '.

முருகன் தயங்கியபடியே மெதுவாய்த்தன் முதல் காலடி எடுத்து உள்ளே வைத்தான்.

உள்ளே தெரிந்த கொல்லைப்புறம் ஒரு விளையாட்டு மைதானம் போலப் பரந்து கேட்பாரற்றுக்கிடந்தது. கொல்லைப்புறத்தில் இருந்த பிறைக்குழி மாடத்தில் இருந்து வந்த விளக்கு வெளிச்சத்திலும், மாட்டுக்கொட்டத்தின் மேலே தொங்கிக்கொண்டிருந்த எலக்டிரிக் பல்ப் வெளிச்சத்திலும், வீட்டின் பின்புறம் தெளிவாய்த்தெரிந்தது. அந்தப்பெரிய வீட்டின் பின்பக்க முடிவில் கட்டிட முகப்பு வளைந்திருந்தது. அந்த சரிந்த கட்டிட வளைவின் மீது பசலைக் கொடி படர்ந்திருந்தது.

படியேறிச்சென்ற வழிகாட்டி, பெரிய மாளிகையின் உள்ளே நுழைந்து, அதன் வலது புறம் இருந்த அறை முன்பு நின்றான். முழுதும் தேக்கினால் இழைக்கப்பட்ட கதவு. அதன் மீது இளம் கன்னியின் பிஞ்சு மார்புகள் போன்ற வெண்கலப்பூண்கள். வழிகாட்டி மிக ஜாக்கிரதையாய் அந்தக் கதவை இரண்டு முறை தட்டினான்.

- 'பெத்தனாட்சி அம்மா. நான் தான் வையாபுரி வந்திருக்கேன். கதவைக் கொஞ்சம் தொறங்கம்மா!!

சில நிமிட மௌனம். இந்த ஆள் வருவான் என்று முன்பே தெரிந்து கொண்டு காத்திருந்தது போலக்கதவைத்திறந்து கொண்டு பெண் ஒருவள் வெளியே வந்தாள்.

முழு தீட்சண்யமான முகம். மாநிறத்தில் இருந்தாள். தலையில் ஆங்காங்கே நரை கூட எட்டிப்பார்க்க ஆரம்பித்து விட்டது. அகலமான நெற்றி. முடித்த கூந்தல் ஈரமாய் இருந்தது. பருத்த, புஷ்டியான உடல். நல்ல உயரம். குழைந்த இடுப்பு. உடலின் போஷாக்கிலேயே அவளது செல்வச்செழிப்பு தெரிந்தது.

- 'முருகா, உள்ள வந்திருங்க…'
- '…….'
- 'முருகா, உள்ள வாங்க. இது நம்ம வீடு தான் முருகா'.

வெளியே வந்து நின்ற பெத்தனாட்சி, இப்போது முருகனின் பக்கத்தில் நின்று கொண்டிருந்த வையாபுரியை ஒரு அர்த்தமுள்ள, கனமான பார்வை பார்க்க, அதைப்புரிந்து கொண்ட அவன், பெத்தனாட்சியைக் கையெடுத்துக்கும்பிட்டு விட்டு, அந்த இடம் விட்டு அகலுகிறான்.

- 'முருகா, உங்க காலடி எடுத்து வெச்சு உள்ள வாங்க. நீங்க வருவீங்கன்னு தான் ராத்திரி முழுக்க கொட்டக்கொட்ட கண் முழிச்சுக்கிட்டே இருந்தேன். இப்பத்தான் குளிச்சிட்டு விபூதி பூசிக்கிட்டு உட்கார்ந்திருந்தேன் !.

முருகன் அந்த அறையினுள் காலடி எடுத்து வைத்து உள்ளே நுழைகிறான். நல்ல விசாலமான அறை. அறையின் கிழக்கு மேற்கு மூலைகளில் அலங்காரப் பூந்தொட்டிகள். பழைய காலத்து காரைச்சுண்ணாம்பு பூச்சு பூசிய சுவர்கள். அந்த அறை பார்க்கப்பளிச்சென இருந்தது.

உள்ளே அழைத்துச்சென்ற பெத்தனாட்சியின் முழு உருவம் இப்போது தான் தெரிகிறது. நல்ல உசத்தியான பட்டுச்சேலை உடுத்தியிருந்தாள். உடல் வேலை எதுவும் செய்யாமல், சாப்பிடவும், தூங்கவும் ஆகிய இரண்டு காரியங்களை மாத்திரமே பார்த்ததால், உடலெங்கும் பணக்கார சதைப் பிடிப்புகளில் நல்ல செழுமை தெரிந்தது.

- 'முருகா, வந்து இப்படி இங்க கட்டில்ல வந்து உட்காருங்க முருகா!'

- 'வந்து.. நான்… '…

- 'நீங்க ஒண்ணும் சொல்ல வேணாம் முருகா. உங்க பேரு, ஊரு எதுவும் நான் கேட்க மாட்டேன். நீங்க என்ன ஆளுங்கன்னு கூட பார்க்க மாட்டேன் '.

- 'அதுக்கில்ல…'

- 'ஒண்ணும் பேசாதீங்க முருகா. எனக்கு எல்லாம் தெரியும். கோவில் திருவிழாவுக்கு சாமி கும்பிட நான் வந்திருந்தேன். கூத்துல, மேடையில முருகன் வேசத்துல நீங்க நின்னுக்கிட்டு இருந்ததைத்தூரத்துல இருந்து

- ' பார்த்தேன். நம்ம கடை வேலையாள் வையாபுரி கிட்ட சொன்னேன். அவன் சரின்னு சொல்லிட்டு உங்களைக்கூட்டிக்கிட்டு வந்திட்டான் '.

- 'இருந்தாலும் நான்… '

- 'ஒண்ணும் பேசாதீங்க முருகா. எனக்கு எல்லாம் தெரியும். என்ன சாப்பிடுறீங்க முருகா? … பால் சாப்பிடுறீங்களா?'

அந்த அறையின் மறுபக்கத்தில் இருந்த மேசையின் மீது உள்ள பெரிய செம்பை எடுத்து, பெரிய தம்ளரில் பாலை வார்க்கிறாள் பெத்தனாட்சி.

- 'இல்லங்க… வந்து…'
- 'என் பேரு பெத்தனாட்சி'
- 'வந்து… நான் கூத்து முடிச்சுட்டு இப்ப தான் வர்றேன். என் உடம்பெல்லாம் கசகசன்னு வேர்வை. இப்ப நான் இங்க குளிக்க முடியுமா ? '.
- 'இல்ல முருகா. இதே கோலத்துல உங்களைப்பார்க்கணும்னு ஆசைப்பட்டேன். அப்படித்தான் வையாபுரி அய்யா கிட்ட சொன்னேன். அவரும் சரின்னு என் கிட்ட சொல்லிட்டு நீங்க கூத்து முடிச்சு மேடையை விட்டு இறங்கினதும் கையோட இங்க கூட்டிக்கிட்டு வந்திட்டாரு'.

பால் குவளையை எடுத்து பெத்தனாட்சி நீட்ட, முருகன் அந்தச் சுவரைப் பார்த்தபடியே பாலை குடிக்கிறான். பெத்தனாட்சி, பால் பருகும் முருகனின் முகத்தையே பார்த்தபடி நின்று கொண்டிருக்கிறாள்.

இப்போது முருகன் தன் தலையில் இருக்கும் வெண்கல கிரீடத்தைக்கழட்ட முயற்சிக்க,

- 'வேணாம், முருகா. அந்தக்கிரீடம் அப்படியே இருக்கட்டும். எதையும் கழட்ட வேண்டாம்! '.

தலை முதல் கால் வரை, முருகனது உடல் முழுக்க, தன் கண் பார்வையால் வருடுகிறாள் பெத்தனாட்சி. உடல் கூச்சமெடுத்து, அந்தக்கட்டிலின் மேல் கூச்சத்தோடு நெளிகிறான் முருகன். பெத்தனாட்சியோ முருகனை ஆசை தீரப் பார்த்துக் கொண்டே இருக்கிறாள்.

- 'இந்த மாலையையாவது நான் கழற்றிக்கொள்ளலாமா ?'

- 'வேணாம் முருகா. அது அப்படியே உங்க கழுத்துலயே இருக்கட்டும், முருகா'.

பளிச்சென்று புத்தம் புதிதாய்த்தோன்றும் தலைக்கிரீடம். அரிதாரம் பூசிய சந்தன நிற முகம். உதட்டுச்சாயம் தடவப்பட்ட உதடுகள். இளம் செந்நிற வர்ணத்தில் பூசப்பட்ட பவுடர். அரிதாரம் கழுத்து வரை இருந்தது.

நல்ல விரிந்த மார்புகள். அங்கு பொசு பொசுவென முடியேதும் இல்லாமல் ரொம்ப குழந்தைத்தனமாக, மழுமழுவென இருந்தது. கழுத்தில் இருந்த ரோஜா மாலை. நல்ல வடிவான இடுப்பு. இடுப்பில் அரையில் வளைந்த ஒரு ஆபரணம். இடுப்பின் கீழ் இளம் மஞ்சள் நிறத்தில் பஞ்ச கச்சம். கால்களில் பாத ரட்சைகள் இல்லை. இரு கால்களிலும் மருதாணியின் ரத்தச்சிவப்புத் தீற்றல்கள்.

முருகன் கையில் வேலுடன் தலை குனிந்து, பஞ்சணையில் அமர்ந்திருந்தான்.

- 'இங்க நிமிர்ந்து என்னயப்பாருங்க முருகா!. பெத்தனாட்சி முருகன் அருகே வந்து குனிந்து, வலது கையால் முருகனின் தலையை நிமிர்த்துகிறாள். முருகன் தலை நிமிரவும் முடியாமல் கூச்சத்தோடு நெளிகிறான் ! '.

- 'நிமிர்ந்து என்னயப்பாரு முருகா!'

பெத்தனாட்சியின் வேண்டுகோளுக்கு சற்றே இணங்குவது போல, முருகன் சற்றே தலை நிமிர்ந்து தயக்கத்துடன் அவள் முகத்தைப்பார்க்க, அவள் குனிந்து தரையில் விழுந்து முருகனின் பாதம் தொட்டுத்தன் கண்களில் ஒற்றிக்கொள்கிறாள்.

பெத்தனாட்சி தன் கால்களைத்தொட்டதும், கூச்சத்தால் தன் கால்களை கட்டிலின் உள்புறமாய் இழுத்துக்கொள்கிறான் முருகன்.

தரையில் இருந்து எழுந்து, முருகனைப்பார்க்கும் பெத்தனாட்சி, ஒரு சின்ன புன்முறுவலோடு அவனைப்பார்க்கிறாள். முருகன் பதட்டத்தில் கட்டிலின் நுனியில் அமர்ந்தபடி, தலை

குனிந்திருக்கிறான். அவன் மார்பெங்கும் வியர்வை வழிந்தோடுகிறது. தலையில் உள்ள கிரீடம் உறுத்தலாய் இருக்கிறது. கையில் உள்ள வெண்கல வேலை கீழே வைக்கவில்லை.

விளக்கை அணைக்கிறாள் பெத்தனாட்சி. இப்போது அறையில் இருள் வந்து எட்டிப்பார்க்க முயல்கிறது. கிழக்கே, தொடுவானத்தில் இருந்த வந்த ஒரு ஒற்றை சிவப்புக்கீற்று, அந்த விசாலமான அறையின் பச்சை, ஊதா மற்றும் பொன்னிற பெல்ஜியம் கண்ணாடி ஜன்னல்களின் மீது பட்டு, அந்த ஒளி சிதறி, அறையின் சுவர்களில் தெறித்து, கலவையான வர்ண ஜாலங்களில் அறையை நிரப்ப, முருகனும், பெத்தனாட்சியும், அந்த அறையில் உள்ள சகல விதமான அசேதனப்பொருட்களும் நானாவித வர்ணங்களிலும் மிளிருகின்றனர். மிளிருகின்றன.

பெத்தனாட்சி, தன் இடது தோளில் கையை வைத்துத்தன் சேலைத் தலைப்பை நெகிழ்த்துகிறாள். சேலை கீழே நழுவுகிறது. திமிறிக்கொண்டு எழுந்து நிற்கும் பருத்த மார்புகள் முருகனை வெறித்துப்பார்க்கின்றன. முருகன் தலை குனிந்திருக்கிறான்.

- 'கொஞ்சம் என்னயப்பாருங்க முருகா!'

இடுப்பில் சேலை மடித்துச்செருகப்பட்டிருக்கும் விசிறி மடிப்பில் கை வைத்து, அதையும் நெகிழ்த்துகிறாள் பெத்தனாட்சி. சேலை நழுவி, பெத்தனாட்சியைச் சுற்றிலும் தரையில், தாமரை மலா் இதழ் விரித்தது போலே விழுந்து கிடக்கிறது. கட்டிலில் முருகன் அருகில் அவள் அமா்ந்து, அவனது கைகளைப் பற்றுகிறாள்…

… வெளியே கொல்லைப்புறத்தோட்டத்தில், நன்கு பருத்த அந்த மாமரம் தனியாய் நின்றிருந்தது. அதன் கிளைகள் யாவும் இற்றுப்போய், சோகை பிடித்தது போல் இருந்தன. இலைகள் இல்லாத அந்த பட்டமரம் வானம் பார்த்து நின்றது. துளிர்க்க வாய்ப்பிருக்குமா என்று ஏக்கத்துடன் தனித்து இருந்தது. அதன் வெளிமரப்பட்டையின் மேலே, வெளிறிய இளம் சிவப்பு நிறத்தில் கம்பளிப் பூச்சியொன்று ஏறியது. அதன் மேல் நோக்கி ஊர்ந்தது. துரிதமாய் அந்த மரத்தின் மேல் படர்ந்த கம்பளிப்பூச்சி, தன் எலும்பில்லாத சதையை விரித்துக்கொண்டே போனது. எத்துணை விரிந்த படர்வு அது !!

மாமரத்தின் குறுக்கிலும், நெடுக்கிலும், சுற்றிலும், தாழவும் கம்பளிப்பூச்சியின் தசையே அடர்ந்து, படர்ந்து ஆக்கிரமித்து நின்றது. இப்போது பட்டமரம் கண்ணுக்குத்தெரியாமல் அதன் நெடிய பரப்பு முழுவதும் கம்பளிப்பூச்சியின் முழு ஆகிருதியும் தசைக்கோளமாக விரிந்து கிடந்தது. மேலும், கீழும் கம்பளிப்பூச்சி அசைந்தது. உயரே எழும்பி வேதனைக்குரல் போன்ற முனகல் ஒலி எழுப்பியது. 'ஹோ, ஹோ' வென கூச்சலிட்டது. தன் ஜீவச்சாற்றை அந்த பட்டமரத்தின் மேல் மொத்தமாய் உமிழ்ந்து விட்டு, பிறகு தன்னிடம் எதுவும் இல்லையென சொல்வது போல சுரத்தின்றி தொய்ந்து தரையில் தொப்பென விழுந்தது......

...கட்டிலின் மேல் மெத்தை. அந்த மெத்தையின் மேல் வெல்வெட் விரிப்பு. வெல்வெட் விரிப்பின் மேல் பெத்தனாட்சி கலைந்து கிடந்தாள். அவளது உடைகள் யாவும் கட்டிலின் கீழே கிடந்தன. அந்த அறையின் ஒரு மூலையில் நின்ற கொண்டு சுவரைப்பார்த்துக் கொண்டிருந்த முருகன், இடுப்பு வேஷ்டியை தார்ப்பாய்ச்சிக்கட்டு கட்டிக்கொண்டிருந்தான்...

கொல்லைப்புறக்கதவைத்திறந்து கொண்டு முருகன் வெளியேறிய போது, அருகில் இருந்த குடியானவர்களின் வீடுகளின் இடிந்த சுவர்களின் மீது நின்று கொண்டிருந்த சேவல்கள் கூவிக்கொண்டு இருந்தன.

தலையைக்குனிந்து, இடுப்பில் சொருகி இருந்த ரூபாய் நோட்டுக்கட்டு, அதே இடத்தில் இருக்கிறதா என்று இடது கையால் தொட்டுப்பார்த்துக் கொண்ட முருகனுக்கு, இரவில் கூத்து முடிந்ததும் வையாபுரி சொன்னது ஏனோ ஞாபகத்துக்கு வந்தது.

- 'அதாவது தம்பி... சில ஊர்ல இருக்கற பெரிய பண்ணைகள் வீட்டுல இருக்கற பொண்ணுக ரொம்ப வருசமா புள்ள இல்லாம இருந்தா, ஏதோ அந்தக் குடும்பத்துல பரம்பரையா வந்த சாபக்கேடு, ஏதோ ஒண்ணு... இந்த சுமங்கலி தோஷம் அப்படின்னு ஏதோ ஒண்ணு அந்தக் குடும்பத்துல வாரிசு உருவாகறதுல தடையா இருக்குன்னு ஒரு நம்பிக்கை. இதுக்கு என்ன பண்ணுவாங்கன்னா, அவங்க அவங்க குலதெய்வத்துக்கு நேர்ந்துக்குவாங்க. எங்க ஊருப்பக்கம் எல்லாருக்குமே முருகன் தான் குல தெய்வம். நீங்க கூத்துக்கட்டுற மேடையில முருகனா வந்து நின்னதைப்பார்த்ததும் எங்க எசமானி

பெத்தனாட்சியம்மாவுக்கு மனசுல அந்த முருகனே நீங்க தான்னு பட்டுப்போச்சு. எங்க அம்மாவுக்கு இருபத்தியஞ்சு வருசமா புள்ள இல்ல. உங்களப்பாக்க ரொம்பச்சின்னப்பையன் மாதிரி, வெடலையா, துடிதுடிப்பா களையா இருக்கீங்க. நல்ல செவப்பு நிறம் வேற. அதனால இந்த சாங்கியம் செஞ்சு முடிக்க நீங்க தான் சரியான ஆளுன்னு அவங்க முடிவு பண்ணிட்டாங்க. ஒண்ணும் கவலையே படாதீங்க. யாருக்கும் விஷயம் தெரியாது. சாங்கியம் செஞ்சு முடிச்சதும் அம்மா நிறைய பணம் கொடுப்பாங்க. அத வாங்கிக்கங்க. ஆனா, அதுக்குப்பின்னாடி இந்த ஊருப்பக்கம் கூட நீங்க வரக்கூடாது. சரியா?….

மனக்கலக்கத்துடன் முன்னே வேக நடை போட்ட முருகன், கம்மாளர் தெருவில் , அந்த அதிகாலையில், உலைக்களத்தில் நெருப்பு வைத்து, கையால் துருத்தியடித்து, இரும்புக்கம்பியை பழுக்கக்காய்ச்சி நீட்டிக்கொண்டிருந்த ஆசாரியைப்பார்த்தான்.

அப்போது தான் அமுதவாணனுக்கு, திடீரென்று மனதில் ஏதோ உறைக்க, விஷயம் மூளையைச்சட்டென உலுப்பியது. தனது நீண்ட வெண்கல வேலை, மறதியாக பெத்தனாட்சி அம்மா வீட்டின் அறையில், ஒரு மூலையில் நெட்டுக்குத்தலாய் சாய்த்து வைத்து விட்ட வந்த விஷயம்……

--------------------------------

# 5. தர்மம்

கருப்பான வலது கரத்தின் உள்ளங்கை, குழிவாக, தாழ இருந்தது. அதன் மணிக்கட்டில் இருந்து கழுத்து வரை பூசப்பட்டிருந்த பச்சை நிற அரிதாரம், கழுத்துக்கு அப்பாலும் முகமெங்கும் இருந்தது. காலையின் ஏறுவெயிலின் வெப்பத்தில் உடலெங்கும் வியர்த்ததில் தோன்றிய வியர்வை , பச்சை அரிதாரப்பூச்சுடன் கலந்து, வெயில் ஒளியில் மின்னியது.

வாயை மூடியிருந்த, குழிந்த தோல் கிண்ணம் போன்ற குழிவின் மேல் சிவப்புச் சாயப்பூச்சு இருந்தது. அட்டை கிரீடம், ஜிகினா ஒட்டப்பட்ட பெரிய கதை. கழுத்தில் பிளாஸ்டிக் மாலை. நீண்டு வளைந்த ரப்பர் வால். இவற்றுடன் இருந்த அனுமார், தன் வலது கையைக்குழித்து, தாழ்ந்த குரலில் 'அய்யா, தர்மம் ஏதாச்சும் பண்ணுங்கய்யா!' என்று கெஞ்சும் குரலில் பிச்சை எடுத்துக்கொண்டிருந்தார்.

பக்கத்தில் ஜரிகை வேட்டியைத்தார்ப்பாய்ச்சிக்கட்டு கட்டிக்கொண்டு, நீல நிற அரிதாரத்தில், கழுத்தில் இருந்து தொங்கும் ஆர்மோனியத்தோடு, கிட்டத்தட்ட அனுமாரின் அதே அடவு தோரணையில், ராமரும் பாட்டுப்பாடி பிச்சை எடுத்துக் கொண்டிருந்தார். அருகில் நடுத்தர வயதைக்கடந்த சீதை. மூவரின் கால்களிலும் பாதரட்சை இல்லை.

அதிகாலையில் எழுந்ததும், முகத்துக்கு அரிதாரம் அப்பிக்கொண்டு, அடவு கட்டி, கிராமத்திலிருந்து புறப்பட்ட போது, அவர்கள் வேறெதுவும் சாப்பிட்டிருக்கவில்லை.

கிராமத்திலிருந்து வெளியே கிளம்பும் போது, ஊர் வாசலில் இருந்த சாயாக்கடையில் மூவரும் டீ குடித்தனர். பணம் கொடுப்பதற்காக அனுமார், அந்த டீக்கடைக்காரனின் முகத்தைப்பார்த்தபோது, அந்த டீக்கடைக்காரன்,

'துட்டெல்லாம் தர வேணாம். உங்களைப்பாத்தா ஏதோ கூத்தாடுற கோஷ்டி போலத்தெரியுது. இப்படியே எங்கயாவது போய் நீங்க ஆடிப்பாடி சம்பாரிச்சாத்தான் வவுத்தக் கழுவ முடியும். விடியக்காலைல நான் ஒங்களுக்குச்செஞ்ச தர்மமா இருக்கட்டும் இந்த டீ' என்று சொன்னவன் பணம் வாங்கிக்கொள்ள மறுத்து விட்டான்.

இப்போது வெய்யில் மேலும் சூடேறியது. ஊரில் நான்கு ரத வீதிகளையும் கடந்து வந்த அவர்களுக்கு ஒருவரும் ஒரு பைசாவும் போடவில்லை. அவர்கள் போன வீடுகளிலெல்லாம் அவர்களது தோற்றத்தைப்பார்த்ததுமே விரட்டி அடித்து விட்டார்கள். போதாக்குறைக்கு, அவர்கள் கன்னடத்தில் 'ஏமய்யா நேனே ராமாகாரு' என்று வேறு பாட்டுப்பாடியபடியால், தமிழ்ப்பற்று கொண்ட அந்த ஊர் மக்கள் கன்னடத்தில் பாடிய ராமரையும், சீதையையும் வாசல் வாசலாய் விரட்டினார்கள்.

சீதை ரொம்ப களைத்துப்போனாள். 'ஏமய்யா, நம்மாலே இது ஆவாதுப்பா' என்று ராமனைப்பார்த்து, தன் வயிறை வலது கையால் தட்டி, அது வெறுமனே இருப்பதைச்சுட்டிக்காட்டினாள்.

'ஏ பொறு! இன்னம் நாலு தெரு போயி பாப்போம். எங்காவது ஏதாவது போடுவாங்க' என்று ராமர் சீதையை ஆசுவாசப்படுத்தினார்.

ஒவ்வொரு வீட்டின் முன்பும், ராமரும், சீதையும் நின்றவுடன் ராமர் ஆர்மோனியத்தில் ஒரு நீண்ட சுருதியை மீட்டி, ஏதாவது சில வரிகளைப்பாடி கோசல நாட்டின் செல்வச்செழிப்பைச்சொல்லுவார். கூடவே சீதையும் பின்பாட்டுப்பாடுவாள். வீடு வீடாய்த்தனது நீண்ட வாலுடன் படியேறி பிச்சையெடுக்க வேண்டியது அனுமாரின் வேலை.

அந்த ஊரில் மேல ரத வீதி தான் கடைசி வீதி. அது முடிந்ததும், நாடகசாலை தெரு. அதற்குப் பின்பு ஊரின் பொதுக்குளம் வந்து விடுகிறது. ஊரில் ஒருவர் கூட ஒரு பைசாவும் அவர்களுக்குத்தர்மம் பண்ணத்தயாரில்லை. ஒருத்தராவது பாடிய பாட்டுக்கு ஒரு செம்பு தண்ணீராவது தருவார்கள் என்று பார்த்தால், அதுவும் தராமல், இவர்களைப்பார்த்ததுமே வீட்டுக்குள் போய், உட்புறத்தாழ்ப்பாள் போட்டு விட்டு ,வேறு வேலையைப் பார்க்கப்போய் விடுவார்கள்.

மேல ரத வீதியின் முக்கில், நாடக சாலைத்தெரு முட்டிக்கொண்டு நிற்கும் மைய ரஸ்தாவிலிருந்து சற்று விலகி , உள் வாங்கி நின்ற ஒரு பழைய காலத்து ஓட்டு வீட்டுக்கு முன்பு அம்மூவரும் நின்றார்கள். வாசலில் இரும்புக்கம்பிகளால் ஆன கதவு. வீட்டில் முகப்பில் குடை பிடித்து நின்ற வேப்ப மரம். சீதை தன் சேலைத்தலைப்பால் முகத்தைத் துடைத்துக்கொண்டாள். ராமர் தன் கைக்குட்டையால் பின் கழுத்தில் கசகசவென்று இருந்த வேர்வையைத்துடைத்துக்கொண்டு, ஆர்மோனியத்தின் விசைகளில்

விரல்களால் அழுத்தி, தான் வனவாசம் போனதைப்பற்றி கன்னடத்தில் ராக ஆலாபனையில் ஒரு இழுவையை இழுத்தார்.

வீட்டிற்குள்ளே யாரும் இருக்கிறார்களா என அனுமார் உள்ளே எட்டிப்பார்த்து, 'அம்மா, தாயீ, புண்ணியவதி! ஏதாவது தர்மம் பண்ணும்மா. புண்ணியமாப்போவும் மாதா !' என்று ஈனஸ்வரத்தில் இறங்கிக்கேட்டார்.

வீட்டுக்குள்ளிருந்து பதில் ஏதும் வரவில்லை. அனுமார், தலை திருப்பி ராமரைப்பார்க்க, இப்போது ராமர், தனது ஆர்மோனியத்தில், விரல்களால் அதிக அழுத்தம் கொடுத்து, ஒரு ஆரோகணத்தில் உச்சஸ்தாயியில் ஒரு கீர்த்தனையை எடுத்து விட்டார்.

வீடு முக்கால் இருளில் கிடந்தது. உள்ளே ஏதோ கதவுகளின் கீல்கள் திறக்கப்படும் ஓசை கேட்டது. இரும்புக்கம்பிக்கதவின் வழியாக உள்ளே பார்த்துக் கொண்டிருந்த அனுமார், இப்போது கொஞ்சம் நெருங்கி உள்ளே பார்த்தபடி, தன் கன்னத்தை அந்தக்கம்பிகளின் மேல் வைத்த படி ஒன்றி விட்டார்.

அரை இருளில் ஒரு உருவம் அசைந்தபடி வந்தது. அனுமாரின் பார்வை கூர்மையடைந்தது. அவர் திரும்பி ராமரை ஒரு அர்த்த புஷ்டியோடு ஒரு பார்வை பார்த்தார். ராமர் மேலும் தன் ஆரோகண ஸ்தாயியைக்கூட்டினார்.

சற்று நேரத்தில், மெல்ல அசைந்தாடி வந்த உருவம், கம்பிக்கதவு அருகே வந்து அதைத்திறந்தது. வெளியே வந்த மூதாட்டி, தன் வயதையெல்லாம் எண்ணிப் பார்க்க மறந்து விட்டாள். இன்னமும் முதுமை அடைய வழியில்லாத உடல். கூன் விழுந்த முதுகு. தொங்கிப்போன கன்னங்கள் மற்றும் வாய். உடலெங்கும் தோலின் சுருக்கங்கள். கண் பார்வை மங்கிக்கொண்டிருந்தது.

பழுதான கண்கள், வீட்டுக்கு வெளியே யாசகம் கேட்டு நின்றிருந்த ராம, சீதை, அனுமாரை ஆவல் தீரப்பார்த்தன. பிறகு, அவர்களை நோக்கிக்கை கூப்பியவள், படியிறங்க முற்பட்டாள். அதற்குள் அனுமார் முன்னே போய், 'தாயீ! ரொம்பப்பசிக்குது. ஏதாவது தர்மம் பண்ணுங்க தாயீ, புண்ணியவதி. பசி வயித்தைக்கிள்ளுதும்மா!' என்றார்.

கண்களுக்கு மேலே உள்ளங்கையால் குடை விரிக்கும் கிழவி, அம்மூவரையும் பார்த்துப்பார்த்து, ஆசை தீர கண்களுக்குள் விழுங்குகிறாள். மூதாட்டியின் கண்களில் ஒளியேறுகிறது. தன் உள்ளத்தில் சந்தோஷம் ஊற்றெடுக்க ராம, சீதை,

அனுமாரைப்பார்த்தவள், தன் உள்ளங்கையை விரித்து, அதற்குள் இருந்த கசங்கிய ரூபாய் நோட்டைப்போட்டு விட்டு, திரும்பி படியேறுகிறாள். கதவு மீண்டும் சாத்தப்படுகிறது. கிழவி இருளுக்குள் பைய ஊர்ந்து சென்று விடுகிறாள்.

தன் உள்ளங்கையில், இருந்த கசங்கிய நோட்டை எடுத்து சீதை பிரித்துப் பார்க்க, அது முழு ஐம்பது ரூபாய் நோட்டு…

… தெற்கு மாட வீதியில் இருக்கும் நாலு கால் பெருமாள் மண்டபத்தின் முன்னே இரண்டு புங்க மரங்கள் இருப்பதால் கடும் கோடையிலும் எப்போதும் அங்கே குளிர்ச்சி உண்டு. அங்கு, ஆண்டாள் கோவிலுக்கு வரும் பக்தர்கள் அந்த மரங்களின் நிழலில் இளைப்பாறி விட்டுச்செல்வதுண்டு. அந்த நிழலில் தஞ்சமடைந்திருந்த அந்த உருவம், ஐந்தடி தான் இருக்கும். உடலில் கிள்ளிப்பார்க்கக்கூட சதையென்பதே இல்லாமல் எலும்புக்கூட்டுக்குத்துணி போர்த்தியது போன்ற தோற்றம்.

தலையில் அழுக்கான வட்டக்குல்லாய். முகத்தில் சுருக்கங்கள். கன்னத்திலிருந்து வயிறு நோக்கி நீளும் ஓரடி நீள வெள்ளை தாடி. கழுத்திலிருந்து தொங்கிய நீள வெள்ளைப்பருத்தித்துணி ஜிப்பாவில், இனி மேல் சுருக்கங்கள் விழுவதற்கு இடமில்லை. ஒரு ஊரில் இருக்கும் மொத்த வண்ணான் துணி அழுக்கையும் வடித்துக்கொட்டப்பட்ட கசங்கிய, நிறம் போன லுங்கி. காலில் இருந்த ரப்பர் காலணி, இனி மேலும் தேய வழியில்லை என பல்லிளித்துக்கொண்டு நிற்கிறது. அந்தக்கிழவரிடம் ஆதரவு நாடி, அவரது தோளில் சாய்ந்து விட்ட நீண்ட மூங்கில் கழி.

கிழவர் சையது பாவா சாகிபு, தன் அலுமினியத்தட்டை உயர்த்தி 'அய்யா, அம்மா,தர்மம் தாயே!' என்று குரலெடுத்துக்கூவுகிறார். பசியினால் பூத்த கண்கள். நிழலில் இருந்த சையது பாவா சாகிபு உயிரோடு தான் இருக்கிறார் என்பதற்கு ஒரே அடையாளம், அவரது மூச்சு ஏறி இறங்கும் போது, அவரது உடலின் கதர் ஜிப்பாவும் துருத்தி போல விரிந்து சுருங்குவது தான். முகத்தில் பசி மயக்கம் வாட்ட, தெக்கத்தி வெப்பக்காத்து உடலை சூடு படுத்த, வியர்வை வழிந்தோடி, பசி மயக்கத்தில் இருந்த சையது பாவா சாகிபு, தன் வயிற்றுக்குள் பெருங்குடலுடன் சிறு குடல் நடத்தும் மல்யுத்தப்போராட்டத்தினால் துவண்டு கொண்டிருந்தார்.

மூச்சு நின்று, அப்போதே தன் உயிர் போய்விடக்கூடாதா என விரக்தி கொண்டார். அப்போது முகத்தில் ஏதோ நிழலாட, தலை

நிமிர்ந்து, இமை திறந்து, கூர்ந்து நோக்கிப்பார்க்கும் சையது பாவா சாகிபுவின் கண்கள் வியப்பினால் ஆச்சரியமடைகின்றன.

வலது தோளில் வில்லுக்குப்பதிலாக ஆர்மோனியத்தின் தோள் பிடி வார் தொங்க, கிரீடம், கைக்கச்சை, மார்புக்கவசம், இடுப்புக்கவசம் சகிதம் ராமன். அவர் அருகில் சீதை. முகங்குனிந்து தன்னையே நோக்கும் அனுமார்.

மனதுக்குள் ஆச்சரியம் சிறகுகள் விரிக்க, தன்னை ராம, சீதை, அனுமார் கரிசனத்தோடு ஒரு நிலைத்த பார்வை பார்க்க, அந்தப்பார்வைகளின் புதிருக்கு அர்த்தம் தேடுகிறார், மூன்று நாள் பட்டினியில் வாடும் கிழவர் சையது பாவா சாகிபு.

தன்னையும் அறியாமல், பழக்க தோஷத்தில், வலது கையின் இணைப்பாக இருக்கும் பழைய அலுமினியத்தட்டை ராமனை நோக்கி சாகிபு மெதுவாக உயர்த்தி, கருணையை எதிர்பார்க்கிறார். ராமர் சீதையைப்பார்க்க, அனுமார் ராமரைப் பார்க்கிறார்….

…. அந்தத் தெற்கு மாட வீதியின் திருப்பத்தில், கோவில் வாசலில் இருக்கும் சின்னக்கூரை போட்ட லாலா சிங் பலகாரக்கடையினைக்கடக்கும் போது, அங்கிருந்த இனிப்பு, காரப்பலகாரங்களின் வாசம் ராம, சீதை அனுமாரின் மூக்குகளைத்துளைக்கிறது. அந்த இனிப்பு வாசனையைப்புறக்கணித்து கோவில் நிலை வாசலை விரைவாகக்கடக்கும் ராமர், சீதையிடம், 'பாவம் அந்த சாயபு! ரொம்ப பசி மயக்கம். உடல் தொஞ்சு போய் கீழே விழுற மாதிரி இருந்தார். ஏதோ ஒரு நாளைக்காவது நல்லா சாப்பிட்டுக்கட்டுமேன்னு அந்த அம்பது ரூவாயை அந்தக் கிழவனாருக்கு கொடுத்துட்டேன். உயிர் பிழைச்சுக்கட்டும் ! '

ஒரு பெருமூச்சை இழுத்து விட்டபடி, தன் தோளிலிருந்து தொங்கும் தோல் வாரை இழுத்து சரி செய்து, ஆர்மோனியத்தைப்பக்கவாட்டில் சாய்த்துப்பிடித்தபடி, சீதை, அனுமார் பின் தொடர கோவிலின் ராஜ வீதியில் நடந்து போனார் ராமர்.

# 6. கதவு எண் - 43, இரயில்வே பீடர் ரோடு

**பீடிகை -1**

சிவாஜி கணேசன், கே.ஆர். விஜயா, மேஜர் சுந்தர்ராஜன் மற்றும் பலர் நடித்த **பாரத விலாஸ்** என்ற திரைப்படம், ஒரே காலனியில் வசிக்கும் வேறு வேறு மொழி வாரி மக்களின் ஐக்கிய சங்கமத்தைச்சித்தரித்த தமிழ்ப்படம். இப்படம் வெற்றி பெற்றதற்குக் காரணம், ஒரு சிறிய காலனியின் வீடுகளில் குடியிருக்கும் மக்களின் அன்னியோன்யம், பாசப்பிணைப்பு, இதர உணர்வுகளின் கலப்பு இவையெல்லாம் தான்.

பின்னாட்களின் தமிழ்த்திரை இயக்குநர்களான ஆர். சுந்தர்ராஜன், விக்கிரமன் போன்ற இயக்குநர்களின் திரைப்படங்களில், இந்த ஒரே காலனியில் வசிக்கும் ஒரு சிறு கூட்டத்தின் நெருக்கம் மிகவும் நகைச்சுவையாகச்சித்தரிக்கப்பட்டிருக்கும். இந்த ஒரே அம்சத்திற்காக, இந்தத்திரைப்படங்கள் வெற்றி பெற்றிருக்கலாம் என நான் எண்ணுகிறேன்.

**பீடிகை -2**

கெட்டோ (ghetto) என்ற ஆங்கில வார்த்தைக்கு, யூதர்கள் குடியிருக்கும் பகுதி என்று அர்த்தம். இந்த வார்த்தையைப்பயன்படுத்தி ப்ராமின் கெட்டோ (brahmin ghetto) என்று அக்ரஹாரத்தைக்குறிப்பிடலாம்.

-------------------------------------------

கிட்டத்தட்ட இதே மாதிரி ஒரு சிறு குழுவின் அணுக்கமான அமைப்பில் பன்னிரண்டு ஆண்டுகள் வாழும் பெரும் பாக்கியம் எனக்குக்கிடைத்தது. அதைப்பாக்கியம் என்று சொல்வதா அல்லது தவிர்க்க முடியாத சூழல் என்பதா என்று முடிவாகச்சொல்ல இயலவில்லை.

1960, 1970-களில் இருந்த காலச்சூழலில் தமிழ்நாட்டின் நடுத்தர வர்க்கத்து மக்களுக்கு இருந்த பொழுதுபோக்குகள், பத்திரிக்கைகள் வாசிப்பது, வானொலி கேட்பது, திரையரங்குகளுக்குச்செல்வது ஆகியவை தான். சர்க்குலேஷன் லைப்ரரி என்ற பெயரில், வார மாதப்பத்திரிகைகள் சுழற்சி முறையில் வீடு, வீடாக விநியோகிக்கப்பட்டு வந்த காலம் அது.

திரையரங்குகளில், என்ன குப்பைப்படம் ஓடினாலும்,

அதைப்பார்க்க கூட்டம் அங்கு அலை மோதும். எம்.ஜி.ஆர்., சிவாஜி கணேசன், ஆகியோரைப்பின்னுக்குத்தள்ளி விட்டு ரஜினிகாந்த், கமல்ஹாசன் ஆகியோர் முன்னிலையில் வந்து கொண்டிருந்த காலம். சொல்லுலாய்ட் எனப்படும் திரைப்படம் திரையரங்கில் மட்டும் தான் பார்க்க இயலும் என்ற சூழல் நிலவிய கால கட்டம். அது இல்லாது போனால், தெருவின் நடுவில் குறுக்காக ஒரு வெண் திரையை உயரே கட்டி, 16 எம்.எம். திரைப்படங்களைத்திரையிட்ட காலம் அது.

விருதுநகர் பேருந்து நிலையத்தில் இறங்கி, அங்கிருந்து ரயில் நிலையம் செல்லும் சாலையில், நேராக நடந்து வந்தால், தெற்குப்பக்கம் பார்த்த அப்சரா தியேட்டர் தென்படும். அதற்கு நேர் எதிரே முனிசிபல் சத்திரம் இருந்தது. வெகு விசாலமான இடம். அந்த முனிசிபல் சத்திரத்துக்கு மேற்குப்பக்கம் வாசல் கதவுகளற்ற, ஒரு காம்பவுண்டு தென்படும். இரண்டு உயரமான செந்நிறக்கல் தூண்கள், அதன் இருபுறமும் கோவில் துவாரபாலகர்கள் போலே நின்றிருக்க, நீளமான அந்தச்சாலையின் மீது நின்று, உள்ளே அந்தக்காம்பவுண்டைப்பார்ப்பவர்களுக்கு ஏதோ வேறு உலகத்திற்குள் எட்டிப்பார்ப்பது போலே பிரமை ஏற்படுவது உறுதி. நீண்ட மையமான நடைபாதையின் இருபுறமும் வீடுகள் ரெட்டை வரிசையில் அமைந்திருக்க, பகலில் சூரியனின் கதிர்கள் அதன் காரை வீடுகளில் படும் போது, அந்தக்கட்டிட அமைப்பினாலோ அல்லது அந்தக்காம்பவுண்டின் ஒடுக்கத்தின் காரணமாகவோ, வெளிச்சமும், இருளும், வெப்பமும், குளிர்ச்சியும், மாறி மாறி அமைந்து, வாழ்வின் இன்ப துன்பங்களும் இப்படித்தான் மாறி மாறி வருகிறதோ என்று தத்துவார்த்தமான பார்வையை அதன் மேல் செலுத்த வைக்கும்.

ஒரு வரிசைக்கு ஒன்பது வீடுகள் என்ற கணக்கில் ரெட்டை வரிசை. அதனாலேயே அதற்குப்பதினெட்டு ஸ்டோர் என்ற பட்டப்பெயரும் உண்டு. இரும்பும், கான்க்ரீட்டும் பயன்படுத்தப்படாமல் செங்கல்லையும், சுண்ணாம்புக்காரையையும் மட்டுமே வைத்து எழுப்பப்பட்ட வீடுகள். வீட்டிற்குள் உயரமானவர்கள் உள்ளே நுழையும் போது, வீட்டிற்குள் உள்ளவர்கள், "பார்த்துத்தலையைக்குனிஞ்சிட்டு உள்ள வாங்க! நிலையில தல இடிச்சுரப்போகுது" என்று சொல்லுமளவுக்கு ஆறடிக்கும் சற்றுக் குறைவாகவே நிலை வாசல் வைக்கப்பட்டு, கம்பி அழி போடப்பட்ட ரெட்டைக்கதவுகள் கொண்ட ஒண்டுக்குடித்தனங்கள். அநேகமாக அந்த வீடுகளின் உரிமையாளர்களான சின்ன செட்டியார் மற்றும் பெரிய செட்டியார் ரெண்டு பேரும் ஐந்து அடியோ அல்லது அதற்குச்சில அங்குலங்கள்

சற்றுக்குறைவாகவோ இருந்த காரணத்தால், அவர்களின் உயரத்திற்கு ஏற்பவே வாசல் நிலைக்கதவையும் வைத்துப்பொருத்தின தச்சு ஆசாரிகளின் சுத்த எஜமான விசுவாசம்.

பெரிய செட்டியாருக்கு ஒன்பது வீடுகள் உரிமை. சின்ன செட்டியாருக்கு ஒன்பது வீடுகள் உரிமை. இரும்புக்கம்பிகளால் நெடுக்காக முன் அழி போடப்பட்டிருந்தால், அது பெரிய செட்டியாரோட வீடு. கோங்கு மரத்தாலான தப்பைகள், குறுக்கும் நெடுக்குமாக உள்ள முன் அழி போடப்பட்டிருந்தால் அது சின்னச்செட்டியாருக்குப்பாத்தியப்பட்ட வீடு. இப்படித்தான் இந்த இருவருக்கும் பாகப்பிரிவினை நடைபெற்ற பின்பு , இந்த இருவருமே அந்தப்பதினெட்டு ஸ்டோர் என்ற குட்டி ராஜ்ஜியத்தினை ஆண்டு வந்தனர். சின்ன செட்டியாருக்கும், பெரிய செட்டியாருக்கும் இடையில் பாகப்பரிவினை நடந்த போது, நடைபெற்ற சண்டை இரண்டாம் உலக யுத்தத்திற்குச்சமமானது. ஆனால், பாகப்பிரிவினை நடந்த பின்பு, அவர்கள் இருவருக்கும் ஒரு விஷயத்தில் ரொம்பவும் கருத்தொற்றுமை இருந்தது. அதாவது பதினெட்டு ஸ்டோரில் குடியிருக்கும் ஒண்டுக்குடித்தனக்காரர்களுக்கு எந்த வித அடிப்படை வசதிகளும் செய்து தரக்கூடாது என்பதில் இருவருமே தெளிவான மனதோடு ஒருமித்து இருந்தனர்.

காரை வீடுகளுக்கு வருடா வருடம் வெள்ளையடிப்பது என்பது வழக்கம். ஆனால், சின்ன செட்டியாரும், பெரிய செட்டியாரும் ஒண்ணு சேர்ந்து ஒரு ஒப்பந்தம் செய்து கொண்ட மாதிரி, வாடகைக்குக்குடியிருக்கும் அப்பாவி குடித்தனக்காரர்களின் கண்ணில் கூடத்தட்டுப்படக்கூடாது என்று ஒரு கொள்கைப்பிடிப்போடு இருந்தனர். வாடகைதாரர்கள் யாவருமே அந்த வீடுகளின் உரிமையாளரை ஒரு தடவையாவது நேரில் முகத்தோடு முகமாக பார்த்திருப்பார்களா என்பது சந்தேகமே.

ஒவ்வொரு இங்கிலீஷ் மாதமும், முதல் தேதியில், சோடாக்கண்ணாடி அணிந்த அழுக்கு சட்டை, அழுக்கு வேட்டி, சொட்டைத்தலை கொண்ட பூவையா என்பவர், சின்னத்துணிப்பையைத்தூக்கிக்கொண்டு, "டையாங்... டையாங்.. என்று ஆடியபடி அந்த இடுக்கமான காம்பவுண்டுக்குள் வாடகை வசூல் பண்ண வரும் போது தான், அந்தக்குடித்தனக்காரர்களுக்கு அந்த வீடுகளின் உரிமையாளரோடு ஒரு வித மறைமுகத்தொடர்பு ஏற்படும். கருநீல நிறத்தில் அச்சடிக்கப்பட்ட ரசீது புத்தகத்தில் வாடகை ரூபாய் ஐம்பது மட்டும் என்று எழுதி கீழே 'கயி. ச.ச.கு.பா. காரியம்' என்று

அச்சடிக்கப்பட்டிருக்கும் எழுத்துக்களின் மேலே, கோழி காலால் கிண்டியது போல சுழித்து, சுழித்து, கூட்டெழுத்தில் கையெழுத்துப்போடுவார் பூவையா. வாடகைப் பணத்தை வசூலித்து விட்டு, தன்னுடைய பவுண்டன் பேனாவை மூடி விட்டு, பணத்தை எண்ணிப்பெற்றுக்கொண்டாரென்றால், அத்துடன் அவரது கடமை முடிந்தது.

வீட்டில் குடியிருப்போர் புகார் தெரிவிக்கின்ற வழக்கமான விஷயங்களான சுவருக்கு வெள்ளையடித்துத்தருவது, இடிந்த சுவர்ப்பகுதிகளைப்பூசுவது, சாக்கடை வாறுகால் அடைத்திருப்பது போன்ற ஐ.நா. சபையால் கூட தீர்வு காணப்பட முடியாத விஷயங்களை எல்லாம் எவ்வளவு தான் அவரது காதுகளில் படும்படி எடுத்துரைத்தாலும், இடித்துரைத்தாலும், அந்தச்செட்டியாரின் அபிமானத்திற்குரிய பூவையாவின் காதில் ஏறவே ஏறாது. ஏனெனில், அவருக்குக்காதுகளுக்குள்ளேயும் புசுபுசுவென முடி முளைத்திருந்தது. அத்தோடு தன் சொத்து விவரங்களுக்கு ஒரு சரியான காரியஸ்தரை நியமித்த போது, சின்ன செட்டியார் என்னப்பட்ட கயி. ச.ச.கு. பாலகிருஷ்ணன் அவர்கள் ஒரு வெகு சுத்தமான டமாரச்செவிடாகிய பூவையாவை அந்தப்பணிக்கு நியமித்தது அவரது புத்தி சாதுர்யத்தைக்காட்டுகிறது.

வாடகைக்குக்குடித்தனக்காரர்களை அமர்த்தும் போது, பிரச்னை பண்ணாத ஆட்களாக அமர்த்துவதில், கயி.ச.ச.கு.பா. வகையறாக்கள் வெகு சாமார்த்தியசாலிகள். மாத வாடகையை ஒழுங்காகத்தருவதிலும், வீட்டைக் காலி பண்ணச்சொன்னால், அருவாளை எடுத்து, உயர்த்திக்காட்டாதவர்களுமாகிய பிராமணர்களையே அந்தக்காம்பவுண்டில் குடியமர்த்தினர். பெரும்பாலும், அரசு அலுவலர்கள், கூட்டுறவுத்துறை ஊழியர்கள் அல்லது டி.டி.கே. போன்ற தனியார் கம்பெனிகளில் நாற்காலியோடு நாற்காலியாக அழுந்தி, அதனோடு ஒட்டிக்கொண்ட இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற ஏவல் பிரிவு ஊழியக்காரர்களான பழைய எஸ்.எஸ்.எஸ்.சி., பழைய காலத்து பி.ஏ. பட்டம் பெற்ற குமாஸ்தாக்கள், அரசுப் பள்ளிக்கூட ஆசிரியர் ஒருவர், ஒரு சப்-இன்ஸ்பெக்டர், ஒரு சுகாதார ஆய்வாளர், ஒரு நீதித்துறை சிரஸ்தார் என்ற ரீதியில் ஒரு காய்கறி அவியலின் கலவை போன்ற பல தொழில்களில் பணி செய்யும் மத்திய தர வர்க்கத்து ஒண்ணாந்தேதி சம்பளக்கார உத்தியோகஸ்தர்களுக்கு அடைக்கலம் தந்தது இந்தக்காம்பவுண்டு

தான். அதிகாலையின் வழக்கமான சப்தங்கள். சைக்கிளில் வரும் அரை டிராயர் போட்ட பால்காரர்கள், காலை தினமணி செய்தித்தாள், அரசியல் அரட்டை, வாரா வாரம் குமுதம், கல்கி, ஆனந்த விகடன் என்ற வாசிப்பு விஷயங்கள். காய்கறி விற்பவர், பானைகளுக்கு ஈயம் பூசுபவர், மாவுச்சல்லடை ரிப்பேர் மற்றும் குடை ரிப்பேர் செய்பவர், மூங்கில் கூடையில் மாவடு கொண்டு வரும் அடைக்கல மாதா என்று சகல வியாபாரிகளும் தங்கள் சரக்குகளை இங்கு தள்ளி விட்ட பிறகு , எட்டு மணிக்கு மேல் வீட்டின் புருஷன்மார்களை சாப்பாட்டுக்கேரியரோடு அலுவலகத்திற்குத்துரத்தி விட்ட பிறகு, வீட்டின் மகாலட்சுமிகளுக்கு வரும் பெருமூச்சுக்கு அர்த்தம் என்னவென்றால், அடுத்தபடியாக அந்நாளின் பொழுதை எப்படிக்கழிப்பது என்பது தான்.

காம்பவுண்டின் வெளியே, ஊரில் உள்ள சகல தியேட்டர்களும் தங்களது புதுப்பட போஸ்டர்களை ஒட்டுவது வாடிக்கையான விஷயம். மதுரையில் புதிதாக வெளியாகும் ரஜினிகாந்த, கமல்ஹாசன் திரைப்படங்கள் ஒரு சில வாரங்களிலேயே இங்கு விருதுநகருக்கு இறக்குமதியாக்கப்படும்.

அதன் திரையரங்குகள் அனைத்துமே அந்த ஊரின் சகல ஜனங்களும் காலடி பதித்து அமர்ந்த அரங்கங்கள் தான்.

நகரின் மையப்பேருந்து நிலையத்திற்கு வெகு அருகாமையில் இருந்த மீனாம்பிகை மேன்ஷனுக்குச்சொந்தமான காலி மைதானத்தை கிரையத்துக்கு வாங்கிக்கட்டிய கட்டிடம் தான் அமிர்தராஜ் தியேட்டர். பேருந்து நிலையத்திற்கு வெளியே தெற்கில் உள்ள தியேட்டர் சென்ட்ரல் டாக்கீஸ். அதே சாலையில் கிழக்கே போனால், காமராசர் அய்யா படித்த பள்ளிக்கூடம் வரும். அதைக்கடந்து, இடது பக்கம் திரும்பி மதுரை செல்லும் கச்சேரி ரோட்டில் உள்ள தியேட்டர் நாராயணசாமி தியேட்டர். அங்கிருந்து நேராகப்போய் மெக்கானிக் ஷெட்டுகள் உள்ள காலி இடத்தைக்கடந்து போனால் வருவது ராமமூர்த்தி ரோடு. ஒரே நேர் கோட்டில் ஒரு நூல் பிடித்துக்கட்டப்பட்டது போல ரெட்டை வரிசையாய் வீடுகள், கடைகள், அலுவலகங்கள். அதே ராமமூர்த்தி ரோட்டில் ரெயில்வே கேட் அருகே உள்ள தியேட்டர் நியூ முத்து டாக்கீஸ். விருதுநகரின் கிழக்குப்பக்கம் அருப்புக்கோட்டைக்குச்செல்லும் சாலையில் உள்ள புகழ் பெற்ற பர்மாக்கடை அசைவ ஹோட்டலுக்கு அருகே, மையச்சாலையிலிருந்து கோபித்துக்கொண்டு விலகிச்செல்லும் ஒற்றைச்சாலையில் போனால் தென்படும் சிறு கிராமம் முத்துராமன்பட்டி. அங்கு உள்ள தெருக்களின்

சந்து, பொந்து இண்டு இடுக்குகளுக்குள் நுழைந்து வெளியே வந்தால் தெரிவது ஸ்ரீராம் தியேட்டர்.

பதினெட்டு ஸ்டோர்வாசிகளான மாமிகளுக்கு இந்த மேற்சொன்ன தியேட்டர்கள் தான் பகல் நேர கேளிக்கை மையங்கள். பகல் ஒன்பதரை வாக்கில் வீட்டைப்பூட்டி விட்டு, செட்டியார் காம்பவுண்டை விட்டு வெளியேறும் பெண்கள், காலை பத்தரை மணியாட்டத்தைப்பார்த்து முடித்து விட்டு, நல்ல பகல் வெய்யிலில், வேர்வை வடியத் திரும்பி வருவார்கள்.

ஒரு வேளை வீட்டு வேலைகள் இருந்தால், ஒரு சேர முடித்து விட்டு, பகல் மாட்டினி சினிமா ஆட்டத்துக்குப்புறப்படும் முன், எவர்சில்வர் பாத்திரத்தைப்பக்கத்து வீட்டில் இருக்கும் மாமியிடம் கொடுத்து விட்டு,

"இந்த நியூ முத்து டாக்கீஸ்ல சதுரங்கம் படம் போட்டிருக்கான். போயி பாத்துட்டு சாயங்காலம் வந்துர்றேன். நீங்க சாயங்காலமா இந்தப்பாத்திரத்துல பால் வாங்கி வையுங்கோ!" என்று பக்கத்து வீட்டு மாமிக்கு வேண்டுகோள் வைத்து விட்டு, வேகு வேகு என்று வெயிலில் புறப்பட்டுப்போவார்கள்.

நியூ முத்து டாக்கீஸ் தான் ஊரிலேயே பழைய தியேட்டர். ஆனால், சுத்த பத்தம் இருக்காது. அடிக்கடி அந்தத்தியேட்டரை ஒட்டி அமைந்திருக்கும் ரயில்வே இருப்புப்பாதையில் ரயில் கடந்து போகும் சத்தம் தெளிவாய்க்கேட்கும். அந்தத்தியேட்டரில் படம் பார்ப்பவர்களும் அந்தச்சத்தத்தையும் ஏதோ திரையில் ஓடும் திரைப்படத்தில் வரும் பின்னணி இசை தான் என்று நினைத்துக்கொள்ளுவார்கள்.

நியூ முத்து டாக்கீஸின் பழமை வாய்ந்த மஞ்சள் காரைக்கட்டிடம் மிக உயரமானது. அந்தத் தியேட்டருக்கும், பதினெட்டு ஸ்டோர் காம்பவுண்டுக்கும் உள்ள ஒற்றுமை ரொம்ப அற்புதமானது. பதினெட்டு ஸ்டோரின் காரை மட்டப்பா வீடுகளைப்போலவே அந்த நியூ முத்து டாக்கீஸின் சுவர்களுக்கு வெள்ளை அடிப்பது போன்ற அநாவசியச் செலவுகள் எதுவுமே கிடையாது. வருஷா வருஷம்

ஆகஸ்டு முதல் அக்டோபர் வரை நிலவும் பருவ கால அடை மழைப்பொழிவில் மொத்தக்கட்டிடத்தின் அழுக்கும் ரின் சோப்பு போட்ட மாதிரி சுத்தமாகப்பளிச்சென்று கழுவப்பட்டு, அந்தத்தியேட்டர் உரிமையாளரான மணி முத்து நாடாருக்கு வெள்ளையடிக்கும் செலவு எதுவும் வைக்காமல் மிச்சம் பிடிக்கும். நியூ முத்து டாக்கீஸில் தரை டிக்கெட் ஐம்பது பைசா. பேக் பெஞ்சு என்ற பெயரில் முதுகு சாய்க்க

வழியில்லாத மாம்பலகை பெஞ்சில் நிமிர்ந்து உட்கார்ந்தபடி படம் பார்க்க ஒரு ரூபாய். தியேட்டரின் பின்பகுதியில் சேரில் உட்கார்ந்து ரத்தம் குடிக்கும் மூட்டைப்பூச்சிக்கடியை சகித்துக்கொண்டு சினிமா பார்க்க இரண்டு ரூபாய் ஐம்பது பைசா. தியேட்டரில் மின்சாரம் தடைபட்டால் ஜெனரேட்டர் வசதி உண்டு. வஞ்சிக்கோட்டை வாலிபன், ஆயிரம் தலை வாங்கிய அபூர்வ சிந்தாமணியிலிருந்து தொடங்கி, பராசக்தி, மனோகரா, பாதாள பைரவி, பூலோக ரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை, தங்கப்பதுமை, மர்ம யோகி வரை சகல கருப்பு-வெள்ளைத்திரைப்படங்களையும் தூசி தட்டி ஓட்டியது நியூ முத்து டாக்கீஸ். கல்யாணமான புதிதில் என் தாய் மாமா சம்பத்தும், ரமா மன்னியும் புதுமணத்தம்பதிகளாய் இருந்து உட்கார்ந்து, பார்த்த படம் "தங்கப்பதக்கம்". நியூ முத்து டாக்கீஸின் விசேஷம் என்னவென்றால் நிரந்தரமாகவே அந்தத்தியேட்டரின் ஆபிசில் இருப்பு வைக்கப்பட்ட "வசந்த மாளிகை" படப்பெட்டி தான். வேறு ஏதாவது புதிய படம் தியேட்டருக்கு வர வேண்டுமானால், அது மதுரையிலிருந்து தான் வர வேண்டும். அப்படி வராத பட்சத்தில், அவசர அவசரமாக ஊரெங்கும் "வசந்த மாளிகை" போஸ்டர் ஒட்டப்படும். நியூ முத்து டாக்கீஸில் எந்தப்படம் போட்டாலும் ஆதரவு தருவது பதினெட்டு ஸ்டோர் காம்பவுண்டு மாமிகளின் பட்டாளம் தான். புதுப்படம் அங்கு வந்ததும், சுவரில் ஒட்டப்பட்டிருக்கும் போஸ்டரைப்பார்த்து விட்டு, பாக்கியத்தம்மா வீட்டிலிருந்து விஜி என் வீட்டுக்கு காலையிலேயே வந்து விடுவாள். தாவணியும், பாவாடையும் உடுத்தியிருக்கும் விஜி, என் அம்மாவைப்பார்த்து சங்கேத மொழியில் பேசத்துவங்குவாள். வலது கை ஆள்காட்டி விரலையும், கட்டை விரலையும் ஒரு வட்டம் போல அமைத்துக்கொண்டு, அதைத்தன் கண்களுக்கு முன்பாக வைத்துக் கொண்டு, பிறகு, மெதுவாக கையை முன்னுக்கு நகர்த்துவாள். அதற்கு அர்த்தம் சினிமாப்படம் பார்க்க போகலாம் என்பது.

என் அம்மா அதைப்புரிந்து கொண்டு, "எந்த தியேட்டருக்கு?" என்பார். விஜி உடனே தனது ஆட்காட்டி விரலைத்தெற்குப்பக்கமாக நீட்டிக்காட்டுவார். உடனே என் அம்மா "அமிர்தராஜ் தியேட்டரா?" என்பார். விஜி, உடனே அதை மறுப்பது போல தலையாட்டுவார். வாயிலிருந்து உமிழ் நீர் கீழே நீண்ட தாரையாக வடியும். பார்க்கப் பரிதாபமாக இருக்கும். உடனே, என் அம்மா "சென்ட்ரலா?" என்பார். உடனே, விஜி தலையை மேலும் கீழுமாக அசைப்பார். அவர் வாயிலிருந்து மேலும் உமிழ் நீர் கீழே வடியும். முகத்தில் ஒரு புன்னகை வரும். என் அம்மாவுக்குப்புரிந்து விடும்.

- "சென்ட்ரல் தியேட்டர், சரி ! என்ன படம் ?

விஜி, உடனே அந்தத்திரைப்படத்தில் உள்ள மையக்கதாபாத்திரத்திற்கு உள்ள தோற்றத்தை அபிநயித்துக்காட்டுவார். எம்.ஜி.ஆர். என்றால் கண்ணுக்கு மேலே கண்ணாடி இருப்பது போல அபிநயம். சிவாஜி என்றால் இடுப்பின் இரண்டு பக்கங்களிலும் ரொம்ப கம்பீரமாக கைகளை வைத்துக்கொள்வது. இது போல சேஷ்டைகள், கொனஷ்டைகள் உண்டு.

அவ்வளவு தான்! என் அம்மாவுக்குப்புரிந்து விடும். காலை ஒன்பதரைக்குத்தன் வீட்டுக்கு மறுபடி வருமாறு என் அம்மா சொல்லுவாள். பகலில், வெயில் கிழக்கில் ஏறிக்கொண்டிருக்கும் போது, என் அம்மா, விஜி, விஜியின் தங்கை மீனா, மற்றும் காம்பவுண்டின் இன்ன பிற மாமிகள் எல்லோரும் சேர்ந்து கொண்டு ஏதோ மார்கழி மாதத்தில் அதிகாலை நேர பஜனைக்குப்போவது போல புறப்பட்டு விடுவார்கள். இந்தப் பதினெட்டு ஸ்டோர் மாமிகள் தந்த நீடித்த ஆதரவினால் தான் விருதுநகரில் உள்ள எல்லாத்தியேட்டர்களிலும் எந்தச்சினிமாவும் வெற்றிகரமாக ஓடியது. அதைச் சொன்னா நீங்க நம்ப மாட்டீங்க. முப்பது, நாப்பது பேர் இருந்த ஒரு காம்பவுண்டு மக்கள் எப்படி இதைச்செஞ்சிருக்க முடியும்னு நீங்க நெனைக்கலாம்.

பதினெட்டு ஸ்டோர் காம்பவுண்டின் ஒவ்வொரு மாமியும், போகும் இடமெல்லாம் சமீபத்தில் வெளியான படத்தைப்பத்தி வாய் வழியா நாலு வரி விமர்சனம் பண்ணாம இருக்கிறதில்ல. இப்படித்தான் ஆண்டிச்சி பலசரக்குக்கடை, தெருவின் முனிசிபல் பொது குடிநீர்க்குழாய்கள், பராசக்தி மாரியம்மன் கோவில், காய்கறி மார்க்கெட், என்று போகின்ற இடமெல்லாம் வாய் வார்த்தை மூலமாகவே விளம்பரம் செய்து, எந்த சினிமாவுக்கும் கூட்டம் சேர்க்கும் ஆட்கள். இவர்களது தயவில் தான், கே. பாலச்சந்தர் இயக்கிய அபூர்வ ராகங்கள், அவர்கள், தப்புத்தாளங்கள், மன்மத லீலை, மூன்று முடிச்சு, அவள் ஒரு தொடர்கதை, அவள் ஒரு சிறுகதை, அவள் ஒரு நாவல், அவள் ஒரு மாதப்பத்திரிகை என்று எல்லாக்கருப்பு -வெள்ளை படங்களும் ஓடோ ஓடு என்று ஓடி, வசூலைக்கொட்டோ கொட்டோ என்று கொட்டத்தொடங்கின.

அந்தப்பதினெட்டு ஸ்டோரின் குடிமக்களுக்கு எந்த விஷயத்திலும் இல்லாத அன்னியோன்யம் இந்தச்சினிமா பார்க்கும் விஷயத்தில் மட்டும் உண்டு. மற்றபடி, எல்லாக்காம்பவுண்டு,

காலனிவாசிகளுக்கும் உரித்தான எல்லைப்புரச் சண்டை, சாக்கடை வாறுகால் அடைத்துக்கொண்டது, பக்கத்து வீட்டு விஷயங்களை ஒட்டுக் கேட்டு ஊரெங்கும் டாம்-டாம் அடித்து பிரச்சாரம் செய்வது, ஊர் வம்பு, இரவு நேர அரட்டைக்கச்சேரி போன்ற சகல விசேஷமான குணாம்சங்களும் இவர்களுக்கு உண்டு.

தீபாவளியின் போது, அந்தக்காம்பவுண்டை அதிகமாகக்குப்பையாக்குவது வெங்கிட்டு மாமா தான். அவர் வருமான வரித்துறை ஆபிசில் வேலை பார்த்து வந்தார். அவரது வருமானத்தில் பணம் கொடுத்தா பட்டாசு வாங்கி வெடிக்கப்போகிறார்? ஆபீசுக்கு வரும் பட்டாசுக்கம்பெனி முதலாளிகளை நச்சரித்து, நச்சரித்து, பெரிய பெரிய பட்டாசு டப்பாக்களை வாங்கிக்கொண்டு வந்து விடுவார். தீபாவளி அன்று ஒரு நாள் முழுவதும் அவரது பிள்ளைகள் பட்டாசு வெடித்துக்கொண்டிருப்பார்கள். நானும், என் தம்பியும் ஏக்கத்துடன் அதை நாள் முழுவதும் பார்த்துக்கொண்டிருப்போம். வெங்கிட்டு மாமாவின் அருமைத்துனைவி விஜயாவுக்கு போஸ்ட் ஆபீசில் உத்தியோகம். இருவர் சம்பாத்தியத்திலும் அந்தக் குடும்பக்கப்பல் போய்க்கொண்டிருந்தது. எங்கள் வீட்டுக்கு அடுத்து, நாராயண அய்யங்கார் குடியிருந்தார். இவரது மூக்கு மிக நீளமாக நீண்டிருப்பதால் இவருக்கு என் அப்பா "கெருடன்" என்று பட்டப்பெயர் வைத்தார். பிற்பாடு, அதே பட்டப்பெயர் நீண்டு "கெருடாழ்வார்" என்று ஆகி விட்டது. நாராயண அய்யங்கார் என்ற கெருடாழ்வார், சிதம்பர நாடாருடன் கூட்டுச்சேர்ந்து மெயின் பஜாரில் அன்டன் பேக்கரிக்கு அடுத்து, ஓர் மின்சார சாமான்கள் விற்கும் கடையை நடத்தி வந்தார். நாராயண அய்யங்கார் அடுத்தடுத்து இருந்த இரண்டு வீடுகளில் குடியிருந்து வந்தார். தினசரி அவரது கடைக்கு சைக்கிளில் தான் போவார்.

அவரது வீட்டுக்கு அடுத்த வீடு சந்திரசேகரன் என்பவருடையது. இவர் அரசு மேல்நிலைப்பள்ளியில் மூத்த தமிழாசிரியராகப்பணி புரிந்தார். இவரது தாய் மொழி மராத்தி ஆகும். காம்பவுண்டு வாசலில் விரித்த கருப்புக்குடை தென்பட்டால் அது புலவர். சந்திரசேகரனுடையது தான்.

எனது வீட்டின் கதவு எண் 43. என் அப்பாவுக்கு நீதிமன்றத்தில் பணி. எனது வீட்டில் எப்போதும் கேலி, கிண்டல், கூத்துக்குக்குறைவே இருக்காது. பக்கத்து வீட்டில் லெட்சுமி மாமியின் குடும்பம், லெட்சுமி, வெங்கிட்டு மாமாவின் தங்கை. பாவம், அந்த அம்மா ஒரு விதவை. ரெண்டு ஆண், ரெண்டு பெண் என நான்கு பிள்ளைகள். அந்தப் பெண்

விற்பனை வரி அலுவலகத்தில் நாற்காலியில் அமர்ந்து, பேனாவை ஓட்டி, ஓட்டித்தன் குடும்பத்தைக்காப்பாற்றிக்கொண்டிருந்தார். லெட்சுமி மாமியின் பெண் உமா. பார்க்க அவ்வளவு அழகு. எலுமிச்சம்பழ நிறம். அந்தப்பெண் தன் வீட்டின் திண்ணையில், மதிய வேளைகளில் அமர்ந்தபடி பூவேலை தையலைச்செய்து கொண்டிருப்பாள். அல்லது மல்லிகை அரும்புகளைச்சரமாக்கிக்கொண்டிருப்பாள். அந்த வீட்டின் திண்ணையிலிருந்து பக்கவாட்டில் பார்த்தால், எதிர் வரிசையில், நான்காவது வீட்டில் உள்ள பரிமளா அக்காவின் வீடு தெரியும். பரிமளா அக்கா, கன்னடம் பேசும் ராவ்ஜி என்ற பிரிவைச்சேர்ந்தவர். அவரது தம்பி ராகவேந்திரா ஒரு நல்ல ஓவியர். அவர் எங்கள் வீட்டுச்சுவரில் வரைந்து தந்த அனுமான் ஓவியத்தைத் தான் நாங்கள் தினசரி கும்பிட்டுப்பூஜை செய்து கொண்டிருந்தோம்.

பரிமளா அக்காவின் அப்பா, ராமோஜி ராவ், கூட்டுறவு நூற்பாலையில் வேலை பார்த்து வந்தார். அவரது வீட்டு வாசலில் குடை பிடித்து நின்று கொண்டிருந்தது ஒரு நார்த்தங்காய் மரம். ஒவ்வொரு வருடமும், அதில் குலை குலையாகக்காய் காய்க்கும். அதை எல்லாம் மொத்தமாகப்பறித்து எடுத்து, ஒரு தராசில் நிறுத்து, அந்தக் காம்பவுண்டு வாசிகளுக்கு விற்று விடுவார் ராமோஜி ராவ். மிஸ்டர். ராவின் அன்புப்புதல்வன் கிருஷ்ணன் என்ற கிச்சா. கிச்சாவுக்கு தொலைபேசித்துறையில் வேலை. கிச்சா, தனது வீட்டின் திண்ணையில், பின் மதியப்பொழுதுகளில் ஒரு சின்ன ஸ்டூலில் அமர்ந்து கொள்வான். இடுப்பில் வேஷ்டி மட்டுமே இருக்கும். அவன், தனது வீட்டின் திண்ணையிலிருந்து பக்கவாட்டில் பார்த்தால், லெட்சுமி மாமியின் வீட்டின் திண்ணையில் உட்கார்ந்து மல்லிகைச்சரத்தைத்தொடுத்துக்கொண்டிருக்கும் உமாவைப்பார்க்க முடியும். பார்க்க முடியும் என்றால் பார்க்க முடியும் என்று மட்டும் அர்த்தமில்லை. பார்த்துக்கொண்டே இருக்க முடியும். உமாவின் பார்வை கிச்சாவின் மீதே இருக்க, கிச்சாவின் பார்வை உமாவின் மீதே இருக்க, "அண்ணலும் நோக்கி, அவளும் நோக்கியதை" அடியேனும் நோக்கி விட்டேன்.

நான், ஒரு நாள் கிச்சாவிடம்,

- "நியூ முத்து டாக்கீஸில் மூன்று முடிச்சு  படம் போட்டிருக்கான். நீங்க போகலியா?"

- "அதுக்குப்போக மாட்டேன்!"

- "ரொம்ப நல்ல படம்!"

- "ஆமா, அதுக்கென்ன?"

- "ஏன், நீங்க போய்ப்பாக்க வேண்டியது தான ?!"
- "வேணாம் விடுடா!"
- "நீங்க அந்தப் படத்துக்குப்போறதா இருந்தா, உமா அக்காவையும் கூட்டிண்டு
 போங்க!" என்று தாழ்ந்த குரலில் கிச்சாவிடம் சொன்னேன்.

பின்னந்தலையில் எனக்கு ஒரு தட்டு விழுந்தது. கிச்சா, காலையில், வீட்டின் கொல்லைப்புறத்தில் வெந்நீர் அடுப்பில் எரியும் விறகைப்போல சிவப்பாய் என்னை ஒரு கோபப்பார்வை பார்த்தான். அவனது அணுசக்தி போன்ற கோபப்பார்வையைத் தாங்க மாட்டாமல் நான் பயந்து போனேன்.

எனது அம்மாவின் தியேட்டர் விஜயங்களுக்கு உறுதுணை, உற்ற துணை ஜெய்ஸ்ரீயின் அம்மா மனோகரி மாமி தான். இருவரும் சேர்ந்து கொண்டு, பாக்கியத்தம்மா வீட்டு விஜி, அவரது வீட்டார் மற்றும் சேல்ஸ் டேக்ஸ் சங்கரன் மனைவி மீனா மாமி என்று கோஷ்டி கோஷ்டியாகப்புதுப்படங்களுக்குப் புறப்பட்டுப்போய் விடுவார்கள்.

யார் யார் எந்த தியேட்டருக்கு என்னென்ன சினிமாவுக்குப்போனார்கள் என்று மாலை வேளையில் வீடு திரும்பும் வெங்கிட்டு மாமாவுக்குச்சொல்லப்படும். அவரும் தன் பங்குக்கு வீட்டு வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு, அன்றைய தினம் சினிமாவுக்குப் போன மாமிகளைக்கேலி பேசிக்கொண்டிருப்பார்.

காலையில் மனோகரி மகள் ஜெயஸ்ரீ எங்கள் வீட்டுக்குள் நுழைந்து விட்டால், அதற்கு அந்தப்பெண் ஸ்ரீராம தூதன், பக்த அனுமனைப்போல் சீதைக்குச்செய்தி கொண்டு வந்திருக்கிறாள் என்று அர்த்தம்.

- "மாமி! நாராயணசாமி தியேட்டர்ல எம்.ஜி.ஆரோட மீனவ நண்பன் போட்டிருக்கான்.

போகலாமான்னு எங்கம்மா கேட்டுண்டு வரச்சொன்னா!"

- "அது வேணாம்! நான் ஏற்கெனவே பார்த்தது தான். ஸ்ரீராம் தியேட்டர்ல ஒரு தலை ராகம் போட்டிருக்கான். சண்டை எதுவும் இல்லாத படமாம். அதுக்குப்போகலாமான்னு உங்கம்மா கிட்டக்கேட்டுண்டு வா!"

ஜெய்ஸ்ரீ உடனே வெளியேறி அவளது அம்மாவிடம் பதில் கேட்டுக்கொண்டு திரும்பி வருவாள். இந்த வீடுகளுக்கிடையே தூது போகும் படலம் இரண்டொரு தடவைகள் நடந்து, கடைசியில் எங்கம்மா,

- "ஜெய் ஸ்ரீ, உங்கம்மாவை சரியா ஒம்பது மணிக்கே ரெடியா

இருக்கச்சொல்லு. ஏன்னா, முத்துராமன் பட்டி வரை நடந்து போறதுக்கு ரொம்ப நேரமாகும். டிரெஸ் பண்ணிண்டு ஒம்பது மணிக்கு நான் ரெடியா இருப்பேன்" என்று சீதை தகவல் அனுப்ப, அனுமன் அச்செய்தியை ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியிடம் போய்ச்சொல்லி விட்டால், காலை ஒம்பது மணிக்கு வீட்டைப்பூட்டி விட்டு சீதையும், இராமனும், அனுமனும் சேர்ந்து கொண்டு வன வாசம் போல நெடிய தூரம் நடந்து போய், முத்துராமன்பட்டி ஸ்ரீராம் தியேட்டரில், "ஒரு தலை ராகம்" பார்த்து விட்டு, பிறவிப்பயனை அடைந்தபடி திரும்பி வருவார்கள். இந்தக்கோஷ்டியில் அவ்வப்போது சேர்ந்து கொள்வது ரிட்டயர்டு போஸ்ட் மாஸ்டர் துரைசாமி அய்யரின் மனைவி அம்பிகை அம்மாள். அம்பிகை அம்மாள், மிகவும் மேனாமினுக்கித்தனமாக ரொம்பவும் பவிசு கொட்டிக்கொள்வாள். பதினெட்டு ஸ்டோரிலிருந்து ஒரு கோஷ்டி தியேட்டருக்குப்புறப்பட்டுப்போனால், எல்லோரும் பெஞ்சு டிக்கெட்டில் படம் பார்க்க நினைக்க, அம்பிகை அம்மாள் மட்டும் பின்வரிசை சோபாவில் உட்கார வேண்டும் என்பார். இவரது பவிசைப்பார்த்து விட்டு, எல்லோரும் சேர்ந்து இவருக்கு டிஸ்கோ பாட்டி என்று பெயரிட்டனர். தியேட்டருக்குப்போகும் தீர்த்த யாத்திரைக்குழுவில், அம்பிகை அம்மாள் தவறாது இடம் பெறுவாள். பால் காவடி, பன்னீர்க்காவடி, தீர்த்தக்காவடி போல இது தியேட்டர் காவடி.

ஊரின் எல்லாத்தியேட்டர்களின் மானேஜர்கள், டிக்கெட் கொடுப்பவர்கள், மற்றும் டிக்கெட் கிழித்துக்கொடுக்கும் கிழடு தட்டிய தியேட்டர் சிப்பந்திகளுக்கும் எங்கள் பதினெட்டு ஸ்டோர் மாமிகள் அனைவரின் முகங்களும் வெகு பரிச்சயம்.

கணவன்மார்கள் அலுவலகம் போக, பிள்ளைகள் பள்ளிக்கூடம் போக, வீட்டின் இல்லத்தரசிகளான மாமிக்கள், மற்றும் இதர நபர்கள் யாவரும் விருதுநகரின் நான்கு மூலைகளிலும் இருக்கும் தியேட்டர்களிலும், காலையிலும், மதியத்திலும், "அன்னவர்க்கே சரண் நாங்களே!" என்ற ரீதியில் சரண் அடைந்திருக்க, என் பள்ளிப்படிப்பும் முடிந்தது.

1980-களில், எங்கள் குடும்பம், செட்டியார் காம்பவுண்டில் உள்ள எங்கள் ஒண்டுக்குடித்தன வீட்டைக்காலி செய்து விட்டு, வீட்டுக்குக்கொடுத்த அட்வான்ஸ் பணத்தை கயி.ச.ச.கு.பா. வகையறாக்களிடமிருந்து போராடிப்பெற்றுக்கொண்டு, விருதுநகர் மண்ணை விட்டுப்புறப்பட்டு, எங்கள் பாட்டியின் ஊரான ஸ்ரீவில்லிபுத்தூருக்கு வந்து சேர்ந்தது.

சொந்த ஊர், சொந்த வீடு, சொந்த விவசாயம், கல்லூரிப்படிப்பு

எனக்காலச்சக்கரத்தில் ஆண்டுகள் உருண்டோடியதை கவனிக்கத்தவறி விட்டேன்.................

......இப்போதெல்லாம் என் தலை நரையை மறைக்க கருப்பு மை பூசுவதில்லை...

வியர்த்து விறுவிறுத்து, அகன்ற வெள்ளித்திரையில் திரைப்படம் பார்த்து மெய்மறந்த காம்பவுண்டு மாமிகள் செல்போனில் புதிய திரைப்படங்களை பதிவிறக்கம் செய்து சாவகாசமாக பார்த்துக்கொண்டிருந்ததாகவும், விருதுநகரின் புகழ் பெற்ற திரையரங்கங்கள் ஆளின்றி வெறிச்சோடிப்போய், களையிழந்து போனதாகவும் செய்திகள், எனது ஸ்ரீவில்லிபுத்தூரை வந்து அடைந்தன. சென்ட்ரல் டாக்கீஸ் வருமானம் குறைந்து போனதால், அது வாழைக்காய் கமிஷன் மண்டி நடத்தும் ஒருவருக்கு மாத வாடகைக்குத்தரப்பட்டது. ஸ்ரீராம் தியேட்டர் தீப்பெட்டி தயாரிக்கும் தொழிற்சாலையாக மாற, இதர தியேட்டர்களும் வருமானத்தில் பின்தங்கிப்போயின, என்றும் கேட்டறிந்தேன். பதினெட்டு ஸ்டோரின் மாமிகளின் பிள்ளைகள் படித்து விட்டு, பெருநகரங்களுக்கும், வேறு நாடுகளுக்கும் புலம் பெயர, பழைய அடையாளங்கள் எல்லாமும் அதில் தொலைந்து போனதாக சானிட்டரி இன்ஸ்பெக்டர் பத்மநாபன் அங்கிருந்து எனக்குக்கடிதம் போட்டிருந்தார்....

விருதுநகர் கலைக்கல்லூரியில் ஒரு கருத்தரங்கில் உரையாற்ற என்னை அழைத்திருந்தார்கள். ரயிலில் போய் இறங்கி, ரயில்வே பீடர் ரோட்டில் கால் தடம் பதித்து நடந்து போன போது, கால யந்திரத்தில் எத்தனையோ ஆண்டுகள் பின்னோக்கித்தள்ளப்பட்டேன். உடல் சிலிர்த்தது. உள்ளம் படபடத்தது. கடும் வெப்ப அலை ஒன்று என் உடம்பை சரேலென்று தாக்க, கண்கள் மூடி, நினைவுகள் பிறழ்ந்தன......

....அரை டிராயருடன் சட்டையில்லாமல், கையில் பிளாஸ்டிக் கூடையில் பலசரக்குகளை வாங்கிக்கொண்டு நடராசன் பலசரக்கு மளிகைக்கடையிலிருந்து திரும்புவது போல பிரமை ஏற்பட்டது. அந்தக்கடை வாசலில் நீல நிறப்பாவாடை, தாவணியில், வாயில் உமிழ் நீர் வடிய விஜி நின்று கொண்டு ஜாடையில் ஏதோ பேசிக் கொண்டிருந்தாள். வெங்கிட்டு மாமா, பழைய ராலே சைக்கிளில் ஏறி மிதித்தபடி சாப்பாட்டுக்கூடையுடன் அலுவலகத்திற்குப் புறப்பட்டுக்கொண்டிருந்தார். அவருக்குப் பின்னே லெட்சுமி மாமியும் போய்க்கொண்டிருந்தார்.

ராமோஜி ராவ், தன் கருப்புப்பட்டை பிரேம் கண்ணாடியை வேட்டியில் துடைத்துக் கொண்டிருந்தார். தூரத்தில், சுப்பையா நாடார் அரசுப்பள்ளியின் தமிழாசிரியர் சந்திரசேகரன், பரீட்சை பேப்பர் கட்டை இடது கையில் பிடித்தபடி, வலது கையில் கருப்புக்குடையுடன் நடந்து போனார். அவருக்குக்கொஞ்சம் தொலைவில் உமா தன் குழந்தைகளுடன் நடந்து வந்து கொண்டிருந்தாள். என்னைப்பார்த்ததும் முகத்தில் புன்முறுவல். "என்ன சௌக்கியமா?" என்பது போல. அவளுடன் அருகே இருக்கும் ஆண் மகன் யாரெனப்பார்த்தால் அது கிச்சா அல்ல. நான் உமாவின் விழிகளை ஒரு வித அர்த்தத்துடன் பார்க்க, அவள் என் பார்வையின் கனமான அர்த்தத்தைப்புரிந்து கொண்டு தலையைக்குனிந்தபடி விலகிச்செல்கிறாள். அவளுக்குப்பின்னே கையில் தன்னுடைய எலக்டிரிகல்ஸ் கடையின் வாசல் கதவுச்சாவிகளை எடுத்துக்கொண்டு நாராயண அய்யங்கார் சைக்கிளில் வருகிறார்.

அவருக்குப் பின்னே ஓவியர் ராகவேந்திரா, கையில் பிரஷ்ஷும், பெயிண்ட் படிந்த கையுமாக நடந்து வருகிறார். "இப்ப தான் மெயின் பஜார்ல, ஒரு கடைல ஐயப்பன் படம் வரைஞ்சிட்டு வர்றேன்" என்கிறார். மீண்டும் அதே பதினெட்டு ஸ்டோரின் கதவுகளற்ற கல் நிலை வாசலில் நிற்கிறேன். அதே ரயில்வே பீடர் ரோடு. அதே காம்பவுண்டு. அதே காரை மட்டப்பா வீடுகள், நான் நிழலில் அமர்ந்து படித்த அதே வேப்ப மரம், கயி.ச.ச.கு.பா. காரியம்…... எனக்குத்தலை சுற்றிக்கொண்டு வருகிறது.

--------------------------------

# 7. பாலிடெக்னிக்

உங்ககிட்ட சொல்றதுக்கு என்ன. அங்க கிழவன்குளத்துல இருக்கற பள்ளிக்கூடத்துல போயி, நான் சேந்ததுக்கு ரெண்டே ரெண்டு காரணம் தான். ஒண்ணு, எங்க பள்ளிக்கூட சேர்மன் ஜான் தனராஜ் எனக்கு மாசம் இருபத்தஞ்சாயிரம்னு சம்பளம் நிர்ணயிச்சது. அப்புறமா, அந்தப்பள்ளிக்கூடம், திருநெல்வேலியில இருந்து ரொம்ப தொலைவெட்டா இருந்தாலும், ரொம்ப அமைதியான இடம். இதுக்காகத்தான் நான் அங்க போயி சேர்ந்தேன்.

காவல்கிணறுங்கற ஒரு இடத்துல மெயில் ரோட்டுல நான் இறங்குனதும், என்னையக் கூட்டிட்டுப்போக பள்ளிக்கூட வண்டி வந்தது. அங்க மேனேஜரா வேல பாக்குற சுந்தரேஷ்னு ஒருத்தர் எனக்கு டீ, டிபன் எல்லாம் வாங்கிக்கொடுத்து, என்னைய வண்டில உக்கார வெச்சு, பத்து கிலோ மீட்டர் தொலைவுல இருக்குற கிழவன்குளம்ன்னு ஒரு கிராமத்துல, ரோட்டு மேலயே இருக்குற பாலிடெக்னிக்குக்கு கொண்டு போனாரு. அந்த பாலிடெக்னிக்ல இருந்த வாசல் காவலாளி ரெண்டு பேர், என் பேரை ஒரு பெரிய பழுப்பு நிற ரெஜிஸ்டர்ல எழுதிக்கிட்டு, என்னைய உள்ள போக விட்டாங்க.

அந்த பாலிடெக்னிக் கிட்டத்தட்ட நூத்து அம்பது ஏக்கர் விஸ்தீரணம்னு பிறபாடு தெரிஞ்சிக்கிட்டேன். அங்க ஒரு இடத்துல இருந்து இன்னொரு மூலைக்கு நடந்து போறதுக்குள்ள கால்ல வலி எடுக்கும். எல்லாக்கட்டிடங்களுமே முப்பது வருசத்துக்கு முன்னாடி கட்டுனது. ஒரு பெரிய ஹாஸ்டல் வளாகத்துல என்னையக்கொண்டு போய், அதைக்காட்டி, இது போதுமா, இல்லாட்டி வேற எடத்துல தங்குறீங்களான்னு சுந்தரேஷ் கேட்டாரு.

எட்டுக்கு எட்டு ரூம் அது. ஒரு பெரிய முழு வட்டம் போல வளாகம். வராந்தாவுல வளைஞ்சு போகுற மாதிரி இருந்த அந்தக்கட்டிடத்துல எல்லாமே தங்குற ரூமு தான். மொத்தம் சின்னச்சின்னதா நூறு ரூமு இருக்கும். நடுவுல விளையாட்டு மைதானத்துல ஒரு ஆள் உயரத்துக்கு புதர் மூடிக்கிடந்தது.

- 'சார், இது தான் நீங்க தங்கப்போற இடம். நல்லா பாத்துக்கங்க. சாப்பாடு, இங்க பின்னாடி இருக்கற மெஸ்ல சாப்பிட்டுக்கங்க. மூணு வேளையும் சாப்பாடு உண்டு. சாயங்காலம் டீ உண்டு. கேட்டு, வாங்கிச்சாப்பிட்டுக்கங்க. எனக்கு சேர்மன் சாரோட பால் பண்ணைல ரொம்ப அவசர வேல இருக்கு. நான் அங்க உடனே போயாகணும் '

அப்படின்னு சொல்லிட்டு மேனேஜர் சுந்தரேஷ் தனது வேன்ல புறப்பட்டுப்போய்ட்டாரு.

எனது வழக்கப்படி, எந்தப் புதிய இடத்தில தங்குறதா இருந்தாலும், முதல் வேலை நல்லாக்குளிக்கறது தான். அங்க குளியலறையில் இருந்த குழாய்கள் எல்லாமே மோசமா இருந்துச்சு. அதுல பெரும்பாலான குளியலறைகள்ல குழாய்த்தண்ணீர் கீழே ஒழுகிக்கிட்டே இருந்துச்சு. நல்லாக்குளிச்சிட்டு வந்த பிறகு, அங்கு வீசுன வாடைக்காத்துக்கு உடம்பு சில்லுன்னு ஆயிட்டுது. ஹாஸ்டல் வளாகத்தின் எல்லாப்பக்கத்துலயும் இடைவிடாம சுத்துற காத்தாலை மின்சாரம் தயாரிக்கற கோபுரங்கள். இடைவிடாது அந்த றெக்கைகள் சக்கரச்சுழற்றில சுழண்டுக்கிட்டே இருக்கும். முடிவே இல்லாம 'சர சர சர' ன்னு சப்தம் வந்துக்கிட்டே இருக்கும். அது ஏதோ வாழ்க்கை தொடர் இயக்கம், அப்படின்னு ஒண்ணுக்கு ஒலி அடையாளம் போல எனக்குப்பட்டது. ஹாஸ்டல் வளாகத்தின் எல்லைச்சுவத்தைத்தாண்டிப்பாத்தா, அங்க நெட்டுக்க பெரிய வரிசைல மேற்குத்தொடர்ச்சி மலைத்தொடர் கண்ணுக்கு அழகா நிக்குது. நான் போன போது, சரியான காத்தடி காலம். அந்த எடத்துல எவனாவது தலைக்கு மேல சுத்தற காத்தாடியை வெச்சுக்கிட்டிருந்தா, அவன் சுத்தப்பைத்தியக்காரன்தான். பிறகு என்னவே… எப்பப்பார்த்தாலும், 'ஊய்… ஊய்… ஊய்ன்னு' காத்து 'விர்… விர்ன்னு' சுழட்டிக்கிட்டு அடிக்குது. அடிக்கற காத்துல அம்மிக்கல்லும் சேந்து பறக்குதுலே.

இதுல ரொம்ப முக்கியமான விசயத்த சொல்ல விட்டுப்போச்சு. அதாவது அவ்வளவு பெரிய ஹாஸ்டல் வளாகத்துல நான் ஒருத்தன் தான் இருந்தேன். எனக்குப்பேச்சுத்துணை நான் தான். அல்லது அங்க பக்கத்துல சுத்திக்கிட்டிருக்கற கரண்டு காத்தாலை கோபுரத்துக்கிட்ட நின்னு கொஞ்ச நேரம் பேசிக்க வேண்டியது தான். என்னைய விட்டுட்டுப்போனவரு, எந்தத் தகவலும் சொல்லாம , நிராதரவா, அம்போன்னு விட்டுட்டுப்போயிட்டாரு.

ராத்திரியானதும், பக்கத்துல இருக்கற மெஸ்ஸுக்கு சாப்பிடக்கிளம்பினேன். கையில டார்ச் வெச்சிருந்தேன். பின்ன என்ன, எங்க பார்த்தாலும் முள் செடி, கருவா மரம், புதர் புதரா செடி, தழை, கொடின்னு மண்டிக்கிடக்கு. புள்ளைங்க விளையாடுற ஃபுட் பால் மைதானத்துல எங்க பார்த்தாலும் முழங்கால் உயரத்துல புதர் மண்டிக்கிடக்கு. தொலைவில அங்கங்க காத்தாலை எந்திரங்கள்ல

எரிஞ்சிக்கிட்டிருக்கற விளக்கு வெளிச்சம் தான். தலைக்கு மேல வானத்துல வெள்ளித்தட்டா, அவ்வளவு அழகா பால் நிலா நிக்குது. சுத்தியும் ஒரு கூடை வைரக்கல்லை வாரி எறைச்ச மாதிரி எங்கயும் நட்சத்திரங்கள் சிதறிக்கெடக்கு. எனக்கு ஒரு நிமுசம் மனசுல சந்தோஷம் வந்துருச்சு. பெருசா ஒரு கருப்புக்குடைய விரிச்சுப்பிடிச்சா மாதிரி, கீழ் வானம் தொடங்கி, மேல் வானம் முச்சூட மையிட்டிருக்கு. நடுவுல, இந்த வானத்துல, கண் கொள்ளாதபடி, ஊர்த்திருவிழாக்கால பல்பு செட் தோரணம்.

பாலிடெக்னிக் மெஸ்ஸுல ராத்திரிக்குச்சோறு தான் இருந்தது. ஆளுக யாரும் மெஸ்ஸுல இல்ல. நானே தான் எடுத்துப்போட்டுக்கிட்டுச்சாப்பிட்டேன். கொட்டை கொட்டையா மலையாள அரிசிச்சோறு. ஒரு புளிக்குழம்பு, அப்பளம் அவ்வளவு தான். ரசம் இருந்த வாளியைப்பார்த்தேன். ரொம்பக்கலங்கலா இருந்துச்சு. வேணாம்னு விட்டுட்டேன்.

சாப்பிட்டுட்டு, ரூம்ல வந்து படுத்தா, தூக்கம் உடனே வர மாட்டேங்குது. அவ்வளவு பெரிய ஹாஸ்டல்ல நான் ஒருத்தன் மட்டும் தான். மருந்துக்குக்கூட ஆள் நடமாட்டம் கிடையாது. ராத்திரி வானம். சுத்தி எங்கயும் விர்…விர்ன்னு சுழிச்சி அடிக்கற காத்து. அதுல சுத்தற காத்தாடியோட சத்தம். போதாக்குறைக்கு சிக்கடா பூச்சியோட டிக்…டிக்…டிக்…டிக்ன்னு சத்தம். மனுசனுக்கு எப்படி இருக்கும். யோசிச்சுப்பாருங்க.

எனக்கு பேய், பிசாசு, சாத்தான் இதுல எல்லாம் நம்பிக்கை கெடையாது பாத்துக்கங்க. இருந்தாலும், நம்ம சின்ன வயசுல இருந்தே, அங்க பாரு! தெருவுல பூச்சாண்டி வர்றான். நீ சேட்டை பண்ணினே, அவன் கிட்ட உன்னையப்பிடிச்சுக்குடுத்துருவேன்னு பயமுறுத்தி, பயமுறுத்தியே அடி மனசுல ஏதோ ஒண்ணை விதைச்சு வெச்சிட்டாங்க, நம்ம பாட்டன், முப்பாட்டனுங்க. அதனால, ராத்திரி நேரத்துல நடந்து போற போது, நம்ம நிழலைப்பாத்தாக்கூட நமக்கு கிலி தட்டும். ஏதாவது புரியாத சத்தம் தூரத்துல கேட்டாக்கூட, ஏதாவது பேய், பிசாசு, ராட்சசனோன்னு மனசு கெடந்து நடுங்கிட்டிருக்கும்.

இப்படித்தான் அன்னிக்கு ராத்திரி அங்க மனசுல ஏகப்பட்ட குழப்பத்தோட கட்டில்ல படுத்துட்டேன். ரொம்ப நேரம் கழிச்சு, ஜலீர்…

ஜலீர்ன்னு சத்தம். நல்ல சலங்கைச்சத்தம். ராத்திரி நேரத்துல, நிசப்தத்தைக்கிழிச்சிட்டு எனக்குக்கேட்குது.

போதாக்குறைக்கு புல்லுத்தரைல காலு நடந்து போற சப்தம் வேற. ஜன்னலைத் தொறந்து வெளிய எட்டிப்பாக்க எனக்கு தைரியம் வரல. என்ன தான் நிறைய படிச்சாலும், ஒரு பயம், நெருக்கடின்னு வர்ற போது, மனசு திடுக்கிட்டுப்போகுது. புத்தி வேல செய்ய மாட்டேங்குது. என்ன செய்ய ?

சலங்... சலங்ன்னு சலங்கை சத்தம். வர வர ரொம்ப அதிகமாயிட்டே வருது. மனசு கெடந்து அல்லாடுது மக்கா. புல் தரைல நடந்து வர்ற சத்தம், இப்ப என் ரூமோட ஜன்னலுக்கு ரொம்பக்கிட்டத்துல கேக்குது. என் மனசு உதைபட்ட பந்து கணக்கா பதட்டத்துல இருக்கு. சரி, இன்னிக்கு ராத்திரி, இந்த பாலிடெக்னிக்ல இந்த ரூம்ல நமக்கு சோலி முடிஞ்சு போச்சு. நாளைக்கு நம்ம உடம்பைப்பாத்துட்டு, நம்ம அம்மா, பொஞ்சாதி, புள்ள, எல்லாருமே ஒப்பாரி வெச்சு அழப்போறாங்க, அப்படின்னு முடிவு பண்ணிட்டு, கட்டில்ல இருந்து எழுந்திருச்சு, வேகமா என் பெட்டியைத்தொறந்து உள்ளே, தகர டப்பாவுல நான் வெச்சிருந்த, எங்க ஊரு வைத்தியநாத சாமி துணீரை கை நெறைய அள்ளி சிவ, சிவா! காப்பாத்து என் வைத்தியநாதான்னு சத்தம் போட்டுக்கிட்டே நெத்தி நெறைய துணீரை பூசிக்கிட்டேன். பிறகு வந்து படுத்துக்கண்ணை மூடுனா, தூக்கம் வர மாட்டேங்குது. கொஞ்ச நேரம் கழிச்சு, ஏதோ பொம்பள ஒருத்தி புலம்பற சத்தம்.

"என்ன வாழ்ந்தேன்? கெட்டுச்சீரழிஞ்சேன்! என்ன பண்ண? எந்தெய்வம் சுடல மாடசாமி என்னைக்கை விட்டுருச்சே! இப்ப வேற ஒருத்தனுக்கு முந்திய விரிச்சிக்கிட்டு இருக்கேனே! எஞ்சாமி, ஊய்க்காட்டு ஆண்டவா! இந்த நாதியத்த பொழப்புக்குப்பதிலா என்னைய ஒரேயடியா உங்கிட்ட கூட்டிக்கிட்டுப் போயிடுவே! " என்று புலம்பல்.

வாழற போது மனசு நெறைவா வாழாதவங்க எல்லாம் செத்துப்போயி, பேயா காத்துல அலைவாங்கன்னு ஏதோ சொல்லிக்கேட்டிருக்கேன். ஆமா, எப்பவுமே புலம்பறது எல்லாமே

பொம்பள பேயாத்தான் இருக்கணுமா? ஆம்பள பேயின்னா, அதுக்கு எந்தக்கஷ்டமும் கெடையாதா?

நான் பயத்துல கண்ணை இறுக்கி மூடிக்கிட்டு, சிவனே! ன்னு சத்தம் போட்டுட்டேன். கொஞ்ச நேரம் கழிச்சு, இன்னம் இரண்டு கால்கள் நடந்து போற சத்தம். பெறகு, புடவை சரசரக்கப்போற சத்தம். நான் கண்ணையே தெறக்கலியே! அப்படி நடுநடுங்கிக்கிட்டே படுத்தவன், அசதில தூங்கிப்போயிட்டேன்.

மறுநாள், காலைல வெய்யில் வெளிச்சம் என் ரூமுக்குள்ள வந்த பெறகு தான், நான் கண்ணைத்தொறந்தேன். கண்ணைத்தொறந்ததும், அந்த ஹாஸ்டல்ல நான் தனியாக்கெடக்கறதும், வேற ஆள் அங்க இல்லைங்கறதும், ஞாபகத்துக்கு வருது. வெளிய சர்… சர்ன்னு காத்தடிக்கற சத்தம். நான் முந்தின நாள் ராத்திரி நடந்ததை நெனைச்சுப்பார்த்தேன். அவ்வளவு தான். காலைக்கடன்கள முடிக்கறது எதுவும் அப்போ எனக்கு முக்கியமாப்படல. உடனே, என் சாமான்களை எல்லாம் மொத்தமா என்னோட பெட்டியில அள்ளிப்போட்டேன். ரூமை உடனே பூட்டிட்டு, சட்டை வேஷ்டியோட புறப்பட்டு, நேரா அங்க இருந்த மெஸ்ஸுக்கு வந்துட்டேன். காலைல, அந்த நேரத்துல, இட்லி வேக வெச்சுத்தயார் செஞ்சுக்கிட்டு இருந்த மெஸ் ஆளுகளைப்பார்த்ததும் தான் எனக்கு பெரிய நிம்மதி வந்துச்சு.

மெஸ்ஸின் தலைமைச்சமையற்காரர் என்னிடம், "என்ன சார்! நீங்க தான் புதுசா வந்திருக்கற ஸ்கூல் வாத்தியாரா? சுந்தரேஷ் சொன்னாரு. ரொம்ப சந்தோசம். உங்களுக்கு எந்த ஊரு தம்பி ?"

- 'அய்யா, எனக்கு ஸ்ரீவில்லிபுத்தூரு. இராஜபாளையம் தாண்டி போவணும். '

- 'அப்படியா? , சரி, உங்க ஊர்ல பால்கோவா ரொம்ப நல்லா ருசியா பண்ணுவாங்களாமே ! அப்படியா ?'

- 'ஆமா !'

- 'என்ன சார் இது, காலைலயே பொட்டியைத்தூக்கிக்கிட்டு வந்துட்டீங்களே!' என்று கேட்டார் வயதான தலைமைச்சமையற்காரர்.

நான் முந்தின நாள் ராத்திரி பட்ட பாட்டையும், பேயோட சலங்கைச் சத்தத்தையும், புலம்பலையும் விலாவாரியாச்சொல்லலாம்னு நெனச்சேன். ஆனா, நான் சொன்னதைக்கேட்டுட்டு, என்னைய ஏதோ கோட்டி புடிச்ச பயன்னு அவரு நெனச்சிரக்கூடாதேன்னு, 'முந்தின நாளு நடந்த 'சலங்கையும் ,பேயோட புலம்பலும் ' அப்படிங்கற நாடகத்தை அவரு முன்னாடி நடிச்சுக்காட்ட எனக்கு விருப்பமில்ல.

- 'இல்லங்கய்யா, அந்த ஹாஸ்டல்ல நான் ஒருத்தன் மட்டும் தான் இருக்கேன் அதான் ஏதோ வெடுக்… வெடுக்ன்னு இருக்கு. அதான் இங்க வந்துட்டேன். இங்க வேற ரூமு இருக்காங்கய்யா? ' ன்னு மெதுவா ஆரம்பிச்சேன்.
- 'அதுக்கென்ன? இந்த மெஸ்ஸுக்குப்பக்கத்துல அங்க ஒரு பில்டிங் இருக்கு பாருங்க! அங்க மேல இருக்கற ரூமு பூராவும் வாச்மேன்க குடியிருக்காங்க. நீங்க அங்க போய் அவங்க கூட இருந்துக்கலாம். அல்லது கீழ உள்ள ரூமு பூராவும் காலி தான் ! அங்க போயிக்கங்க!'

தலைமைச்சமையற்காரர், தனக்கு அருகில் இருந்த அண்டா ஒன்றைக்காட்டி, அதைத்திறந்து, அதில் இருந்த இட்லிகளை எடுத்துக்கொள்ளச்சொன்னார். சுடச்சுட இருந்த இட்லிகளைத்தட்டில் வைத்து, நீர்த்த தண்ணீரான ஒரு சாம்பாரை அதில் ஊற்றி, மெத்து மெத்து என்றிருந்த இட்லியை விரலால் தொட்ட போது, உள்ளுக்குள் இருந்து புஸ்ஸென்று வெள்ளைப்புகை வந்தது. இட்லிக்குள்ளிருந்து ஏதாவது அலாவுதீன் பூதமோ அல்லது மலையாளக் குட்டிச்சாத்தானோ வந்து தொலையக்கூடாதே என வேண்டிக்கொண்டேன்.

என்னைக்கூட்டிக்கொண்டு போக ஒண்ணாம் நம்பர் வேன் வந்தது. பள்ளிக்கூடத்துக்குப்போகும் அந்த வேனை ஓட்டியவர் நம் தேசப்பிதா தான். ஆமா, வேன் டிரைவரோட பேரு காந்தி.

நான் தங்கியிருந்த பாலிடெக்னிக் ஹாஸ்டலிலிருந்து எட்டு கிலோ மீட்டர் இருந்தது. கிழவன்குளம் கிராமத்திலிருந்து தூர விலகி, தனியே நல்ல காத்தோட்டமா இருந்த இடத்துல அது இருந்தது.

பதினஞ்சு வருசமா இந்த வாத்தியார் தொழில் பாக்குறேன். மூணு ரிட்டயராகி, கிழடு தட்டிப்போன பழைய காலத்து பி.ஏ., பி.டி. ஆசிரியர்களைக்கூட்டிக் கொண்டு வந்து, பயிற்சி என்ற பெயரில், என்னை நிஜமாகவே சித்திரவதை செய்ய ஆரம்பித்தார்கள். அந்த பி.ஏ., பி.டி., பிரஹஸ்பதிகளும், ஏதோ உ.வே.சா. விடம் படித்தவர்கள் போல இருந்தனர்.

பயிற்சி, இருபது நாட்கள் நடந்தது. அதற்குள்ளாகவே, என்னுடைய பாலிடெக்னிக் வளாகத்தில் இருந்தவர்களோடு நல்ல பரிச்சயம் ஏற்பட்டு விட்டது. மெட்ரிக்குலேஷன் பள்ளி நடத்தும் ஜான் தனராஜ் தான் பாலிடெக்னிக் நிறுவனத்துக்கும் உரிமையாளர். எனவே, தன் கிட்ட வேலை பார்த்த ஆட்களை அந்த பாலிடெக்னிக் ஹாஸ்டல்ல தங்க வெச்சு, சாப்பாடு போடுற பழக்கத்தை வெச்சிருந்தாரு.

பாலிடெக்னிக்ல இருக்கற வாச்மேன் மொத்தம் ஆறு பேரு. அரை டஜன்னு சொல்லிக்கலாம். எட்டு மணி நேர டூட்டி. மாறி, மாறி, இரவும் பகலும் காவல் காக்கணும்.

நான் போய்ச்சேர்ந்த மே மாதம் முழுக்க ஒரு மாணவரும் பாலிடெக்னிக்குக்கு வரவில்லை. ஜுன் மாத இறுதியில், அவர்கள் வந்தார்கள். மூன்று வருஷத்துக்கும் உள்ள மாணவர்களை எண்ணிப்பார்த்தால் முந்நூத்தி ஐம்பதைத்தாண்டாது. பெரும்பாலும் மலையாளிகள். அவர்கள் பெரிய செலவாளிகளாக இருந்தனர்.

நான் மெஸ்ஸுக்குக் கிழக்குப்பக்கம் இருந்த கட்டிடத்தில், கீழ் தளத்தில் ஒரு ரூமைத்தேர்ந்தெடுத்துக்கொண்டேன்.

காலையில் நான்கரைக்கு என் அறை வாசலில் இருந்து குயில் ஒன்று கூவி, 'யோவ், வாத்தியாரே! எழுந்திருய்யா. எழுந்திருச்சு பொழைப்பைப்பாக்கப் போய்யா! என்று குரல் எழுப்பும்.

எழுந்து முகம் கழுவி, அருகில் இருந்த கிராமத்துக்குப்போய், பால் வாங்கி வருவேன். காபி குடித்ததும் குளியல். உடனே, தட்டை எடுத்துக்கொண்டு மெஸ்ஸுக்குப்போய் விடுவேன்.

மெஸ்ஸின் தலைமைச்சமையற்காரர் கிழவன் சுப்பிரமணியம். நல்ல உயரம். சிவந்த முகம். காது கொஞ்சம் மந்தமாகக்கேட்கும். நெற்றியில் எப்போதும் துணீரு அணிந்திருப்பார். புகைப்பிடிக்க மாட்டார். பொடி போடும் பழக்கம் உண்டு. தன்னுடைய ஏழாயிரம் சம்பளத்தை எட்டாயிரமாக ஆக்கித்தர வேண்டும் என்று எட்டாயிரம் தடவை எங்க பாலிடெக்னிக் முதலாளி ஜான் தனராஜுக்கு ரொம்ப ' அர்ஜ ' பண்ணி எழுதியும் பலனில்லை.

அவருக்கு அடுத்த ஸ்தானத்தில், சப் -- கலெக்டர் பதவியில் இருப்பவர் சிங்கம். பேரே அது தான். இவர் கீழப்பாவூர் ஊர்க்காரர். அதற்கு அடுத்த தாசில்தார் பதவியில் கோலோச்சிக்கொண்டிருப்பவர் சௌந்தர்ராஜ். மூச்சு விட மறந்தாலும், இடைவிடாமல் பீடி குடிக்க மறக்க மாட்டார். அவர் உடம்புல வெளுப்பு எங்க இருக்குன்னு தேடிப்பாத்துத்தான் சொல்லணும். அப்படி ஒரு கருப்பு. நடக்கும் போது மெதுவாத்தான் நடந்து போவாரு. பாத்திரம் கழுவும் வேலைக்காரப்பெண்களை, எப்படியாவது பேசிப்பேசி, தனக்கேற்ற வகையில் வீழ்த்த முடியுமா எனப்பார்ப்பார். வேலை செய்யும் பணிப்பெண்கள் மீது எப்போதும் ஒரு கண் வைத்துக்கொண்டு வம்பு பேசுவார். அதைப்பார்த்துவிட்டு, அங்க இருக்கற வேலைக்காரப்பொம்பளை ஒருத்தி, 'இங்க பாரு, நொண்டி வர்றதை', என்று கேலி பேசினாள். அதற்கு சௌந்தரராஜ், 'ஏன் என்னை நொண்டின்னு கேலி பண்றீங்க. என் பேரைச்சொல்லி சௌந்தரராஜ்ன்னு கூப்பிட வேண்டியது தான!' என்றார்.

சௌந்தரராஜ்க்கு ரூபாய் மூவாயிரத்து ஐநூறு சம்பளம். அவர் வாரம் ஒரு முறை குடிப்பார். அதற்குப்பணம் கிடைக்காவிட்டால், அங்கு பாலிடெக்னிக் ஹாஸ்டலில் இருக்கும் பையன்களிடம் நூறு, இருநூறு என்று கடன் வாங்குவார். அது கடன் என்று வாங்கப்படுமே தவிர, திருப்பித்தருகின்ற வழக்கமெல்லாம் இல்லை.

தோட்ட வேலை செய்யவும், மைதானத்தில் புல் வெட்டவும், மெஸ்ஸில் சமையல் பாத்திரங்களை கழுவித்தரவும், இன்ன பிற எடுபிடி

வேலைகளைச் செய்யவும் ஏழு பெண்கள் நியமிக்கப்பட்டிருந்தனர் ஏழு பெண்கள் என்று இருந்தால் சப்த கன்னிகள் என்று அழைத்துக்கொள்ளலாமே என்று நினைத்துத்தான் அவர்களை அந்த எண்ணிக்கையில், வேலையில் அமர்த்தினார்களா என்பது தெரியவில்லை. ஆனால், அவர்களைப்பார்த்தால், சப்த கன்னிகள் என்று சொல்ல முடியாது. வேண்டுமானால் சப்த கிழவிகள் என்று தான் சொல்ல முடியும். அந்த அளவிற்கு அவர்கள் வயதானவர்கள். எல்லாருக்குமே ஐம்பது வயதுக்கு மேல் தான். புருசன்மார்கள் குடிகாரர்களாகி விட்டதால், வீட்டைக்காப்பாத்த பணிப்பெண்களாகி விட்டவர்கள். ஏழு பேருக்கும் ஊதா நிற மேல் சட்டை தரப்பட்டிருந்தது. காலையில், இந்தப்பெண்கள் வேலைக்காக பாலிடெக்னிக் வளாகத்தில் நுழையும் போது, வாசலில் உள்ள ரிஜிஸ்டரில் பணிப்பெண்களின் பெயரையும், வேலைக்கு வந்த நேரத்தையும் குறித்துக்கொண்டு, உள்ளே அனுப்ப வேண்டியது வாசல் காவலாளிகளின் பொறுப்பு. ஆறு பேர் கொண்ட குழு, வாசல்புற காவல் பணியைச்செய்து வந்தது. அதன் தலைமைக்காவலாளி மேத்யூ யேசுதாசன், ராணுவத்தில் எல்லைப்பாதுகாப்புப்படையில் வேலை செய்து, ஓய்வு பெற்று, பென்ஷன் வாங்கிக்கொண்டிருப்பவர். ஊர், நாகர்கோவில் அருகே மார்த்தாண்டம். தன் மூன்று மகள்களையும், ஒழுகினசேரி சி.எஸ்.ஐ. தேவாலயத்தில் வைத்து, ஒவ்வொருத்தராக கல்யாணம் செய்து கொடுத்துக்கரையேற்றிய பிறகு, வீட்டில் செய்வதற்குப்பொறுப்பான வேலை எதுவும் இல்லாததால், இந்த பாலிடெக்னிக் வாசல் காவல் பணிக்கு வந்து, மாசம் பன்னிரண்டாயிரம் வாங்கிக்கொண்டிருக்கிறார். மற்ற நான்கு காவலாளிகளுக்கும் சொற்பத்தொகை தான் ஊதியமாகத்தரப்பட்டு வந்தது.

கிழக்குப்பக்கம் உள்ள பெரிய இரும்பு வாசல் கதவில், காலையின் தாமிர நிறத்தாலான சூரியனின் கதிர்கள் விழும் போது, அந்த இடம் முழுவதும் வெளிச்சம் பரவும். வாசல் அருகே உள்ள சின்ன அறையில் இருக்கைகள் உண்டு. ஆனால், காவல் செய்யும் நாங்குநேரி கோபால், தனது மேலதிகாரி மேத்யூ ஜேசுதாசனை விடத்தனக்கு வயதாகி இருந்தாலும், அவர் முன்பாக நாற்காலியில் உட்கார மாட்டார். வாசல் அலுவலக அறைக்கு வெளியே குடை பிடித்து நிற்கும் கொன்றை, வேம்பு, புங்க மரங்கள் மற்றும் பல மரங்கள், நல்ல குளிர் நிழல் தந்து கொண்டிருக்கும். காலை ஏழு பதினைந்துக்கு நான் பள்ளிக்கூடம் செல்லத்தயாராகி, என் தோள் பையுடன் அங்கு வாசல் அருகே வந்து, ஒண்ணாம் நம்பர் வண்டியை ஓட்டும் நம்

தேசப்பிதாவிற்காகக்காத்துக்கொண்டிருப்பேன். நான் அங்கு வந்ததும், தன்னுடைய நாற்காலியை விட்டு எழுந்திருந்து, எனக்கு அந்த ஆசனத்தைத் தருவார் கோபால்.

பிறகு 'சப்த கன்னிகள் ' ஒவ்வொருவராக இரும்பு வாசல் கதவுக்கு வெளியே தோன்ற ஆரம்பிப்பார்கள். ஏழு பதினைந்துக்குப்பிறகு வரும் பெண்களை உள்ளே விட மேத்யூ யேசுதாசன் தான் அனுமதிக்க வேண்டும். அவர் தாமதமாக வரும் பணிப்பெண்களை 'உர்' ரென்ற முகத்துடன் முறைத்துப்பார்ப்பார். 'இது லேட்... இது சரியில்ல'. ஏழு இருபதுக்கு மேல எல்லாம் என்னால உள்ள விட முடியாது' என்று கறாராக அதிகாரத்தொனியில் பேசுவார். அவர் சொல்வதை எதிர்த்துப்பேசினால், ஏதாவது பிரச்னை வரும். அல்லது சில்லரைச்சண்டை உருவாகி விடும். ஏழு இருபத்தைந்துக்கு வரும் பெண்ணை அதிகமாக ஏசுவார். நிமிடங்கள் கூடக்கூட ஏச்சு கூடிக்கொண்டே போகும்.

வருகைப்பதிவேட்டில் நேரத்தை எழுதும் நாங்குநேரி கோபால், 'இந்தம்மாவுக்கு என்ன நேரம் சார் எழுதலாம்? 'ன்னு பணிவாகக்கேட்பார்.

- ம்ம்ம்... இந்த அம்மா லேட்டு. ஏழு இருபதுன்னே போடுங்க. யம்மா, இந்த மாதிரியெல்லாம் ரொம்ப லேட்டா உங்கள உள்ள விட முடியாது. நாளைக்கு இப்படி வந்தா, அப்புறம் பாலிடெக்னிக் ஆபீசுக்கு நானே போய் சொல்லிருவேன் ' என்பார்.

ஆனால், எனக்குத்தெரிந்து அப்படி ஒரு நாளும் அவர் செய்ததில்லை. வருகின்ற 'சப்த கன்னிகள்' சரியான நேரத்துக்கு வருகிறார்களோ இல்லையோ, சரியான நேரத்துக்கு ஸ்கூட்டரில் தகப்பனும், பிள்ளையுமாக இரண்டு பேர் வருவார்கள். அதில் தந்தையின் பெயர் பேரின்பதாஸ். நாகர்கோவில் பக்கம் ஆசாரிப்பள்ளத்தைச்சேர்ந்தவர். அவரது மகன் மெலின் சதீஷ். இருவருமே, மெஸ்ஸுக்கு மேற்குப்பக்கம் உள்ள பேக்கரியில் வேலை செய்பவர்கள். அவர்களை யாரும் தொந்தரவு செய்வதில்லை. பாலிடெக்னிக் மற்றும் பள்ளி மாணவர்களுக்குத்தேவையான ரொட்டி, பன், பிஸ்கட், கேக் ஆகியவைகளை மொத்தமாகத்தயார் செய்து தர வேண்டியது இவர்களின் பணி.

பேக்கரி பேரின்பதாஸ் செய்து தந்த இலவச ரொட்டி, பன்னைத்தின்று விட்டு என் உடம்பில் ஓடிய நல்ல ரத்தமெல்லாம் சுண்டிப்போய், எனக்கு உடல் பலவீனமானது தான் மிச்சம். இவர்களது பேக்கரியில், பாத்திரம் கழுவும் வேலை செய்தது சப்த கன்னிகள் தான். மாலை நான்கு முப்பதுக்கு, என் வேலை முடிந்து, பள்ளி வண்டியில் பாலிடெக்னிக் ஹாஸ்டலுக்கு நான் திரும்பி வரும் நேரமும், பேக்கரி பேரின்பதாஸ் மற்றும் அவரது மகன் மெலின் சதீஷும் எனக்கெதிரே நடந்து வந்து, பாலிடெக்னிக்கை விட்டு வெளியேறுவதும் தற்செயலாய் நடந்த காரியமல்ல.

மாலையில் வந்ததுமே, ஒரு குளியலைப்போட்டு விட்டு மெஸ்ஸில் சௌந்தரராஜ் தயார் செய்து தரும் டீ என்ற பெயருள்ள, கசாயம் போன்ற கொதிக்கும் நீரை வயிற்றுக்குள் கொட்டிக்கொண்டு படிக்க அமர்ந்து விடுவேன்.

ஏழரைக்கு இரவுச்சிற்றுண்டி முடித்ததும், மெஸ் வாசலில், வாலிபால் மைதானத்தருகே இருந்த சிமெண்ட் சாய்வு பெஞ்சில் அமர்ந்து கொண்டு, எதிரே மேற்குத்தொடர்ச்சி மலைத்தொடர்களுக்கு நேர் மேலே அந்தரத்தில், வெண் மேகங்களுக்கு நடுவில், நடை போடும் நிலாவை நான் ரசிக்க, என் அருகே பாலிடெக்னிக் விரிவுரையாளர்கள் மதன்பாபு, கணபதி, ராஜேஷ் எல்லோரும் ஊர்க்கதை, உலகக்கதை, கோவில்பட்டி கடலை மிட்டாயின் ருசி, தூத்துக்குடியில் ரௌடிகளின் அட்டகாசம், ஸ்ரீவைகுண்டம் எம்.எல்.ஏ.வுக்கு எத்தனை பொண்டாட்டிகள், திசையன்விளையில் யார் யாரோடு ஓடிப்போனார்கள் என்ற ஐ.நா. சர்வ தேச அமைப்பின் முக்கியமான பிரச்னைகளைப்பத்தி பொரணி பேசுவார்கள். இது, இரவு நெடு நேரம் நீளும். நடுவில் வளாகத்துக்குள்ளேயே மத்தேயூ யேசுதாசன் மற்றும் நாங்குநேரி கோபால் இருவரும் உலா வருவார்கள். அவர்கள் கையில் கனத்த டார்ச் லைட் இருக்கும்.

- 'என்ன சார், சாவகாசமா இங்க உக்காந்துட்டீங்க?'

- 'இல்ல சார். காத்து வாங்கத்தான். இங்க கிழவன்குளத்துல அடிக்கற மாதிரி காத்து வேற எங்கயும் அடிக்காது, சார். இந்த ஊர், காத்தடிக்குன்னே இருக்கற ஊரு'.

- சரி, சார்! நான் அப்படியே ரவுண்ட்ஸ் போய்ப்பார்த்துட்டு வந்துர்றேன். ஒரு விசயம். இங்க ராத்திரி ரொம்ப நேரம் உக்காராதீங்க. ஏன்னா, இங்க பூச்சி நடமாட்டம் உண்டு. தினசரி என் கண்ணுல சாரைப்பாம்போ, நல்ல பாம்போ படாம போகாது.

- 'பூச்சி வருமா' என்று கேட்டதும், நானும், பாலிடெக்னிக் பேராசிரியர்களும் உட்கார்ந்திருந்த சிமிண்ட் பெஞ்சின் தரையிலிருந்து கால்களை உயர்த்திக் கொண்டோம்.

சாய்வான சிமிண்ட் பெஞ்சில் இரவு ஒன்பது மணி வரை எங்கள் அரட்டைக் கச்சேரி தொடரும். எங்கள் சத்தமும், கூப்பாடும் அதிகமாக இருந்த காரணத்தினால், இந்த அரட்டைக்கச்சேரிக்கு, பாராளுமன்றம் என்று பெயர் வைத்தோம்.

எனக்கு, சௌகரியமான கட்டில், மெத்தையெல்லாம் கொடுத்திருந்தார்கள். இரவில் பத்து மணிக்குப்படுக்கைக்குச்செல்லும் வழக்கம் எனக்கு உண்டு என்றாலும், உள் மனதிற்குள் ஏதோ ஒரு கடிகாரம் ஓயாமல் ஓடிக் கொண்டிருக்கும். இந்தக்காரணத்தினால், வெளியே நடக்கும் எந்த சத்தத்தையும், சலனத்தையும் மனதில் குறித்து வைத்துக்கொள்வேன்.

என் கடிகாரத்தின்படி, தலைமைக்காவலாளி மேத்யூ யேசுதாசன், இரவு பதினோரு மணிக்கும், பின்னிரவில் இரண்டு தடவையும், அவர் கையில் டார்ச் லைட்டுடனும், ஒரு நீண்ட தடியுடனும் கால்பந்து மைதானத்தின் வடக்கு முனையில் தொடங்கி, தெற்கு முனையில் மெஸ் வரை வருவதாகவும், அதன் பிறகு, அருகில் உள்ள பேரின்பதாஸின் பேக்கரி கட்டிடத்தில் திண்ணை வரை சென்று திரும்பி வருவதையும் உணர்ந்தேன். அதிகாலை நாலரை மணிக்கு, மேத்யூ யேசுதாசனுக்குப்பதிலாக மாற்று ஆள், பதிலியாக வந்து விடுவார்.

உடனே, மாத்யூ யேசுதாசன், அவரிடம் பொறுப்பை ஒப்படைத்து விட்டு, அருகில் கிராமத்தில் இருக்கும் டீக்கடைக்குப்போவார். அவருக்கு டீ குடித்ததும், வெற்றிலை போட்டுக்கொண்டே ஆக வேண்டும். நல்ல ஈத்தாமொழி வெத்தலையும், நறுக்கிய கொட்டைப்பாக்கும், புகையிலையும் வாயில் போட்டுக்கொண்டு அடக்கிக்கொள்வார். புகையிலையின் நீர் உள்ளே இறங்க, இறங்க, அவருக்கு கண்கள் சொக்கும். முகம் சிவக்கும். காதுகள் விடைக்கும்.

நெற்றிப்பொட்டின் பக்கவாட்டில் உள்ள நரம்புகள் துடிக்கும். அதன் பிறகு, கண்களை மூடிக்கொண்டு, எதுவுமே பேச மாட்டார்.

காலையில், நான் பள்ளி வண்டிக்காக நாற்காலியில் உட்கார்ந்திருக்கும் போது, அவரிடம் ஏதாவது பேச்சுக்கொடுத்தால், அவருடைய பழைய மிலிட்டரி புராணத்தை மெல்ல அவிழ்த்து விடுவார்.

நான் ஆயிரத்து தொள்ளாயிரத்து எண்பத்து எட்டுல லடாக்லே இருந்தேன். அங்க குளிர் எப்படின்னா, அப்படி ஒரு குளிர். பல்லு தேய்க்கறது, குளிக்கறதை எல்லாம் நினைச்சுக்கூடப்பாக்க முடியாது.. ' என்ற ரீதியில், அவரது புராணம் தொடரும். இதை நானும், நாங்குநேரி கோபாலும் வாய் மூடாது ஆச்சரியத்துடன் கேட்டுக்கொண்டிருப்போம். இந்த கதாகாலட்சேபத்தில் எப்பொழுதாவது பிற காவலாளிகளும் வந்து சேர்ந்து கொள்வதுண்டு. ஆனால், சப்த கன்னிகள், இரும்புக்கதவு வழியாக உள்ளே நுழைந்ததும், மேத்யூ யேசுதாசனின் பேச்சு நின்று விடும். அந்தப்பெண்களுக்கு வருகைப்பதிவேட்டில் எழுதுவதற்காகப்போய் விடுவார். எத்தனை தாமதமாகப்பெண்கள் வந்தாலும், அவர்களிடம் மேத்யூ காட்டும் கடுமையின் அளவும், நீளமும் தான் கூடிக்கொண்டு போகுமே தவிர, தண்டனை என்ற பெயரில் எதுவும் இருக்காது.

நான் குடியிருந்த அறைக்கு நேர் எதிரே இருந்த சிமிண்ட் தளத்தில், பழைய மோட்டார்களின் பெரிய கனமான பாகங்கள், மேல் மூடி இல்லாத சிதிலமடைந்து, துருப்பிடித்த பழைய காலத்து வில்லிஸ் ஜீப், தலை கவிழ்ந்த நிலையில் ஒரு பழைய வேன், உடைக்கப்பட்ட கட்டிடத்திலிருந்து எடுக்கப்பட்ட பழைய இரும்புக்கம்பிகள், பெரிய கொள்கலன்கள், பிளாஸ்டிக் தண்ணீர்த்தொட்டி என்று ஏகப்பட்ட சாமான்கள் கேட்பாரற்றுக்கிடந்தன. பழைய இரும்பு வியாபாரி அதைப்பார்த்தால், மகிழ்ந்து, ஆனந்தக்கூத்தாடுவான்.

சாயங்கால நேரத்தில், பணி முடிந்து, செல்லும் சப்த கன்னிகளிடம் சோதனை செய்து, அவர்கள் பையில் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்த பிறகு தான், அவர்களை வெளியே அனுப்ப வேண்டும். ஆனால் அவர்களைச்சோதனை எதுவும் போடாமலேயே

வெளியே அனுப்பலாம் என்றும், அதனால் ஒரு பிரச்னையும் இல்லை என்றும், மேத்யூ, நாங்குநேரி கோபாலிடம் சொல்லி விட்டார்.

மாலை நேரத்தில், என் அறையில் உட்கார்ந்து படித்துக்கொண்டிருக்கும் போது, பணி முடித்துத்திரும்பும் பெண்கள், என் அறைக்கு நேர் எதிரே இருக்கும் பழைய, உடைந்த இரும்புச்சாமான்களின் குவியலுக்குள் நுழைவார்கள். கையில் எது அகப்படுகிறதோ, அதை எடுத்துப்பையில் மறைத்துக்கொண்டு போய் விடுவார்கள். இது எல்லாம் ஒரு சில நிமிடங்களுக்குள் முடிந்து விடும்.

காலை எட்டு மணிக்குத்தொடங்கும் பாத்திரம் தேய்க்கும் வேலை, பகல் பதினோரு மணிக்கு முடியும். பிறகு, சாப்பிட்டு விட்டு, அவர்கள் வளாகத்தில் உள்ள புல்லை வெட்ட வேண்டும். வளாகம் முழுக்கவே, கோரைப்புல்லும், குப்பை மேனிச்செடியும், ஒட்டுவாரொட்டிப்புல்லும், நெருஞ்சியும் காடு போல புதர் மண்டிக்கிடந்தது. அவை ஒரு போதும் செதுக்கப்படவே இல்லை. இரவில், கீரியும், பாம்பும் சர்வ சாதாரணமாக மற்ற மனிதர்களைப்போலவே போய் வந்து கொண்டிருக்கும். போதாக்குறைக்கு இரண்டு டஜன் சொறி நாய், தெரு நாய்க்கூட்டம் வேறு, அங்கு மெஸ் சாப்பாட்டைச்சாப்பிட்டு, சாப்பிட்டு இனப்பெருக்கம் செய்து கொண்டிருந்தன.

மெஸ் கட்டிடத்திற்குப்பின்புறம், வேலிக்கருவா மரங்களும், இதர புதர்ச்செடிகளும் மண்டிக்கிடந்தன. மெஸ்ஸின் பின்பக்கம் இருந்த கருவா மரங்களை வெட்டி எடுத்தாலே, ஒரு வருசத்துக்கு மெஸ்ஸில் விறகு எரிக்கலாம். ஆனால், மேத்யூ யேசுதாசன், தனக்குப்பிடித்தமான ஆட்களிடம் கமிசன் வாங்கிக்கொண்டு, பணகுடியிலிருந்து, மெஸ்ஸிற்கு விறகு சப்ளை செய்ய ஏற்பாடு செய்தார். பணகுடியிலிருந்து விறகு சப்ளை செய்த வன்னிவேலு, சப்த கன்னிகளில் ஒருவருக்குச்சொந்தமாம்.

பாலிடெக்னிக் வளாகத்தில், வர வர பாதுகாப்பு குறைந்து கொண்டே வந்தது. பாதுகாப்புக்குறைவு என்பது பூச்சிகளின் போக்கு, வரவைக்குறிக்கும். ஒவ்வொரு வாரமும், மெஸ் வாசலிலேயே இரண்டு பாம்புகளையாவது மாணவர்களே அடித்துக்கொண்டிருந்தார்கள். பாம்பு

எந்த மாணவரையாவது கடித்தால், வைத்தியம் பார்க்க அருகில் ஆஸ்பத்திரி கிடையாது. ஆளைத் தூக்கிக்கொண்டு முப்பது கிலோ மீட்டர் தொலைவில் உள்ள நாகர்கோவிலுக்குத்தான் செல்ல வேண்டும். உயிர் பிழைப்பது கடினம்.

வளாகத்தில் இருந்த பல விளக்குகள் எரியவில்லை. ஹாஸ்டலில் இருந்த பழைய வயர் இணைப்புகள் அடிக்கடி பழுதாகி, பல்லிளித்துக்கொண்டு நின்றன.

சுந்தரேஷிடம் போய்ச்சொன்னால், 'நான் என்ன சார் செய்ய முடியும்? நம்ம பாலிடெக்னிக்குக்குன்னு ஒரு எலக்டிரிசியன் கிடையாது. மாதம் பத்தாயிரம் தர்ரேன், வாடான்னு கூப்பிட்டாலும், ஒரு ஆளும் வரமாட்டேங்கறான். ஒரு நாளைக்கு அந்த எலக்டிரிசியன் வந்து நின்னா, ஆயிரம் ரூபா சம்பளம் தரணும். அப்படித்தான் நான் ஒவ்வொரு தடவையும் ஆளைக்கூட்டிட்டு வந்து எலக்ட்ரிக்கல் வேலையைச்செய்யறேன் ', என்றார்.

- 'இல்ல சார், பல நேரம் கரண்ட் இல்லாம இருட்டுலயே இருக்க வேண்டியிருக்கு'
- 'நான் என்ன சார் செய்யட்டும்? ஆளே கிடைக்க மாட்டேங்குதே! இந்த இடம் ரொம்ப தள்ளி இருக்கா, அதனால ஆளு வேலைக்கு வர்றதுன்னா, நாகர்கோவில்ல இருந்து தான் வரணும். '

வளாகத்தின் பாதி இடம் இருட்டில் தான் இருந்தது. பாதி வெளிச்சமும், பாதி இருளுமாக இருந்த அந்த இடத்தில், நட்சத்திரங்களிலிருந்து வரும் வெளிச்சத்திலும், நிலாவின் வெளிச்சத்திலும் தான் நாங்கள் நடமாடிக் கொண்டிருந்தோம். நாகங்களும் நடமாடின. வளாகத்தில் இருந்த வேலிக் கருவா முள், புதர்கள், அடர்ந்த புல், செடி கொடிகளை வெட்டிச்சீர்படுத்துமாறு சுந்தரேஷிடம் கேட்டுக்கொண்டேன். சப்த கன்னிகளை அனுப்பி அந்த வேலையைச்செய்யலாம் என்றும், ஆலோசனை சொன்னேன். ஆவன செய்வதாக அந்த ஐ.ஏ.எஸ். அதிகாரி சொன்னார்.

சரி. விரைவில், வளாகத்தில் உள்ள முள், புல், புதர்களை வெட்டிச் சுத்தமாக்குவார்கள். நாம் தான் முதல் ஆளாப்போய் கால்பந்து விளையாடுவோம் என்றெல்லாம் மனசுக்குள்ளே எண்ணியிருந்தேன்.

வளாகம் முழுமைக்கும் உள்ள புல், புதரை வெட்டிச்சமப்படுத்துமாறு சுந்தரேஷ், சப்த கன்னிகளுக்கு உத்தரவிட்டார். மறுநாள் முதல், சப்த கன்னிகள் வேலைப்பளுவைக்குறைக்க வேறு வழிகளைக்கையாள ஆரம்பித்தார்கள்.

வீட்டுக்கதை, ஊர்க்கதைகளைப்பேசிக்கொண்டே மெதுவாக பன்னிரண்டு மணி வரை வேலை செய்து விட்டு, பிறகு, மதியச்சாப்பாட்டுக்கு முக்கால் மணி நேரம் எடுத்துக்கொண்டார்கள். பிறகு, மம்பட்டி, இரும்புக்காரைச்சட்டிகளை எடுத்துக் கொண்டு, பேரின்பதாஸ் பேக்கரிக்குப்பக்கமாக கொஞ்ச நேரம் வேலை செய்வது போல பாசாங்கு செய்தார்கள். பிறகு, கொஞ்ச நேரம் கழித்து, அந்த பேக்கரியின் நீண்ட திண்ணையிலேயே படுத்துத்தூங்கி விட்டார்கள். மூணு மணிக்கு மீண்டும் எழுந்து வந்து, சௌந்தரராஜை டீ போட்டுத்தரச்சொல்லி நச்சரித்து விட்டு, பிறகு மெஸ் நாற்காலிகளில் அமர்ந்து கொண்டார்கள். சௌந்தரராஜ், தன் வழக்கப்படி அந்த சப்த கன்னிகளிடம், பல்லிளித்துக்கொண்டு நின்றார். புல், புதர் வெட்டும் வேலை நடக்கவே இல்லை. இதை நான் சுந்தரேஷிடம் நேரில் எடுத்துச்சொன்னேன். ஒரு பலனும் இல்லை. முதலாளி ஜான் தனராஜிடம் சொல்லலாம் என்று முயற்சித்தேன். ஆனால், வெளியூர்ப்பயணத்திலும், அவருக்குச்சொந்தமான பிற வியாபாரங்களிலும், அவர் ஈடுபாடு கொண்டிருந்தார். இந்தியா முழுக்க அநேக வியாபாரங்கள் அவருக்கு உண்டு. அவருக்கு எதையும் காது கொடுத்துக்கேட்க நேரமே இல்லை. முதலாளி ஜான் தனராஜுக்கு முன் கோபம் உண்டு. ஏதாவது ஒரு கோபம் தரும் விஷயத்தை அவருக்குச்சொல்லி விட்டால், உடனே, அதில் சம்பந்தப்பட்ட ஆட்களை, வேலையை விட்டு நீக்கி விடுவார். தொழிலாளர் சட்டமெல்லாம் அவரிடம் செல்லுபடியாகாது. ஏதாவது நான் சொல்லப்போய், அவர் கோபமடைய, என்னுடைய வேலையையும், என் மாதச்சம்பளத்தையும் இழக்க விரும்பவில்லை.

பாலிடெக்னிக் வளாகத்துல, நிலைமை வர வர மோசமாகிக்கிட்டே போச்சு. காலையில் எழுந்து, பால் வாங்கப்போகும் போது, டார்ச் லைட்டுடன் போனாலும், தூரத்துப்பொந்து, புதர்களில் இருந்து பூச்சி வெளியே நகர்வலம் புறப்படுறது எப்படியாவது கண்ணுக்குத்தெரியும். ஒரு மகுடியை விலைக்கு வாங்கி வைத்துக்கொள்ளலாமா என்று கூடத்தோன்றியது. எப்படியாவது பாலிடெக்னிக் வளாகம், விரைவில் ஒரு முதுமலை அல்லது களக்காடு சரணாலயமாகவோ, அல்லது ஸ்ரீவில்லிபுத்தூர் செண்பகத்தோப்பு சரணாலயமாகவோ ஆவது உறுதி என எண்ணினேன்.

எனக்கென்னமோ, புல்லு, புதர்களை வெட்டிச்சுத்தப்படுத்துவாங்கன்னு கொஞ்சம் கூட நம்பிக்கை இல்லாம போச்சு. தங்கற ரூமு, என்னோட பள்ளிக்கூட உரிமையாளர் இலவசமாத்தந்தது. சாப்பாடும் இலவசம். அந்த இடத்துல இருந்த விசாலமும், காற்றோட்டமும், தொடுவானம் அருகில் இருக்கறது போலப்பிரமை ஏற்படுத்தும் அளவு அங்க இருந்த விரிவும், விசாலமும் என் படிப்பு, எழுத்து வேலைகளுக்கு ரொம்ப சௌகரியமா இருந்ததால, வேற எந்த இடத்துக்குப்போகவும் மனசு துணியல.

பாலிடெக்னிக் வளாகத்திற்குத்தேவையான பலசரக்கு வாங்குவதிலும், மற்ற பொருட்களை வாங்குவதிலும், கூலி வேலைக்கு ஆட்களை அமர்த்தி அன்றாடம் வேலை வாங்கி விட்டு சம்பளம் கொடுக்கும் போதும், இதர பரிவர்த்தனைகளின் போதும், மேனேஜர் சுந்தரேஷ் நல்ல கொழுத்த கமிஷன் அடித்துக்கொண்டிருப்பது, பட்டப்பகல் வெளிச்சம் போல நன்கு தெரிந்தது. வளாகத்தில் வேலை எதுவும் நடைபெறாமலேயே, அங்கு வேலை நடந்ததாக பில் போடப்பட்டு, வவுச்சர் தயாராகிப்பணம் சுருட்டப்படுவது எனக்குக்கொஞ்சம் கொஞ்சமாகத்தெரிய வந்தது. சுந்தரேஷ், தான் சுருட்டிய கமிஷன் பணத்தில், இரண்டு புது டிராக்டர்களை விலைக்கு வாங்கி, யாருக்கும் தெரியாமல், அவற்றைக்கேரளாவில் வாடகைக்கு விட்டிருந்ததாகவும், எனக்கு அரசல் புரசலாகத்தகவல் வந்தது.

இப்படியே, அந்த வளாகம், நான் விரும்பிய வண்ணம் மாறும் என எண்ணி எண்ணி, பொறுமையாய்க்காத்திருந்தேன். கடைசியில்,

எதுவுமே அங்கு மாறப் போவதில்லை என்று திடமான முடிவுக்கு வந்துவிட்டேன்.

பள்ளிக்கூட உரிமையாளருக்கும், எனக்கும், என் ஆசிரியப்பணி தொடர்பாக, மூன்று ஆண்டு ஒப்பந்தம் ஒன்று இருந்தது. ஆனால், பாலிடெக்னிக் மெஸ்ஸில், தலைமைச்சமையற்காரர் சுப்பிரமணியம் மற்றும் அவரது வாத்தியக்குழுவினர் செய்து போட்ட சமையலைச்சாப்பிட்டு, சாப்பிட்டு என் உடம்பு நாளுக்கு நாள் இளைத்துக்கொண்டே தான் போனது. சமையல் என்ற பெயரில், ஜெர்மனியின் ஹிட்லர், யூதர்களுக்குச்செய்த ஹோலோகாஸ்ட் கொடுமைகளை விட, அதிகமான கொடுமைகளை அவர்கள், எனக்குச்செய்தனர்.

ஒவ்வொரு உணவுக்கும் இருக்கும் அடிப்படை இலக்கணங்கள் எல்லாம் சுருங்கிச்சுருங்கி, கடைசியில் இட்லி என்றால் வெண்மை நிறம். தோசை என்றால் வட்டம். சப்பாத்தி என்பது பழுப்பு நிறம். பொங்கல் ஒரு மிருதுவான அரிசி உணவு. புரோட்டா என்பது சின்ன ஒரு வட்ட வடிவம். சாம்பாரில் கடுகும், காய்கறிகளும் இருக்கும் என்கிற அளவுக்கு ஒவ்வொரு உணவும் ஆகிப்போனது. போதாக்குறைக்கு, வியாழக்கிழமை காலை, பேரின்பதாஸ் தயாரித்துத்தரும் மைதா மாவிலான ரொட்டி பொதி வேறு. நாங்குநேரி கோபால் அதை 'காச்சக்காரன் சாப்பாடு' என்று கேலி பண்ணுவார். பேரின்பததாஸ் செய்து தந்த ரொட்டி, பன், பிஸ்கட், கேக், சூஸ்பரி உணவு வகைகளைத்தொடர்ந்து சாப்பிட்டு வந்த பிறகு, ரத்த சோகை, வயிற்று வலி, வாந்தி, தலைச்சுற்றல், அஜீரணம், வாய்வுக்கோளாறு, பித்தம், மலச்சிக்கல், கை நடுக்கம், கால் நடுக்கம், பார்வைக்கோளாறு, கபம் போன்ற தெருவோரத்தில் லேகிய விற்பனை செய்யும் நாட்டு வைத்தியர் அடிக்கடி சொல்லுகிற அனைத்து வியாதிகளும் எனக்கு வந்து விட்டது. போதாக்குறைக்கு, நான் சாப்பிட்டதில் மிச்சம் மீதியை அங்கு வளாகத்தில் உள்ள 'நன்றியுள்ள பிராணிகளுக்கு' போட்டதில், அவைகளும் அதைச் சாப்பிட்டு, எனக்கு வந்த அனைத்து வியாதிகளும், அந்த அப்பிராணி நாய்களுக்கும் வந்து, அவையெல்லாம் மிருக வைத்தியரிடம் போய் உடம்பைக்காட்ட வசதி இல்லாமலேயே, ஒவ்வொன்றாய் பாவம் மரித்துப்போய் விட்டன. அந்த அபசகுனத்தையெல்லாம் பார்த்தே தான் தீர வேண்டுமா என்று எண்ணி,

ஒரு நாள் துணிவே துணை என முடிவு கட்டி, என் இராஜிநாமாக்கடிதத்தை பள்ளி முதல்வரிடம் கொடுத்தேன். அதிர்ச்சியடைந்த அவர், என்னை ஒரு வழியாய்ப்பொறுப்பில் இருந்து விடுவித்தும் விட்டார்.

சம்பள பாக்கியை கையெழுத்துப்போட்டுப்பெற்றுக்கொண்டு, என் அறைக்குத் திரும்பினேன். என் சாமான்கள் மொத்தத்தையும் மூட்டை கட்ட நாங்குநேரி கோபால் அண்ணன் தான் உதவினார். உடல் களைப்பாக இருந்தது. நன்கு குளித்தேன். உடை மாற்றிக்கொண்டேன். பாலிடெக்னிக் வளாகத்திலிருந்து புறப்படும் முன் மேற்குத்தொடர்ச்சி மலைத்தொடரை நின்று, நிதானமாக, என் கண் பார்வையால் உள் வாங்கி, என் மனதுக்குள் நிறுத்திக்கொண்டேன். அனைவரிடமும் பிரியாவிடை பெற்றுக்கொண்டு, பாலிடெக்னிக் வாசலில் பஸ்ஸுக்காகக்காத்திருந்தேன். 'சூசையப்பர் ' வந்தார். அந்த மினி பஸ்ஸில் என்னுடன் ஏறியவர்களில், சப்த கன்னிகளில் ஒருவரான வள்ளியம்மாளும் ஒருவர். என் அருகிலேயே அந்த மினி பஸ்ஸில் உட்கார்ந்தார்.

- 'என்னம்மா சௌக்கியமா?'

- 'ஆமாங்கய்யா, உங்க புண்ணியத்துல சௌக்கியம். ஆமா, என்ன ஊருக்குப் புறப்பட்டாச்சா? லீவு வுட்டுப்புட்டாங்களோ?'
- 'இல்லம்மா. வேலை வேணாம்னு எழுதிக்கொடுத்துட்டேன். அதான் ரூமைக் காலி பண்ணிட்டு, ஊருக்குப்புறப்பட்டுட்டேன். இனிமே, இங்க நான் வர மாட்டேன் '.

- 'அது ஏன் அப்படிங்கய்யா? உங்களப்போயி யாரு என்ன சொன்னாங்க? எவன் என்ன சொன்னான்? பேதில போற பயலுக. '
- 'இல்லம்மா! எனக்கு தான் மெஸ்ஸு சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கல. அதனால் தான் ஊருக்குப்புறப்பட்டுட்டேன். '

அவள் எவ்வளவு தடுத்தும் கேளாமல், அவளுக்கும் சேர்த்து, நானே டிக்கெட் வாங்கினேன்.

மினி பஸ், காவல் கிணறு ஜங்ஷன் வந்து சேர்ந்தது. என் சாமான் பொதிகளை பஸ்ஸிலிருந்து கீழே இறக்க, தானும் உதவி செய்தாள். அவள் கையில் செலவுக்குப்பணம் கொடுத்து விட்டு, திருநெல்வேலி பஸ்ஸுக்காக அங்கு பஸ் நிறுத்தத்தில் காத்து நின்றேன்.

- 'அய்யா, ஊருக்குப்போனதும், எங்கள மறந்துறாதீங்கய்யா, உங்கள என் சொந்தப்புள்ளைய போலத்தான் இத்தன நாள் நெனச்சுக்கிட்டிருந்தேன் ', என்றார் வள்ளியம்மாள்.

- 'மறக்க மாட்டேம்மா! எவ்வளவோ கஷ்டம் வந்தாலும், என்னோட கூட இருக்கறவங்கள, நான் ஒரு போதும் மறக்கறதேயில்லம்மா! உனக்கு என்ன கஷ்டம் வந்தாலும், என் கிட்ட வந்துரு. இந்தா, என்னோட விலாசம். என்னய வந்து பாரு. என்னால முடிஞ்சத உனக்குச்செய்யறேன். '

- 'எனக்கு என்னய்யா கஷ்டம்? எல்லாக்கஷ்டமும் அந்தப் பேதியில போறவனால வர்றது தான். '
- 'யாரும்மா?'
- 'அதான் அந்த பெரிய வாச்மேன் '
- 'யாரு மிலிட்டரிக்காரரா?'
- 'அந்த நாயி தான். மேத்தியூ தான்! '
- 'அந்தாளு ரொம்ப நல்லவராச்சேம்மா!'
- 'நீங்க ஒரு ஆளு தான் தம்பி அப்புடி சொல்றீங்க!?'

- 'ஏம்மா, அவன் உங்களுக்கு என்ன பண்ணினான்? '

- 'எங்க எல்லாரையும் வயசு வித்தியாசம் பார்க்காம ஒவ்வொரு ஆளா சீரழிச்சிட்டான் அந்தப்பாவி!'

- 'அடப்பாவமே! அந்த நாய் அவ்வளவு மோசமா ?'

- 'அதை விடக்கொடுமை, இது இன்னிக்கு வரை நடக்குது. நாங்க வேலைக்கு கொஞ்சம் முன்ன பின்ன வர்றது தான். இல்லேன்னு சொல்லல. ஆனா, இதை சொல்லிக்காட்டியே அவன் எங்கள ஒவ்வொருத்தரா பாழடிச்சுட்டான். '

- 'அடக்கொடுமையே!'

- 'பெரிய கொடுமை என்னன்னா, எங்கள ஒவ்வொருத்தரையும், ஒரு நாள் ராத்திரிக்கு அங்க பேரின்பதாஸ் பேக்கரில இருக்கற திண்ணைக்கு ராத்திரி பத்து மணி வாக்குல வரச்சொல்லி, அங்கயே எங்கள காத்திருக்கச் சொல்லுவான். அந்த நாயி ஒரு டார்ச் லைட்டை எடுத்துக்கிட்டு வடக்குல இருந்து நடந்து வந்து, நேரா பேக்கரிக்கு வந்துருவான். அங்க வெச்சு என்னைய அல்லது என்னோட கூட்டுக்காரங்கள கீழ சாச்சுருவான். '

- 'போடா பன்னி ! வர மாட்டேன்னு சொல்ல வேண்டியதுதானம்மா!'

- 'அப்படிச்செஞ்சா, எங்களப்பத்தி ஏதாவது எடக்கு மடக்கா முதலாளி கிட்டச் சொல்லிக்கொடுத்து, வேலையில இருந்து தூக்கிருவான். இதுக்கு முன்னாடி ஆவரைக்குளத்துப்பொம்பளைங்க சில பேரு இங்க வேலைக்கு வந்தாளுக. அவுக யாரும் இவன் புடிக்குள்ள வரல. உடனே, இவன், 'அவங்க வேலையே செய்யல. சும்மாத்தூங்கிட்டு, சம்பளம் வாங்கிட்டுப்போறாங்கன்னு' முதலாளி கிட்ட போட்டுக்கொடுத்து, அவுக அத்தனை பேரையும் ஒரே நாள்ல வேலைல இருந்து துரத்திட்டான் பாவி!'

- 'நீங்க இதப்போயி, முதலாளிகிட்ட சொல்லி நியாயம் கேட்க வேண்டியது தான?'

- 'எங்க கேட்க? முதலாளி , அந்த மேத்தியூ சொல்றத மட்டும் தான் நம்புவாரு. வேற யாரும் அவரு கிட்டப்போயி பேசக்கூட முடியாது. '

- 'என்ன கொடுமை தாயே !'

- 'எங்களுக்கோ, ரொம்ப வயசாகிப்போச்சு ராசா. எங்களுக்குச்சாப்பாடு போடுறாங்க. சம்பளம் தர்றாங்க. வேல செய்யறோம். நடுவுல இந்த வாச்மேன் நாயி, எங்கள தினசரி ஒரு ஆளுன்னு வேட்டையாடிக்கிட்டு இருக்கான். உன் வயசுல எனக்கு ஒரு பேரன் இருக்கான் ராசா!'

- 'நாங்கள்லாம் கிழவிங்கடா. எங்களப்போயி இப்படி நாசமாக்குறியேன்னு சொன்னோம். கிழவின்னா என்ன? எனக்கு தெனசரி இது தேவை. அது கிழவியா, குமரியான்னு எனக்கு அக்கறை இல்ல', அப்படின்னான்.

- 'இவன் நல்ல குடும்பத்துல இருந்து வந்திருக்க மாட்டான்மா!'

- 'என்ன, இதுல ஒண்ணு இருக்கு. நாங்க மாறி மாறி இந்த வாச்மேனுக்கு சேல தூக்கினா, அவன் நாங்க வேல செய்யறமா, செய்யலயான்னு பாக்க மாட்டான். மத்தியானம் முழுக்க அங்க பேரின்பதாஸ் பேக்கரி திண்ணைல போயித்தூங்கினாலும், அவன் கண்டுக்க மாட்டான். அவனுக்கு நாங்க வேலயே செய்யாட்டியும் கூட பரவாயில்ல. தினசரி, நாங்க ஒரு ஆள் அவன் கிட்டப் போயாகணும். '

ஒரு சமுத்திரம் முழுக்க உள்ள நீரெல்லாம் சோகமெனத்திரண்டு எழும்பி வந்து, ஒரேயடியாக அலை அலையாய்த்தொடர்ந்து என்னை அடித்து வீழ்த்திக்கொண்டிருந்தன. வாய் பேச முடியாமல், வள்ளியம்மாளின் கண்களில் இருந்து வழிந்து கொண்டிருந்த கண்ணீரைப்பார்த்து உறைந்து போய் நின்றிருந்தேன்.

பஸ்ஸில் என் ஊருக்குப்போகும் வழியில், துக்கம் என் நெஞ்சை அடைத்துக் கொண்டு, தொண்டை கனமாகி இருந்தது. பார்வையை ஜன்னலுக்கு வெளியே செலுத்தி, வயல் வெளிகளையும், வறண்ட சமவெளிகளையும் பார்த்துக்கொண்டே ஊருக்கு வந்து சேர்ந்தேன்.

மறுநாள் காலையில், தாமதமாகத்தான் கண் விழித்தேன். உடல் சுத்தம் செய்து கொண்டு, வீட்டுக்குள் வந்த போது, மனைவி ரோகிணி காபி கொண்டு வந்தாள்.

- 'வேலய விட்டாச்சு! அடுத்து என்ன பண்ணப்போறீங்க? அடுத்து என்ன வேலைக்குப்போறதா உத்தேசம்? ' என கேள்விகளை அடுக்கினாள்.
- 'நான் வேலைக்குப்போறது இருக்கட்டும் அதுக்கு எப்ப வேணும்னாலும் போயிக்கலாம். நான் முதல் காரியமா ஒரு லெட்டர் எழுதணும். '

என் படிப்பறையில், காகிதத்தில் பேனாவை வைத்தேன். எதிலிருந்து சொல்ல ஆரம்பிக்கலாம்? முதன் முதலாய், பாலிடெக்னிக்கின் மேற்குப்பகுதி ஹாஸ்டலில் இருந்த போது, பார்த்ததைச்சொல்லலாமா? அல்லது விலாவாரியாக எல்லாவற்றையும் பாலிடெக்னிக் உரிமையாளருக்கு விவரித்து விடலாமா? மனசு என்னென்னமோ எண்ணி, ஒரு திடமான முடிவுக்கு வர முடியாமல் திணறியது.

இறுதியில், இவ்வாறு தொடங்கினேன்.

'அன்புள்ள பாலிடெக்னிக் நிறுவனர் திரு. ஜான் தனராஜ் அவர்களுக்கு,

அநேக வணக்கங்கள். இப்பவும் தங்கள் பாலிடெக்னிக் மேலோங்கி, சிறந்து வளர்ந்து, விரிவடைய வேண்டும் என்றே விரும்புகிறேன். அதற்கு முகாந்திரமாக, சில களையெடுப்பு நடவடிக்கைகளைத் தாங்கள் செய்தே ஆக வேண்டும்… '

------------------------------

# 8. யோவ், முதலாளி உனக்கென்ன பென்சனா தரப்போறாரு ?

காலை எட்டு மணி பதினைந்து நிமிடங்களுக்கு, அந்தப்பள்ளிக்கூட வளாகத்தின் இரும்புக்கதவுகளின் வழியாக உள்ளே நுழையும் பள்ளி வண்டி, போகன் வில்லா அடர்ந்து வளர்ந்திருக்கும் பள்ளியின் சுற்றுச்சுவர் அருகே கிழக்குப்பார்க்கும்படியாக நிறுத்தப்பட்டதும், நான் உடனடியாக வண்டியை விட்டு வெளியேறி, சதுரக்கற்கள் பாவிய பள்ளியின் முன் வளாகத்தின் வெற்றுத்திடலில் நடந்து சென்று, பாரிஜாத மலர்கள் மலர்ந்திருக்கும் மரங்களைக்கடந்து சென்று, வெண்கலச்சிலையாய், உயிரற்று நின்று விட்ட பள்ளிக்கூடத்தின் ஆதி ஸ்தாபகரின் சிலையைக்கடந்து சென்று, ராஜஸ்தான் கற்கள் பதித்த படிக்கட்டுகளில் ஏறி, பணிப்பெண்களின் உழைப்பில், ஈரத்துணியால் மெழுகி, சுத்தம் செய்யப்பட்டு, புத்தம் புதிதாய்க்கண்ணாடி போல பளபளக்கும் தரையில் கால்களை மெதுவாகப்பதித்து, சுவரின் மூலையில் தொங்கும் தானியங்கி வருகைப்பதிவேட்டு இயந்திரத்தில் என் இடது கைப்பெருவிரலை அழுத்துவதற்கு முன்பாகவே, அங்கு தன் விரலை அழுத்தியிருப்பான் பீட்டி ராஜதுரை.

பிறகு, ஈரமான தரையில் மீண்டும் கவனமாக நடந்து, முதல்வரின் அறைக்குள் நுழைந்து, அங்கும் வருகைப்பதிவேட்டில் எனது சுருக்கொப்பத்தை பதிவு செய்வதற்குப்பக்கங்களைப் புரட்டுகிற போதும், அதில் ராஜதுரையின் சுருக்கொப்பமே முதலாவதாகப்பதியப்பட்டிருக்கும். தன் சதுரக்கண்ணாடி வழியாக என்னைப்பார்த்து ஒரு முறை முறைத்தபடி, வருகைப்பதிவேட்டை என் பக்கமாய் நகர்த்துவான். அவனது முறைப்பு எனக்குப்பழக்கமாகி விட்ட ஒன்று தான்.

ஒரு தடவை அந்த வருகைப்பதிவேட்டை அவன் என் பக்கமாய்த்தள்ளி, அதை நான் வாங்கிய போது, யதேச்சையாக அதன் விரிந்து கிடந்த பக்கங்களில் ஒன்று கிழிந்து விட்டது. முதல்வர் இம்மாகுலேட் ஜெனிவீவ் வந்து தன் இருக்கையில் அமர்ந்ததும், உடனடியாக இந்தப்பதிவேட்டின் பக்கம் கிழிந்து போன விஷயத்தைப்போய்ச்சொல்லி விட்டான் ராஜதுரை. முதல்வர் இம்மாகுலேட் ஜெனிவீவ் என்னைக்கூப்பிட்டு விட்டதும், எனக்கு விஷயம் புரிந்து விட்டது, உடன் வேலை செய்யும் சக ஆசிரியரைப் பற்றிப்போட்டுக்கொடுத்த பிரகஸ்பதி இந்த பீட்டி மாஸ்டர் ராஜதுரை

தான் என்று. உடனடியாக முதல்வர் ஜெனிவீவிடம், அந்த வருகைப்பதிவேட்டின் காகிதங்கள் யாவும் மெல்லியதாக இருந்ததால், அவற்றைப்புரட்டும் போது, அவற்றில் ஒரு காகிதம் கிழிந்து போய் விட்டது என்பதை நானே எடுத்துச்சொல்லி, மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன்.

முதல்வர் ஜெனிவீவ் அம்மையார் தனது டிரேட் மார்க் முறைப்பு ஒன்றை என் பக்கமாய்ப்பார்த்தார். அந்த டிரேட் மார்க் முறைப்பில், ராஜதுரையின் முகத்தில் அவ்வப்போது தெரியும் அதே முறைப்பு தென்படுவதையும், இருவருக்கும் இடையே அநேக குணாம்ச ஒற்றுமைகள் இருப்பதையும் கண்டு கொண்டேன்.

பள்ளியின் காலை வழிபாட்டிற்கான ஆயத்தங்கள் செய்ய வேண்டியது எல்லாம் என்னுடைய பொறுப்பு. மைக் செட் பொருத்தும் வேலை ராஜதுரையினுடையது.

மாணவர் வழிபாட்டுக்கூட்டத்தில் ஆங்கிலத்தில் செய்ய வேண்டிய ஓர் அறிவிப்பில் இருக்கும் மூன்று எளிய ஆங்கில வாக்கியங்களைக்கூட அந்த முதல்வர் ஜெனிவீவ் அம்மையாரால் எழுத முடியாது. 'எழுதத்தெரியாது' என்பதைத்தான் எழுத முடியாது என்று மாற்றிச்சொல்லுகிறேன்.

எம்.சி.ஏ.வும், பி.எட்.-ம் என்ற அதி விநோதமான வெளக்கெண்ணெய், வெண்டைக்காய்ப் பொரியல் போன்ற பொருத்தமற்ற பட்டங்களை வைத்துக் கொண்டு, அந்தத்தனியார் கத்தோலிக்க மெட்ரிக்குலேஷன் பள்ளியில் எப்படியோ முதல்வராகி விட்டார். தான் வேலைக்குச்சேர்ந்த புதிதில், பள்ளியில் நிர்வாகம் சம்பந்தப்பட்ட அனைத்துப்பதிவேடுகளும் ஆங்கிலத்திலேயே பராமரிக்கப்பட்டு வருவதையும், அதில் உள்ள வாசகங்கள் தனக்கு கிரேக்க மொழி போலத் தென்படுவதையும் கண்ட ஜெனிவீவ் அம்மையார், ஒரு பள்ளிக்கூடத்தை நிர்வாகம் செய்ய ஆங்கில அறிவு தேவையில்லை என்று தெரிந்து கொண்டார். அங்கு வேலை செய்யும் கூலி அபலை ஜாதியான தனியார் பள்ளி ஆசிரியர்கள் என்னும் தனித்துவம் வாய்ந்த கொத்தடிமை வர்க்கம் ஒன்றை எப்படிக்கட்டி மேய்ப்பது என்றும் ஆழ்ந்து யோசித்துப்பார்த்த ஜெனிவீவ் அம்மையார் அவர்கள் கண்டறிந்த புதிய நிர்வாக உத்தி தான் 'ஒற்று உளவறிதல்' என்பதாகும். அதற்கு நியமிக்கப்பட்டவன் தான் பீட்டி ராஜதுரை. எந்த ஆசிரியர் என்ன செய்து கொண்டிருக்கிறார் என்பதை ஜேம்ஸ் பாண்டை விட மிக விரைவாகத்துப்பறிந்து, உடனடியாக வந்து ஜெனிவீவ் அம்மையாரிடம் பத்த வைத்து விட்டுப்போய் விடுவான் ராஜதுரை.

உடனே சம்பந்தப்பட்ட ஆசிரியர் வரவழைக்கப்பட்டு, முதல்வரின் அறையில் அவருக்கு அர்ச்சனை நடைபெறும்.

ஜெனிவீவின் வசவு மொழிகள், கிட்டத்தட்ட ஒரு கராத்தே சண்டைப்பயிற்சியை நினைவூட்டும் விதத்தில் இருந்ததால், ஆசிரியர்களை அவர் ஒருமையில் ஏசுவதை 'கராத்தே' என்று நான் பெயரிட்டிருந்தேன்.

இரண்டு சதுரங்களை ஒன்று சேர்த்து வைத்தது போல், அந்தப்பள்ளிக்கட்டிடம் இருந்தது. இந்த இரண்டு சதுரங்களுக்கும் இடையில் நடைபாதை உண்டு. ஒரு நீண்ட செவ்வகம் போன்ற கட்டிடத்தின் வராந்தாவில் காலை ஒன்பது மணி முதல் சளைக்காமல் நடந்து, ஆசிரியர்களை வேவு பார்த்துக்கொண்டிருப்பான். பீட்டி ராஜதுரை. வகுப்பறையின் ஜன்னல் கண்ணாடி வழியே உள்ள என்ன நடக்கிறது என்பதை உற்றுப்பார்ப்பான். பிறகு, ஏதாவது அவனுக்கு உறுத்தலாகத்தென்பட்டால் உடடினயாகப்போய் முதல்வரிடம் பற்ற வைப்பான். இதுவே அவனது தொழில். உடற்கல்வி ஆசிரியர் என்பது பெயரளவுக்குத்தான்.

காலை வழிபாடு முடிந்ததும், ஒன்பது மணிக்கு வகுப்புகள் துவங்கியதும், வகுப்பறைகளின் கண்ணாடிக்கதவுகள் சாத்திக்கொள்ளப்பட்டு, பாட போதனை துவங்கும். ஆங்கில வழியிலேயே பாடம் போதிப்பதைப்பெருமையாகக் கருதிக்கொள்ளும் அநேக ஆயிரக்கணக்கான மெட்ரிக்குலேஷன் பள்ளிகள் இருக்கும் இந்தப்பரந்த தமிழ் கூறும் நல்லுலகத்தில் உள்ள ஒரு பள்ளி தான் எனது ஆங்கிலப்பள்ளி.

மாணவர்கள் தமிழில் பேசினால் கண்டிப்பாக தண்டனை உண்டு. நான்காம் வகுப்பில் உள்ள லூமேன் தமிழில் பேசியதற்காக கணித ஆசிரியை நித்யா அவனை எச்சரித்து, மன்னித்து விட்டார். ஆனால், லூமேன் பேசிய தமிழ் வார்த்தை அந்த வழியாகப்போன பீட்டி ராஜதுரையின் காதிலா விழ வேண்டும்? உடனடியாகப்போய், முதல்வர் ஜெனிவீவிடம் பற்ற வைத்து விட்டான்.

லூமேனைத்தன் அறைக்கு வரச்சொன்ன ஜெனிவீவ், எந்த அகராதியிலும் இல்லாத வார்த்தைகளைக்கொண்டு அவனைத்திட்டித்தீர்த்ததோடு, தன் அறையிலேயே அரை மணி நேரம் முழங்கால் போடவும் வைத்து விட்டார். தமிழில், வகுப்பறையில் பேசிய லூமேனைத்தண்டிக்காமல் விட்டதற்காக நித்யாவிற்கும் தனியாக வசவு விழுந்தது.

ராஜதுரைக்கு வீட்டு நாய்களை வளர்ப்பது பிடிக்கும். நாய்களுடன் பழகிப்பழகி அவனும் ஆசிரியர்களை மோப்பம் பிடிப்பதையே தொழிலாகக்கொண்டிருந்தான்.

பள்ளியில், பிற்பகலில், அவனுக்கு உடற்பயிற்சி வகுப்புகள் இருக்கும். காலையில் யோகாசனம் கறறுத்தரும் ஆசிரியர் வள்ளியூர் பூவேந்தன் வெகு நேர்த்தியாக யோக வழிபாடு கற்றுத்தருவார். அவர் யோகம் சொல்லித்தரும் போது, வகுப்பு மாணவிகளையே சுற்றிச்சுற்றி வருவான் ராஜதுரை. பூவேந்தன் வகுப்பில் என்ன செய்கிறார் என்று தன் சதுரக்கண்ணாடி வழியே உளவு பார்ப்பான் ராஜதுரை.

பன்னிரண்டு மணிக்கு, மதிய உணவு இடைவேளைக்கான மணி ஒலிக்கும். சாப்பாட்டு அறையில் உணவு பரிமாறும் போது, 'ஏய், ஏய்!, ஏய்!, என்று எல்லா மாணவர்களையும் ஆடு, மாடு மேய்ப்பது போல் விரட்டுவதும் ராஜதுரையின் வேலை தான்.

- ஈட் ஃபாஸ்ட், ஈட் ஃபாஸ்ட். ஐ வில் கில் யூ' என்று ஏழு வயது மாணவ, மாணவிகளுக்கு மிரட்டல் விடுத்தபடி உணவுக்கூடத்தைச்சுற்றி சுற்றி வருவான்.

என்றைக்காவது முதல்வர் ஜெனிவீவ் அம்மையார் விடுமுறை எடுத்து விட்டால், ராஜதுரையின் பாடு கொண்டாட்டம் தான். அன்று ஒரு நாள் முழுக்க ராஜதுரை 'ஒரு நாள் முதல்வராகவே' வலம் வருவான்.

பெண்களிடம் ராஜதுரைக்கு எப்போதும் ரொம்ப கரிசனம் உண்டு. அதுவும் கல்யாணமாகாத கன்னிப்பெண் ஆசிரியர்கள் என்றால், அவனது உள்ளம் நெருப்பில் வெண்ணை உருகுவது போல உருகி விடும். 'உங்களுக்கு என்ன வேணும்னு மட்டும் சொல்லுங்க மேடம். எடுத்துட்டு வந்து தர வேண்டியது என் பொறுப்பு!' என்பான். அந்த ஆசிரியை, ஏதாவது பாடம் எழுதுவதற்காக ஒரு பேனாவைத்தேடிக்கொண்டிருப்பார். உடனே, ராஜதுரை தலைவனுக்கு சேவகம் செய்யும் கட்சித்தொண்டன் போல அந்தப்பெண் ஆசிரியருக்கு பணிவிடை செய்வான்.

இப்படித்தான், ஒன்று, இரண்டாம் வகுப்புகளின் ஆசிரியை பூதப்பாண்டி வரலெட்சுமியை, தனது ரொட்டிக்கு வெண்ணை தடவும் சாமர்த்தியமான பேச்சால், எப்படியோ வீழ்த்தி விட்டான். கல்யாணமாகாமல், புத்தம் புதுசாய், நல்ல எலுமிச்சம்பழ நிறத்தில், பளபளவென இருக்கும் வரலெட்சுமி, இந்தக் கண்ணாடி போட்ட

எட்டப்பனிடம் எப்படி மாட்டிக்கொண்டாளோ? அவள் குடியிருக்கும் பூதப்பாண்டி கிராமத்தில் இருக்கும் சாஸ்தா கோவிலுக்கு வாரம் இரண்டு தடவையாவது சாமி கும்பிடுவது போலப்போய், வரலெட்சுமியையும் அங்கே வரச்சொல்லி விட்டு, அந்த கோவில் பிரகாரத்திலேயே அமர்ந்து, அவன் அவளுடன் ஏதேதோ பேசிக்கொண்டிருப்பதாகவும், பிறகு பொழுது சாய்ந்து இருண்டதும், இருவரும் தென்னந்தோப்புகளுக்குள் நுழைந்து விடுவதாகவும், அந்த பூதப்பாண்டி கிராமத்துக்காரர்கள், அரசல்புரசலாகப் பேசிக்கொண்டார்கள்.

தன் பள்ளி நிர்வாகத்தில், தனக்கு ஒற்றன் வேலை செய்ய, நல்ல எடுபிடியாக ஒரு வாட்ட சாட்டமான ஆள் வாய்த்தது பற்றிப்பெரிதும் மகிழ்ந்து போன மாண்புமிகு பள்ளி முதல்வர் இம்மாகுலேட் அம்மையார் அவர்கள், தான் ஒரு இளம் விதவை என்ற நிலையில், தன்னிடம் இப்படி அடிமை ஊழியம் செய்யும் மிகுந்த விசுவாசமுள்ள ஆளாக இந்த பீட்டி இருக்கிறானே என்று வெயில் காலத்து பால் ஐஸ்கிரீம் கட்டி போல மனம் உருகி, வாரந்தோறும், ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும், தனது பாளையங்கோட்டை வீட்டிற்குத்தன்னுடன் வந்து தங்கியிருக்குமாறு பீட்டி ராஜதுரைக்கு அனுமதி தந்தார்.

உடற்கல்வி ஆசிரியரான பீட்டி ராஜதுரைக்கு 'உடல்' கல்வியும் நன்கு தெரிந்திருந்ததால், அது ஜாடிக்கேத்த மூடி போல பொருத்தமான பொருத்தமாகிப்போனது.

கிட்டத்தட்ட எல்லா ஆசிரியர்களுக்கும் அவன் பொது எதிரி என ஆகி விட்டான். மற்ற ஆசிரியக்கூலிகள், தற்செயல் விடுப்பு எடுப்பது என்பது கிட்டத்தட்ட சாத்தியமே இல்லாத ஒன்று தான். தற்செயல் விடுப்பு விண்ணப்பத்தைப்பூர்த்தி செய்து விட்டு, முதல்வர் இம்மாகுலேட் அம்மையாரின் முன்பாக அதை நீட்டும் போது, சிங்கத்தின் முன்னே நிற்கும் சிறு முயலின் நிலை போலத்தான் இருக்கும்.

தன் முன்னே நிற்கும் ஆசிரியரைப்பார்த்தவுடன், எதிர்க்கட்சித்தலைவரைக் கண்ட ஆளுங்கட்சித்தலைவரைப்போல, முதல்வர் இம்மாகுலேட் ஜெனிவீவ் அவர்கள் தன் முகத்தில் கடும்

கோபத்தைக்காட்டுவார். உண்மையில், அதன் பின், விடுப்பு விண்ணப்பத்துடன் நிற்கும் ஆசிரியரிடம் முதல்வரின் கோபப் பேச்சுக்களும், பாவனைகளும், ஒரு தேர்ந்த நாடக நடிகரின் பாவனை போலவே வெளிப்படும்.

உண்மையில், இராமாயணத்தில் வரும், சூர்ப்பனகை, தாடகை, திரிசடை, இலங்காபட்டணத்து இலங்கினி போன்ற சகல அரக்கிகளின் ஒரே உருவமாக அப்போது காட்சி தருவார், இம்மாகுலேட் அம்மையார். அவரது கோபக்கனலைத்தாங்கிக்கொள்ள முடியாமல், ஆறு மாதத்தில், அல்லது ஒரே வருடத்தில் வேலையை ராஜிநாமா செய்து விட்டு, ஆசிரியர்கள் ஓடி விடுவார்கள். வசதி குறைவாக, தரித்திரத்தில் உழலும் ஆசிரியர்களோ, எந்தக் கஷ்டம் வந்தால் தான் என்ன, சுயமரியாதைக்கொள்கைகளையெல்லாம் ஒரு பெரிய கோணிச்சாக்குக்குள் போட்டு மூட்டை கட்டி வைத்து விட்டு, எதையும் தாங்கும் இதயம் எமக்குண்டு என இருப்பார்கள். இப்படி பிறருக்கெல்லாம் கிடைக்காத தற்செயல் விடுப்பு என்னும் கொம்புத்தேன், பீட்டி ராஜதுரைக்கு மட்டும் உடனே கிடைத்து விடும். அதுவும் விண்ணப்பம் எதுவும் எழுதித்தராமலேயே திருநெல்வேலியில், பேட்டையில் உள்ள தன் வீட்டிலேயே இருந்து கொண்டு, முதல்வர் இம்மாகுலேட்டுக்கு ஒரு போன் போட்டுத்தகவல் சொன்னால் போதும். அவனுக்கு மட்டும் விடுப்பு என்பது விருப்பப்பட்டபோதெல்லாம்.

மாதம் இரு தடவை மறக்காமல் விடுப்பு போட்டு விட்டு, விண்ணப்பத்தில் அதற்கான காரணத்தை எழுதும் போது, 'சொந்த விஷயமாக' என்று மட்டும் தான் எழுதுவான் பீட்டி. பள்ளியில் சகல ஆசிரியர்களுக்கும் அவன் ஒருவனே முழு முதல் எதிரி. தங்கள் வேலையில் எந்நேரமும் சீட்டு கிழிக்கப்படும் என்று பயந்து பீட்டிக்கு எதிராக எந்த ஆசிரியரும் வாயைத்திறக்கவே இல்லை.

இரண்டாம் பருவத்தில், மற்ற எல்லாரையும் விட முன்னதாகவே என் பாடங்களை நடத்தி முடித்து விட்டு, திருப்புதல் வேலையைச்செய்து கொண்டிருந்தேன். கணிதம் எடுக்கும் ஸ்டெல்லா மேரிக்குக்கொஞ்சம் அதிகமான வகுப்பு நேரம் தேவைப்பட்டதால், என்னிடம் உள்ள வகுப்புகளைத்தனக்கு மாற்றித்தருமாறு கேட்டுக் கொண்டார். என்னைப் பொறுத்தவரையில், என் பாடத்தையே நூறு தடவை திருப்பித்திருப்பி மாணவர்களுக்குச்சொல்லித்தந்தாலும், எனக்கு என் போதனையில்

திருப்தி ஏற்படாது. அதனால், எனக்குரிய வகுப்புகளை அவருக்கு மாற்றித்தர முடியாது என்று திட்டவட்டமாகச்சொல்லி விட்டேன். இதனால் கோபமடைந்த ஸ்டெல்லா, பில்லா போலவே மாறி விட்டார்.

ஒரு நாள் பிற்பகலில், நான் வகுப்பில் கட்டுரைப்பயிற்சி நடத்திக் கொண்டிருந்தபோது, கதவிற்கு அப்பால் ஸ்டெல்லா நின்று கொண்டிருப்பது கண்ணாடி வழியே தெரிந்தது. கதவைத்திறந்து கொண்டு வெளியே வந்து வராந்தாவில் இருந்தவரிடம் கேட்டேன்.

- 'என்ன வேணும் மேடம்? '
- 'உங்க க்ளாஸ் தான் வேண்டும். நீங்க எல்லாப்பாடத்தையும் விரட்டி முடிச்சிட்டீங்க. நான் இன்னும் ரெண்டு யூனிட் முடிக்கவே இல்லை!. நீங்க தான் உங்க பீரியட்ல எனக்கு அஞ்சு பீரியடாவது தரணும். '
- 'அதெப்படிம்மா. நான் பாடங்களை முடிச்சிட்டேங்கறது உண்மை. ஆனா, என் பிள்ளைகளுக்கு நூறு தடவை சொல்லிக்கொடுத்தாலும், அதுக மனசுல வாங்கிக்க மாட்டேங்குதுக. தேர்ட் பெர்ஸன் ஸிங்குலர் ரூல் சொல்லித்தர்றதுக்குள்ள நான் படுற பாடு எனக்குத்தான் தெரியும் '.
- 'சார், நீங்க எப்படியாவது, எனக்கு உங்க பீரியட்டை ஒதுக்கற வழியைப் பாருங்க. '
- 'மேடம், எதுக்கும் நீங்க பிரின்சிபால் கிட்ட கேட்டுக்கங்க!'
- 'பிரின்சிபால்' என்ற வார்த்தையை நான் உச்சரித்ததும், கருப்புப்பணம் வைத்திருப்பவன் அமலாக்கப்பிரிவு அதிகாரியைக்கண்டது போல, ஸ்டெல்லா திடுக்கிட்டு என்ன பேசுவது என்று தெரியாமல் அதிர்ந்து நின்றார் '.
- 'என்ன சார், எதுக்கெடுத்தாலும் மேடத்துக்கிட்ட போய் நான் நிக்க முடியுமா? நீங்க ஏன் சார் இப்படி இருக்கீங்க? ஸ்டா.ஃப் கிட்ட ஒற்றுமை இல்லன்னா, எப்படி உருப்படும் ? நீங்க கொஞ்சம் யோசிங்க!'

சாதாரணமாகத்தன் பேச்சை ஆரம்பித்த ஸ்டெல்லா, போகப்போக சூடாகிக் கொண்டே போனார். பொறுமையை இழந்த நான், 'நீங்க எதுன்னாலும் மேடத்துக்கிட்ட கேட்டுக்கங்க!' என்னைய தொல்லை பண்ணாதீங்க!' என்று திட்டவட்டமாகச்சொல்லி விட்டு வகுப்பறைக்குள் நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டேன்.

எங்களுடைய உரையாடலைக்கேட்டுக்கொண்டிருந்த இருபத்தி ஒன்றாம் நூற்றாண்டின் இணையற்ற ஜேம்ஸ் பாண்ட், பீட்டி, உடனே போய், முதல்வர் இம்மாகுலேட்டிடம் பற்ற வைத்து விட்டான்.

எங்களுக்குள் நடந்த உரையாடலை, ஒரு சண்டை என எடுத்துக்கொண்ட முதல்வர் சூர்ப்பனகை அம்மா அவர்கள், கோபமடைந்து , எங்கள் இருவரையும் தன் அறைக்குக்கூப்பிட்டு, எங்களை அருகருகே நிற்க வைத்து, இயேசு ஸ்வாமி சாத்தானை சபித்தது போல, வார்த்தைகளால் அர்ச்சனை செய்து விட்டார். நான் புருஷ லட்சணமாய் அழுகையைக்கட்டுப்படுத்திக்கொண்டேன். ஸ்டெல்லா மேரி, பாவம். உடனே நிலை குலைந்து போய், அவரது இரண்டு கண்களிலிருந்தும், குற்றாலத்தின் செண்பகாதேவி அருவி கொட்டுவதை அன்று தான் முதன் முதலில் பார்த்தேன். அவரது முகம் குங்குமச்சிவப்பாகச்சிவந்து போனது. ஸ்டெல்லா மேரி, துணை முதல்வர் என்ற அந்தஸ்தில் இருப்பவர். அவருக்கே இந்த கதி என்று நினைத்துப்பார்த்த போது, எனக்கு பீட்டி ராஜதுரை மேல இருந்த வெறுப்பு, நூறு மடங்கு அதிகமானது. என்ன செய்ய ? மத்த தொழில்ல ஏதாவது போட்டி, சண்டைன்னு இருந்தா, நம்ம தமிழர்களோட மரபுப்படி, முஷ்டி மடக்கி, குஸ்தி போடுவாங்க. ஆனா, ஆசிரியத்தொழில்ல அப்படி குஸ்தி போட முடியாது. அந்த வேலையே வேணாம்னு வெளியேறிப்போயிடணும்னு நெனச்சேன். ஆனா, என்னைய நம்பி, என் பிள்ளைங்க படிச்சுக்கிட்டு இருந்தாங்க. அதனால, ஒரு கல்வியாண்டு நடுவுல அவுங்கள விட்டுட்டு விலகிப்போறது, அவுங்களை கை வுடுற மாதிரி. என் தொழில்ல எனக்கு மனச்சாட்சி உண்டு.

வருட இறுதித்தேர்வு நெருங்கிக்கிட்டிருக்கற மார்ச் மாசம். எல்லா ஆசிரியர்களும் வினாத்தாள் தயாரிக்கறதுல தீவிரமா இருந்தாங்க. ஒரு சனி, ஞாயிறுல சேர்ந்து பள்ளிக்கூடத்துக்கு லீவு விட்டதும், நான் என் சொந்த ஊருக்குப்போயிட்டு, திங்கள் கிழமை பள்ளிக்கூடத்துக்குப்போனேன்.

காலை வழிபாடு தொடங்கற போது, மைக் செட் எடுத்துப்பொருத்தற எடுபிடி வேலை செய்யற ஆள் ஒண்ணு குறையுதேன்னு பாத்தேன். பீட்டி ராஜதுரை அங்கு இல்ல. விசாரிச்சதுல, அவன் தற்செயல் விடுப்புல இருக்கறதா சொன்னார்கள்.

'சரி, பய புள்ள சொந்த வேலையா எங்கயாவது போயிருப்பான் ' என மனசுக்குள் எண்ணிக்கொண்டேன். அன்று ஒரு நாள் தான், அங்கு பள்ளிக்கூடத்தில் ரொம்ப நிம்மதியாக வேலை பார்த்தேன். நான் மட்டுமில்ல. என் சக ஆசிரியர்கள் அனைவரும். அன்றிரவு நான் நிம்மதியாய்த் தூங்கினேன்.

மறு நாளும், ராஜதுரை பள்ளிக்கு வரவில்லை. என் சந்தோஷம் இரட்டிப்பானது. காலை வழிபாட்டில், என்னருகே நின்றிருந்த தமிழாசிரியை கார்த்திகாவிடம், 'இந்தாளு ராஜதுரை ஒரு வாரத்துக்கு வராம இருந்தா, எல்லா டீச்சர்ஸும் ரொம்ப நிம்மதியா இருப்பாங்கல்ல?' என்றேன்.

கார்த்திகா வாய் விட்டுச்சிரித்தார். என் சந்தோஷம் தொடர்ந்தது. அந்த ஒரு வாரம் முழுக்க ராஜதுரை பள்ளிக்கூடத்துக்கு வரவே இல்லை. பள்ளிக்கூடத்துல எல்லாரும் ரொம்ப நிம்மதியா இருந்தோம். ஒருத்தரைப்பற்றியும் ஒரு தகவலும் வெளிய போகல. முதல்வர் இம்மாகுலேட் ஜெனிவீவ் ரொம்பவும் வருத்தப்பட்டு, மனம் வாடிப்போனார். ஒரு வார காலமாய், என் சக ஆசிரியர்கள் முகத்தில் ஒரு வித புதிய களை தென்பட்டது. அது மகிழ்ச்சியினாலும், நிம்மதியினாலும் உண்டான புதிய பொலிவு எனக்கண்டு கொண்டேன்.

அன்று வெள்ளிக்கிழமை வார இறுதியில், சொந்த ஊர் திரும்பத்தயாராகிக் கொண்டிருந்தேன். பள்ளி வாகனத்தில் ஓட்டுனர்கள் பேசிக்கொண்டிருந்தனர்.

'...ஆமா சார். படுத்த படுக்கையா இருக்காராம். எழுந்திரிக்க முடியலயாம். ஏதோ உள்ளூர ஏதாவது கோளாறா இருக்கும்... அவரு இருந்த இடத்துல இனிமே, வேற ஒரு சரியான ஆளைப்பிடிக்கறது ரொம்பக்கஷ்டம்... இப்பல்லாம் வாத்தியார் வேலைக்கு நல்ல ஆள் கிடைக்கறது ரொம்பக்கஷ்டம் சார்... '

எனக்கு அவர்கள் யாரைப்பத்தி பேசிக்கொண்டிருக்கிறார்கள் என்பது புரிந்து விட்டது. மெதுவாக நெருங்கி, பள்ளி டிரைவர் நடராஜன் அண்ணாச்சியிடம் பேச்சுக்கொடுத்தேன். அவர் என்னிடம் ராஜதுரை, திருநெல்வேலியில் தன் சொந்த வீட்டில் உடல் நலமில்லாமல்

இருப்பதைச்சொன்னார். நடராஜன் அண்ணாச்சியிடம் ராஜதுரையின் விலாசத்தைப்பெற்றுக்கொண்டேன்.

என் சொந்த ஊருக்குப்போகும் பயணத்தை ரத்து செய்து விட்டு, நேராக திருநெல்வேலிக்குப்பஸ் ஏறினேன். அங்கு பழைய பஸ் ஸ்டாண்ட் போய், அங்கிருந்து ஒரு ஆட்டோ பிடித்து, பேட்டைக்குப்போனேன். என் ஆட்டோ சந்து பொந்து, இண்டு இடுக்குகளிலெல்லாம் நுழைந்து வெளியே வந்தது. கடைசியில், ஏதோ ஒரு சின்ன எலிப்பொந்து வீட்டில் தான் அவன் குடியிருந்தான்.

வீட்டிற்குள் நுழைந்தேன். கட்டிலோடு கட்டிலாய், அட்டை போல ஒட்டிக் கொண்டு, அடித்து, துவைத்தது போலக்கிடந்தான் பீட்டி. என்னைப் பார்த்ததும், கட்டிலில் இருந்து எழுந்திருக்க முயன்றான். கைகளாலேயே அவனை அப்படியே இருக்கும்படி சொல்லிவிட்டு, என் கையில் இருந்த ஹார்லிக்ஸ் , சாத்துக்குடிப்பழங்களை அவனது அம்மாவிடம் கொடுத்தேன்.

ராஜதுரைக்கு அப்பா இல்லை. வீட்டில் அம்மா பீடி சுற்றுகிறாள். ஒரு சிறிய தம்பி, தங்கை என மொத்தக்குடும்பமும் பீட்டி ராஜதுரையின் தோள்களில் ஏறி நிற்கிறது. அம்மா பீடி சுற்றிச்சுற்றி, டிபி நோய் வந்து சுருண்டு கிடக்கிறாள். வீட்டை சுற்றிக்கடன் வேறு.

ஒரு வாரமாய் ஒருவன் கட்டிலில் படுத்த படுக்கையாய்க்கிடக்கிறான். எனது பள்ளிக்கூடத்து முதலாளி, ராஜதுரையைப்பார்க்க வரவில்லை. முதல்வர் இம்மாகுலேட் வரவில்லை. வேறு சக ஆசிரியர்கள் ஒருவரும் வரவில்லை.

ராஜதுரையின் அம்மா எனக்குக்காபி போட்டுத்தந்தாள். மெதுவாக என்ன விஷயம்னு விசாரிச்சேன்.

பேட்டையிலிருந்து பஸ் மாறி, திருநெல்வேலி வந்து, அங்கிருந்து பள்ளி வண்டியில் கிழவன்குளம் கிராமத்தில் இருக்கும் பள்ளிக்கூடத்துக்கு அவன் தினசரி வர வேண்டும். வீட்டிலிருந்து பள்ளிக்கூடம் மொத்தம் அறுபத்தைந்து கிலோ மீட்டர். தினசரி ஒரு தடவை பள்ளிக்கூடத்துக்குப்போய் திரும்ப நூத்தி முப்பது கிலோ மீட்டர் வண்டியில் போய் வரணும். மூணு வருசம் திருநெல்வேலி

பேட்டையிலிருந்து, கிழவன்குளத்துல இருக்கற மெட்ரிக்குலேஷன் பள்ளிக்கூடத்துக்கு நாள் தவறாமப்போயி வந்ததுல, முதுகு எலும்பு தண்டு வடத்துல, ரெண்டு எலும்பு பிசகிருச்சாம். டாக்டர் கிட்ட மாசத்துக்கு ரெண்டு தடவை போயிருக்கான். அந்த டாக்டருங்க, என்ன விஷயம்னு சொல்லாம, வலி போக்குற ஊசி மருந்து ஒண்ணைத்தொடர்ந்து போட்டுக்கிட்டு வந்திருக்காங்க. அதனால, முதுகுல இருக்கற எலும்புகள் ஏடாகூடமா இடம் மாறிப்போய், நேரா நிக்கக்கூட முடியலயாம். நேரா நடந்து போறதுக்குள்ள உயிர் போற வேதனையாம். தரையில ரெண்டு காலையும் ஊனி நிக்க முடியாதாம்.

யாராவது தோள்பட்டைல அவனைத்தாங்கிக்கிட்டாத்தான் நடக்க முடியும். முதுகெலும்புல ஆபரேஷன் பண்ணினா, எலும்பு டிஸ்க் சரியாகுமாம். அதுக்கு நாலு லட்சம் செலவாகுமாம். ஆனா, அதுக்குப்பிறகு, நடமாட முடியாதாம். படுக்கையில ஒரு தலகாணியை வெச்சுக்கிட்டு, அதுல சாஞ்சுக்கணுமாம். எங்கயும் எழுந்திரிச்சு நடமாட முடியாதாம். இவனுக்கு இப்படி தீராத வியாதி இருக்கறதால, சொந்தத்துல பொண்ணு தர வந்தவங்க கூட, விஷயத்தை கேள்விப்பட்டுட்டு மாட்டேன்னு சொல்லிட்டாங்களாம்.

ராஜதுரையின் அம்மா, சேலைத்தலைப்பில் தன் மூக்கைச்சிந்தி, தன் வேதனையை வெளியேற்றினாள்.

நான் நிமிர்ந்து ராஜதுரையைப்பார்க்க,அவன் முகம், சலனமற்று, பேயறைஞ்சது போல இருந்தது. சவக்களை என்பதன் துவக்க அறிகுறி, மெல்லிய ஒரு புள்ளி போல, அவனது முகத்தில், கண்களில் உருவாகத்தொடங்கி விட்டதை என் உள்ளுணர்வு எனக்குச்சொல்லியது. நான் அவனது கண்களையே நிர்ச்சலனமாகப்பார்த்துக்கொண்டிருந்தேன்.

அறையில், ராஜதுரையின் தலைக்கு மேலே இருந்த கூரை ஓடுகளின் நடுவே பதிக்கப்பட்டிருந்த கண்ணாடி வழியே, சாயங்கால வெயில், கட்டிலின் மேல் விழுந்து, அறையெங்கும் விரவிக்கிடந்தது.

ராஜதுரையின் அம்மா, ஏதோ வேலையாக சமையலறைக்குள் போனாள். நான் குனிந்து, என் சட்டைப்பையிலிருந்து நாலாயிரம் பணம்

எடுத்து, அவனது கைகளில் வைத்து அழுத்தினேன். பிறகு, குனிந்து, அவன் காதுகளில் சொன்னேன்.

'உடம்பைப்பாத்துக்க. உன்னைய நம்பி உன் குடும்பமே இருக்கு. நீ எவ்வளவோ பாடுபட்ட! நம்ம பள்ளிக்கூடத்து முதலாளிக்கு எவ்வளவோ விசுவாசமா வேல செஞ்ச. என்ன பிரயோசனம்? நாம எல்லாம் தனியார் பள்ளிக்கூடத்து வாத்தியாருங்க. அத்தக்குத்துக்கு கூலி வேல பாக்கறவங்க. நாளைக்கே நம்ம முதலாளி நெனச்சா, நம்மள சீட்டைக்கிழிச்சு, வீட்டுக்கு அனுப்பிரலாம். இது தான் நம்மள மாதிரி வாத்தியார்களோட நெலமை. நீ என்ன தான் ஸ்கூல் முதலாளிக்கு விசுவாசமா இருந்து என்ன புண்ணியம்?... அவன், அவனோட பள்ளிக்கூடத்துல இருந்து வர்ற லாபத்தை மட்டும் தான் பார்ப்பான். உன்னைய வந்து பார்த்தா, உன் வைத்தியச்செலவுக்கு ஏதாவது இனாமாத்தரணுமேன்னு அவன் நெனப்பான். என்ன பாடுபட்டு, வேல செஞ்சு என்ன ? ... யோவ், முதலாளி உனக்கென்ன பென்சனா தரப்போறாரு?'

ராஜதுரை என் பேச்சில் உறைந்து போயிருந்தான். அவனது கண்கள் அசைவற்று, உறைந்து, வீட்டுக்கூரையின் சிவப்பு நிற கொல்லம் ஓடுகள் மீது நிலை குத்தி நின்றது. கண்களின் ஓரத்தில் இருந்து கண்ணீர்த்துளிகள் புறப்பட்டன.

ராஜதுரையின் அம்மாவிடம் விடை பெற்றுக்கொண்டு, அவனது வீட்டு நிலை வாசலில் தலையைக்குனிந்தபடி வெளியேறிய போது, தற்செயலாய் தலையை நிமிர்த்தி மேலே பார்த்தேன்.

வானத்தில், கருமேகக்கூட்டங்கள் முழுதுமாய்த்திரண்டு கொண்டு, ஒரு பெருமழையைப்பொழிய வைக்க ஆயத்தமாய் இருப்பது என் பார்வையில் தெரிந்தது.

-----------------------------

**ஆசிரியரின் இதர நூல்கள்**

1. **கேன்டர்பரி கதைகள் ஜெ.ஃ.ப்ரி சாஸர்** -(மொழிபெயர்ப்பு ) Rs.100/-
2. **தளிகை …….** ( சிறுகதைகள் ) --அச்சில் …
3. **இந்தோ – ஆங்கிலக் கவிஞர்கள்** -- (மொழிபெயர்ப்பு) --அச்சில் …
4. **பிரதம ஒற்றன் --- சரித்திர நாவல்** **--**அச்சில் …
5. **ரொமான்டிக் கவிதைகள் - --- (மொழி பெயர்ப்பு )--** அச்சில் …
6. **Srivilliputtur :Ruminations of a Rambler- A collection of Essays --** Rs. 100/-
7. ***Another Winter Evening and Hot Tea Cups – Poems***
8. **புரோதலாமியன் & எபிதலாமியன் --எட்மண்ட் ஸ்பென்ஸர்** --- ( மொழி பெயர்ப்பு ) - அச்சில் …
9. **டி. எச். லாரன்ஸ் கவிதைகள்** -- (மொழிபெயர்ப்பு ) - அச்சில் …
10. **இலக்கிய நெறி -- ( பிளாட்டோ முதல் டி.எஸ். இலியட் வரை )** -- அச்சில் …
11. **எமிலி டிக்கின்சன் கவிதைகள்** -- (மொழிபெயர்ப்பு) - அச்சில் …
12. **பண்டைய அரேபியாவின் வரலாறு -- எட்வர்ட் கிப்பன்** ( மொழிபெயர்ப்பு ) - அச்சில் …
13. **16, 17 -**ம் **நூற்றாண்டுக் கவிதைகள் -- ( ஜான் டன், ஆண்ட்ரூ மார்வெல் , எட்மண்ட் ஸ்பென்ஸர் )** - (மொழிபெயர்ப்பு ) -அச்சில்
14. **முத்தா** ……… **( சிறுகதைகள் )** -- ரூபாய் 80-00
15. **டைனோசர் ஆயிரம் சூழ வலஞ்செய்து..(சிறுகதைகள்) -** ரூ.120-00
16. **‘சில சுகமான நாட்கள்…’ (தமிழ்த்திரைப்படம் ) (திரைக்கதை வடிவில் ஒரு நாவல்)** --- அச்சில் ……
17. **எலியாவின் கட்டுரைகள் -- சார்லஸ் லேம்ப்- ….**ரூ. 150-00
18. Scientific Perspectives in the Devotional Hymns of Nammazhwar ( A treatise on *Thirvaimozhi* ) ….. *on print*
19. Lectures on the Tinnevelly Mission by Rev. Dr Robert Caldwell Ed. S. Ramesh ….. *on print*
20. A Companion to the Holy Communion by Rev. Dr Robert Caldwell Ed. S. Ramesh ….. *on print*
21. Observations on the kudumi by Rev. Dr Robert Caldwell Ed. S. Ramesh .... on print
22. **On the Substitution of the Roman for the Indian Characters by Rev.Dr Robert Caldwell Ed.S.Ramesh..**
23. *Narkarunai tyanamalai* **by** Rev. Dr Robert Caldwell Ed. S. Ramesh ***.... on print***
23. *Sitrarignar kurippidam* **by** Rev. Dr Robert Caldwell Ed. S. Ramesh ***.... on print***
24. **நகைச்சுவைக்கதைகள்** -- ( மொழிபெயர்ப்பு )- …. **Rs. 150-00**